முதற் பதிப்பு — 8-8-1968

விலை ரூ. 2.75

## படையல்

பாரதத்தைப் பாதுகாக்க உயிரையும் திரணமாக மதித்துப் போராடிய, போராடுகிற, போராடவிருக்கிற-பாரதத்தின் கவசமான ராணுவ வீரர்களுக்கு!

நாகர்கோவில் அலெக்சந்திரா பிரஸில் அச்சிடப்பட்டது.

# முகவுரை

~ . ~~

**டாக்டர் மா. நடராஜன் அவர்கள் M. A. D. Litt. M. L. A.**

தமிழ் நாவல்கள் பல ஆங்கில நாவல்களின் மொழியாக்கமாகவோ, அல்லது அவற்றின் சாயல் கொண்டனவாகவோ பெரிதும் தோற்றமளிக்கின்றன. தமிழ் வரலாற்றைப் பின்னணியாகக்கொண்டு புனையப்பெற்ற சில நாவல்கள்கூட, சுரண்டிப் பார்த்தால் ஆங்கில நாவல்களுக்குப் பிறந்தனவாகத்தான் இருக்கின்றன. பல்லவ சோழ வரலாற்றுப் போர்களையும் கல்வெட்டுக் குறிப்புக்களையும் மேலே கலந்து பூசியிருப்பினும், அடித்தளத்தில் பாத்திரங்களின் சிந்தனைகளும், செயல்களும், கதை நிகழ்ச்சிகளும் வேற்று மொழியின் இரவல் வாடை வீசுவதாகவே இருக்கின்றன.

எனவே, இப்பொழுது நண்பர் **என். ஏ. வேலாயுதம்** சீனப் போரைப் பின்னணியாக வைத்துப் படைத்துள்ள **"கடமையும் காதலும்"** என்ற தமிழ் நாவல், ஆங்கிலச் சொல்லாகிய "நாவல்" என்பதன் முதற் பொருளுக்கு விளக்கமாக அமைந்திருப்பது மிகவும் பாராட்டுதற்குரியது.

ஆசிரியர் வேலாயுதம் நல்லதொரு இளம் எழுத்தாளர். நாட்டுப்பற்றும், நற்றமிழ்ப்பற்றும் ஒருங்கே கொண்டவர் தங்கு தடையின்றி ஒழுக்கெடுத்துப் பாயும் தமிழ் நடை வரையும் பேனா வன்மை கொண்டவர், ஆங்காங்கே திசைச்

உயர்ந்தது. மக்களுக்கு உகந்தது; நாட்டிற்கும் தேவை யானது!

நாவல்—அல்லது புதினம் எழுதவேண்டுமென்ற ஓரே ஆசையினால் மட்டும் உருவானதல்ல, "கடமையும் காதலும்". நாட்டுப்பற்றால்—மொழிப்பற்றால் என்னை அறியாமலேயே—தானாகவே என்னிடமிருந்து உருவானதே இந் நாவல்! அத்தகைய ஓர் நல்லுணர்வை எனக்கு அளித்த தமிழ்த்தாய்க்கு நான் மனமாற நன்றி செலுத்துகிறேன்.

தமிழ் இலக்கியங்கள் மட்டுமின்றி, பல்வேறு மொழியின் சிறந்த இலக்கியங்களையும் கற்றுத் தேர்ந்தறிந்தோடு, அறிஞருலகமே பாராட்டும் அளவுக்கு மிகச்சிறந்த நூல்களை எழுதியவர், டாக்டர் **பா. நடராஜன் M. A. D. Litt. M. L. A.** அவர்கள். அத்தகைய பெருமகனார் இந்நூலுக்கு முகவுரை எழுதியுள்ளார். பல்வேறு ஆக்க வேலைகளுக்கிடையே நாவலைப்படித்து, சிறந்ததொரு முகவுரையை எழுதிய அன்னாருக்கு என்வணக்கமான நன்றி உரித்தாகும்.

அடுத்து, கலையின் முழு உரு—கன்னித்தமிழின் புது ஒளி, முத்தமிழ்க்கலா வித்வ ரெத்தினம் உயர் திரு. அவ்வை **தி. க. ஷண்முகம்** அவர்கள் இந்நூலுக்கு அணிந்துரை அளித்து நூலை அணி செய்துள்ளார்கள். அப்பெருந்தகையாரின் அணிந்துரையே ஒரு தமிழ்க்கருவூலமாகும்! ஒரு சிறந்த குருவுக்குச் செலுத்தும் நன்றிகலந்த வணக்கத்தை அவ்வை ஷண்முகம் அவர்கள் திருமுன் படைக்கிறேன்.

நாவலில் வரும் போர்க்காட்சிகளை அமைப்பதற்கு பேருதவி செய்த (முன்னாள் ராணுவ அதிகாரத்துறையில் பயிற்சி பெற்ற) திரு. கு. மாணிக்கவாசகம் பிள்ளை (K. M. Pillai) A. I. I. A. அவர்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூலின் முகப்புப் படத்தை நல்முறையில் வரைந்தளித்த ஓவிய மணி — பத்ம பாஸ்கர் அவர்களுக்கும், நன் முறையில்—அச்சிட்டு உதவிய அச்சகத்தாருக்கும் உளங் கனிந்த நன்றியை உரிமையாக்குகிறேன்.

வணக்கம்

**என். ஏ வேலாயுதம்**

---

இந்நாவலின் வருவாயில் 25% பாரதப் பாதுகாப்பு நிதிக்கு வழங்கப்படும்.

---

# கடமையும் காதலும்

## 1. ஒளி வீசத்தான் செய்யும்.

தண்ணீர் நிறைந்த குடத்தை எடுத்து 'டக்' கென்று தன் இடுப்பில் வைத்து விட்டு, கிணற்றடியினின்றும் திரும்பினாள் சாரதா.

எதிர் பாராத விதமாக எதிரில் வந்துகொண்டிருந்த சகுந்தலாவைக் கண்டதும், தீயை மிதித்தவள்போல் திடுக்கிட்டு, அவளைக் காணவே பிடிக்காத வெறுப்புடன் 'சட்' டென்று முகத்தை திருப்பிக்கொண்டு தன் வீடு நோக்கி விரைந்தாள்.

தோழி சகுந்தலா அதிர்ச்சியுற்றாள்; தன் பால்ய தோழியான சகுந்தலாவின் வெறுப்புணர்ச்சி கண்டு அவள் வெகுளவில்லை; வேதனையே அடைந்தாள். அவள் மனம்

சாரதாவையே நாடி ஓடியது. 'சிறிதளவாவது அவளிடம் பேச வேண்டும்' என்ற ஆசை, உள்ளத்தில் ஊற்றெடுத்தது; 'எத்தனை வருடங்கள் ஒன்றாகப் பழகினோம்! அன்று எதிர்பாராத விதமாக நடந்த அந்த சம்பவம் அவளின் மனதில் எத்தகைய புயலைக் கிளப்பி விட்டுவிட்டது!' என்றெல்லாம் எண்ணி எண்ணி ஏங்கியது சகுந்தலாவின் மனம்.

  

சாரதாவும் சகுந்தலாவும் பாலியத் தோழிகள். பால்யம் மாறிய உடனேயே பழகும் வாய்ப்பு பெற்றவர்கள். சிவஞானபுரம் என்ற அந்த சின்னஞ்சிறிய கிராமத்தில் சிறகடித்துப் பறந்து இன்ப வானில் உலவும் சிட்டுகளாக, சேர்ந்து வளர்ந்தார்கள். ஆடலும் பாடலும் அவர்களுக்கே சொந்தமென ஆனந்தக் கடலில் மிதந்தார்கள்.

மழையின் கொடுமையால், ஒருபுறம் கூரையும், சுவரும் இல்லாமல் காட்சி அளித்த அந்தக் கிராமத்து ஆரம்பப் பள்ளியில் இருவரும் ஒன்றாகவே படித்தார்கள். 'சட்டம்' இல்லாத கண்ணாடியை நூலால் கட்டி முகத்தில் மாட்டிக் கொண்டு இளமாணவ-மாணவிகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்த சதானந்தம் உபாத்தியாயர்கூட, சகுந்தலா—சாரதா நட்பைக் கண்டு ஆச்சரியப்பட்டதுமல்லாமல் அவர்கள் இருவரிடமே நேரில் கேட்டுமிருக்கிறார். சுருங்கக்கூறின், இருவரும் ஒருதாய் வயிற்றில் பிறந்த சகோதரிகளாகவே வளர்ந்தார்கள்.

சகுந்தலாவை விட சாரதா ஒரு சில மாதங்களுக்கு மூத்தவள். இருவரும் கிராமத்துப் பள்ளிப் படிப்பை முடித்து முற்றுப் புள்ளிவைத்தபோது, பால்யம் மாறி பருவ மங்கையர்களாக ஒளி வீசினார்கள்.

பார்ப்போர் மனதைப் பறிக்கும் பருவ மங்கையர்களாக மாறிய பொழுதும் அவர்கள் நட்பு நலியவில்லை. மாறாக முன்னைவிட நெருங்கியது. இருவரும் ஒரே தெருவில் வசித்து வந்ததும், அவர்களின் உறவு நெருக்கத்திற்கு ஒரு காரணம்.

சகுந்தலா-சாரதா நட்பு நமக்குப் புரிந்துவிட்டது.

அடுத்து சிவஞானபுரத்தைப் பற்றியும் சகுந்தலா, சாரதாவைப் பற்றியும் அதாவது அவரவர்களின் குடும்பங்களைப் பற்றி—தனித்தனியாக வாசக அன்பர்களாகிய நீங்கள் அறிய வேண்டியது அவசியமன்றோ.

ஆகவே குடும்பங்களுக்குள் சிறிது சுற்றிவருவோம்.

சுமார் மூன்னூறு வீடுகள் அடங்கிய கிராமம்-சிவஞானபுரம். அந்தக கிராமத்தில் தெற்குக் கோடியில் பழமையைப் பறைசாற்றும் ஒரு பாடசாலை. அதன் எதிரில் ஒரு ஆலமரம், ஆலமரத்தின் நிழலில் ஒரு சுமடுதாங்கி. அந்த சுமடுதாங்கிக்கு இரு கற்கால்கள். அதில் ஒன்றில் சிறிது மஞ்சளை வட்டமாகப் பூசி, ஒரு அரளிப்பூ மாலையையும் ஒட்டவைத்திருந்தது. பாடசாலை முகப்பிலிருந்து நேராக வந்தால்-அதாவது-கிழக்கு நோக்கி வந்தால், ஊரின் கோடியில் ஒரு அம்மன் கோவில். அக் கோவிலின் முன், இருபத்தி ஐந்தடி சதுர அளவில் கூரையில் ஓடு போட்ட ஒரு தாள்வாரம். அது பகலில் ஒரு சிலரின் சீட்டு விளையாட்டிற்கும், இரவில் வேறுசிலரின் உறக்கத்திற்கும் பயன்பட்டது. சில வேளை, மாலையில் ஊர் விவகாரங்களும் அங்கு காரசாரமாக அடிபடுவதுண்டு.

கோயிலின் பின்னால் கண் காணும் தூரம் வரையில் பச்சைப் பசேலென மின்னும் வயல்கள் தான். கோவிலின் முகப்பிலிருந்து சிறிது வடக்கே திரும்பினால் வலது பக்கமாக ஒரு பூங்காவனம். அதன் அருகில் அந்த கிராமத்தவர்க்கே சொந்தமான மூன்று 'கப்பிகள்' பொருத்தப் பட்ட கிணறு. அந்தக் கிணற்றிலிருந்து ஊறி வரும் வெள்ளம், வெல்லமாக இனிக்கும். அந்த வெல்லக் கிணற்றிற்கு அடுத்தாற்போல், போர் அடிக்கும் களங்கள். ஆறு மாதத்திற் கொருமுறையான அறுவடை வேளையைத்தவிர மற்ற சமயங்களில் வெறும் விளையாட்டு மைதானங்களாகவே காட்சியளித்தாலும் ஒன்றிரண்டு வைக்கோர் போர்களும் சில கால்நடைகளும் தென்படும்.

களங்களையும் தாண்டி, தெற்குத் தெருவுக்கு வந்தால், வலதுபுறம் வரிசையாக அமைந்திருக்கும் வீடுகளில், பிரம் மாண்டமாக இல்லாவிட்டாலும், அந்த வரிசையிலேயே சற்று உயரமாகத் தோன்றுகிற ஐந்தாவது வீடுதான் சிதம்பரநாதனின் வீடு.

அந்தக் கிராமத்தில் ஓரளவு செல்வாக்குள்ள பெரிய மனிதர் சிதம்பரநாதன். வெறும் சிதம்பரநாதன் என்றால் இடமென தெரிந்துகொள்ள முடியாது. 'காங்கிரஸ்காரர் சிதம்பரநாதன்' என்றால் தான் எல்லோருக்கும் 'சட்' டென்று தெரிந்துகொள்ள முடியும். ஏனென்றால் இந்திய சுதந்திரப் போராட்ட காலத்தில் தீவிரமாகக் கலந்து, சிறை வாசம் அனுபவித்தவர் அதோடு பல வருடங்களாகக் கதரையே அணியும் பழக்கமுள்ளவர். பேச்சுக்குப் பேச்சு காங்கிரஸ் போராட்ட நிகழ்ச்சிகளைக் கலந்தே பேசுவார். தன் பெயரோடு காங்கிரஸ்காரர் என்ற பட்டத்தையும் இணைத்து அழைப்பதை அவர் ஒரு பெருமையாகவும் எண்ணிக்கொள்வார் மேலும், அந்தக் கிராமத்தில் சிறிது எழுதப் படிக்கத் தெரிந்தவர்களில் முதல்மையானவர். அதாவது ஆங்கிலப் பத்திரிகைகளைக்கூட வாசித்து புரிந்து கொள்ளக்கூடிய அளவுக்கு இருந்தாராதலால், கல்வி அறிவு அதிகமில்லாத அந்தக் கிராமத்தில் அவர் செல் வாக்குப்பெற்றுத் திகழ்ந்ததில் ஆச்சரியம் இல்லைதான்.

அறுவடை முடிந்ததும், அக்கிராமத்தின் தேவை போக குறைந்தது முன்னூறு கோட்டை நெல்லாவது பட்டணத்திற்கு ஏற்றுமதியாகிக்கொண்டிருந்தது, அடுத்த தெருவிலிருக்கும் ஆற்றங்கரையின் வழியாக.

கிராமத்து விவசாயிகளுக்குள் அடிக்கடி ஏற்படும் சில்லரை வழக்குகளைத் தீர்த்து வைக்கும் பஞ்சாயத்து சபையில் சிதம்பரநாதனும் ஒருவர். அவருக்குத் தேவை யான நிலபுலன்கள் இருந்தன. அந்தச் செல்வத்தோடு, மக்கட் செல்வமாக, இரு கண்களைப்போல் இரு குழந்தை களும் உண்டு. அதில் அதிர்ஷ்டவசமாக மூத்தது ஆண்.

இளைய து பெண். இப்படியான சிறிய குடும்பத்தைக் கொண்ட சிதம்பரநாதனுக்கு, தன் மனைவியை சில வருடங்களுக்கு முன்பே காலனிடம் ஒப்படைத்துவிட்டதினால் தன் குழந்தைகளை மிகவும் செல்லமாக வளர்க்கிறார்.

மூத்த மகன் வேணு, பட்டணத்தில் போய் படித்து பட்டம் பெற்றதும் தந்தையின் கொள்கைக்கு சிறிது மாறுபட்டு நடப்பவனைப்போல் தோன்றினான்.

மகள் சாரதா மட்டும் "தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை" என்ற அறமொழியைப் பொய்யாக்காமல் வளர்கிறாள்.

வேணுவின் போக்கு, சிதம்பரநாதனுக்குப் புரியவும் இல்லை; பிடிக்கவும் இல்லை.

எப்பொழுதும் தேசத்தொண்டு, நாட்டுப்பணி, தாய் மொழிப்பற்று, என்றெல்லாம் கூறிக்கொண்டு, குடிசைகளிலும், குப்பை மேட்டிலுமாகக் காலத்தைக் கடத்தலானான் வேணு. இது சிதம்பரநாதனுக்கு எப்படிப் பிடிக்கும்?

தன் மகனைப் பட்டதாரி ஆக்கி, பெரிய சர்க்கார் வேலையில் அமர்த்தி, குறைந்தது இருபதினாயிரமாவது வரதட்சணை வாங்கி சீரும் சிறப்புமாய்த் திருமணம் முடித்து, மனம் குளிர, கண் குளிர பார்க்கவேண்டுமென்றிருந்தார். ஆனால் அவர் எண்ணமெல்லாம் மண்ணாகி ஏமாற்றம் எதிரொலிக்கும்படி ஆக்கிவிட்டான் வேணு.

தன் மகனின் மாற்றம் கண்டு உள்ளம் கொதித்தார் சிதம்பரநாதன் யாராவது வேணுவைப்பற்றி விசாரித்தால் தன் உள்ளக்குமுறலை அடக்கிக்கொண்டு "என்ன செய்யலாம், தலைக்குமேல் வளர்ந்துவிட்டான். பிள்ளைதான் வயதிற் மூத்தால் பிதாவின் சொற்புத்தி கேளான்" என்றபடி ஆகிவிட்டது. நாட்டுப் பணியாம், தமிழ்த் தொண்டாம், இந்த நாட்டிற்குப் பணியாற்ற இவன்தானா கிடைத்

தான்; வீட்டை மறந்து நாட்டுப்பணியா? நானும்தான் அந்தக்காலத்தில் காங்கிரஸில் சேர்ந்து தேசத்திற்கு உழைத்தேன். ஏன்? ஜெயிலுக்குக்கூடப் போனேன். இவனைப்போல் வீடும் வேண்டாம், குடியும் வேண்டாம்னு, சாமியாராகவா அலைந்தேன்? அளவோடு செய்தேன்; அழகா நாணயமா, நல்லபடியா வாழ்கிறேன்" என்று, 'பட்-பட்'டென தன் பிரதாபத்தைப் பொரிந்து தள்ளி விடுவார். என்றாலும், அவர் சொற்களில் மகனின் மீதுள்ள பாசமும், அதனால் உண்டாகும் வருத்தமும் ஒளிவீசத்தான் செய்யும்.



## 2. வேணுவின் மனச்சுழல்.

எண்ணற்ற மக்களில், ஒரு சிலர் மகான்களாகவும், தியாகிகளாகவும், பெரிய அறிஞர்களாகவும், தேசத் தொண்டர்களாகவும் மாறுகிறார்கள். அவர்களெல்லாம், சாதாரண மக்களாகப் பிறந்து, மக்களுடனேயே வாழ்ந்தவர்கள்தான். என்றாலும், எப்படி மாறினார்கள்? என்பதை நாம் சிந்தித்தால், அவர்களின் வாழ்க்கைச் சரித்திரத்தை சற்றுப் புரட்டினால், ஒவ்வொருவருடைய வாழ்க்கையையும், ஒவ்வொரு சிறு நிகழ்ச்சிகளே திருப்பின என்பதை அறியலாம்.

தேசப்பிதா மகாத்மா காந்தி அடிகள், அஹிம்சா மூர்த்தியாக, உண்மையின் உருவமாக மாறியதற்குக் காரணமாக இருந்தது, 'அரிச்சந்திரன் நாடகம்தான்' என அப்பெருந்தகையாரே கூறுகிறார். என்னே நாடகக் கலையின் பெருமை?

இப்படியே ஒவ்வொரு மேதைகளைப்பற்றியும் கூறலாம்.

ஓடிக்கொண்டிருக்கும் சக்கரத்தின் ஓரத்தில் ஒரு கல் விழுந்துவிட்டால், அந்த சக்கரம், பாரம் விழுந்த பக்கமாக சிறிது தாழ்ந்தே சுற்றும். அதுபோன்றே மனித வாழ்க்கை; மனிதனின் மனம்.

வேணுவின் மனமும், மற்றவர்களின் மனதைப் போன்றே கல்வியிலும், வாழ்க்கையிலும், தான் சுற்றிக் கொண்டிருந்தது; என்றாலும், தந்தையின் மனதைப்போல் சர்க்கார் வேலையை நாடி ஓடவில்லை. இளமையிலேயே இளகிய மனம் படைத்தவன் வேணு. பிறர் துன்பம் காண பொறுக்காதவன்.

பண வசதி படைத்தவர்களும், செல்வாக்குப் பெற்றவர்களும், சர்க்கார் வேலையை இலகுவாகத் தேடிக்கொள்கிறார்கள். ஆனால், அந்த செய்கை, எத்தனையோ எண்ணற்ற-படித்த ஏழைகளின் வயிற்றில் அடிக்கிறது. தகுதியானவர்களும் சிபார்சுக்கு ஆளில்லாமல் தவிக்கிறார்கள் என்ற உண்மையை உணர்ந்து, சர்க்கார் வேலையை அறவே வெறுத்தான் வேணு.

செல்வந்தர்கள் படித்து முடிந்ததும் சொந்தமாக ஒரு தொழிற்சாலையைத் தொடங்கவேண்டும். அவர்களுக்கு அது முடியும். தனியாகவோ கூட்டாகவோ இதைச் செய்யலாம். ஆனால் அவர்கள் அப்படிச் செய்யாது சோம்பேறித்தனமாக வாழ்வதோடு, பிறருக்கும் தீங்கிழைக்கிறார்கள். நாட்டிற்கும் பட்டதாரியான ஏழைகளுக்கும் தீங்கிழைக்கிறார்கள். இது வெளிப்படையான உண்மை.

இதை நான் மாற்றி அமைக்கப் பாடுபடுவேன்' என்று உறுதி கொண்டான் வேணு.

பிறவியிலேயே தேசப்பற்றுள்ளவனை வேணுவைத் தீவிர பொதுநலத் தொண்டனாக ஏழைகளின் நண்பனாக அதிக நாட்டுப்பற்று, மொழிப்பற்றுள்ள கட்டமை வீரனாக மாற்றியது எது? அது எந்த சக்தி? .....அந்த நிகழ்ச் சியை நாம் அறியவேண்டாமா?

நொங்கும் நுரையுமாகப் பொங்கிவரும் ஆற்று வெள் ளம், எப்படி அணைக்கட்டால் திருப்பி நாட்டிற்குப் பயன் படுகிறதோ, அப்படியே காட்டாறு ஒத்த வேணுவின் வாலிப பருவமும், ஒரு சிறு நிகழ்ச்சியால், நல் அணை யால் திருப்பப்பட்டு நாட்டிற்கு உழைக்க வைக்கமுடிந்தது.

வேணுவின் கல்லூரி நண்பர்களில் ஒருவன், வேணு வைவிடப் பணக்காரன்; அவனுடைய தந்தை பட்டணத் திலேயே லட்ச ரூபாயில் ஒரு பங்களா கட்டிக்கொண் டிருந்தார். அந்த பங்களாவைப் பார்க்க வரும்படி தின மும் வேணுவை தொந்தரவு செய்தான் நண்பன்.

வேணுவும், ஒரு நாள் மாலை, தன் நண்பனுடன் அவனுடைய பங்களாவைக் காணப் புறப்பட்டான்.

போகும் வழியில், எத்தனையோ, சாதாரண வீடுகள், மாடி வீடுகள், குடிசைகள் எல்லாம் அவர்கள் கண்களில் பட்டு மறைந்துகொண்டிருந்தன. ஆனால் வேணுவுக்கு மட்டும் மனதிலும் பட்டன. பார்த்துக்கொண்டே, நண்ப னுடன் பேசிக்கொண்டே வந்த வேணு சட்'டென்று நின் றான்.

"ஐயா! ஐயா! சத்தியமா நான் களவு செய்யல்லீங்க. ஐயா!......" உள்ளத்தை உருக்கும் ஏக்கம் நிறை சொற் கள் வந்த திக்கு நோக்கித் திரும்பினான் வேணு. அங்கு,

மூன்று போலீஸ்காரர்கள் மத்தியில், ஏழைத் தொழி லாளி ஒருவன், தன் குடிசை வாசலில் நின்றுகொண்டு,

குடிசையினுள்ளும் போலீஸ்காரர்களின் முகத்தையும் மாறிமாறிப் பார்த்துக்கொண்டே கதறினான்.

அவன் அருகில் சென்றான் வேணு. "ஐயா, நீங்க ளாவது சொல்லுங்கள் ஐயா, என் பொஞ்சாதி பிரசவ வேதனையில் அவதிப்படுகிறாள் ஐயா!......"

தனக்கு ஏதோ ஆதரவு கிடைத்துவிட்ட நம்பிக்கையில் வேணுவை உதவிக்கு அழைத்தான் அந்த மனிதன்.

வேணு சிறுல் ஒன்றும் பேசாமல் இருக்கமுடியவில்லை; "என்னய்யா நடந்தது?" என்றான் ஒரு போலீஸ்கார ஃனப் பார்த்தபடி.

"நீங்க பேசாமல் போங்க; இவன் திருடன்! வேலை செய்த இடத்திலிருந்தே திருடிக்கொண்டு வந்துவிட்டான்" என்றான் ஒரு போலீஸ்காரன்.

போலீஸ்காரன் கூறிமுடிக்குமுன்பே, அந்த ஏழை ஆரம்பித்தான், "சத்தியமா நான் திருடல்லீங்க, ஒரு சண்டாளனின் சூழ்ச்சிங்க. ஐயா நான் சிறைக்குப் போயிட்டேன் என்றாலும் என் குடும்பத்தைக் காப்பாத் துங்க", அவன் கூறி முடிக்குமுன் போலீஸ்காரர்கள் தங்கள் கடமை உணர்ந்து, இழுத்துக்கொண்டு போய் விட்டார்கள்.

குடிசையினுள் எட்டிப்பார்த்தான் வேணு. "ஐயோ அம்மா, ஐயோ-ஆ" என்ற முனகலும் அவலக்குரலும் ஒலித்தன. அருகில், பத்து வயது மதிக்கத்தக்க ஒரு பெண் குழந்தையும் அதைத்தொடர்ந்து, குடும்பக் கட் டுப்பாட்டை மீறிய எண்ணிக்கையில் படிப்படியாக எட்டு, ஏழு, ஆறு, ஐந்து என்ற வயதுகளில் நான்கு குழந்தை கள். ஐந்து முதல் ஏழு வயது வரை உள்ள குழந்தை களுக்கு உடலில் ஆடையே கிடையாது. அதற்குப்பதில் சொறிப் புண்கள் உடலை மறைத்திருந்தன! பத்து வயது குழந்தை மட்டும், இன்ன நிறம் என்று சொல்லமுடியாத

ஏதோ ஒரு நிறத்தில் ஒரு காதல் தண்டைக் கட்டியிருந்தது!

போலீஸ்காரன் அந்த ஏழையைப் பிடித்துக்கொண்டு போகிற வேளையில் எல்லா குழந்தைகளும் ஒன்றுசேர்ந்து கண்களில் நீர் வடிய, "ஐயோ என் அப்பாவைப் பிடித்துக் கொண்டு போகிறார்களே." என்று ஓலமிட்டு ஒப்பாரி வைத்தன!

அங்குள்ள நிலைமையை வேணு உணர்ந்துகொண்டான், தன் நண்பனைப்பார்த்து, "நீ வீட்டிற்குப்போ, நான் இந்த அம்மாவுக்கு ஒரு மருத்துவச்சியை அழைத்துக்கொண்டு வருகிறேன்" என்றான்.

வேணுவின் செய்கை நண்பனுக்குப் பிடிக்கவில்லை. என்றாலும் சொன்னால் கேட்கமாட்டானே என்றுஎண்ணி, முணுமுணுத்தபடியே அங்கிருந்து அகன்றான்.

உடனேயே வேணுவும் அங்கிருந்து விரைந்து சென்று ஒரு மருத்துவச்சியுடன் திரும்பி வந்தான்.

அந்த ஏழையின் மனைவி ஒரு அழகான ஆண் குழந்தையைப் பெற்றாள்.

மருத்துவச்சிக்கு ரூபாயைக்கொடுத்து அனுப்பிவிட்டு, அந்த பத்து வயது சிறுமியிடமும் தன் கையிலிருந்த ரூபாயைக்கொடுத்துவிட்டு, சிறையை நோக்கி விரைந்தான் வேணு.

இன்ஸ்பெக்டரிடம் அனுமதி வாங்கி, அந்த ஏழையைப்பார்த்தான். வேணுவைப் பார்த்த அவன் 'ஓ'வென்று அழுதான். 'தான் களவு செய்யவேயில்லை' என்று பழைய பல்லவியையே பாடினான். "என் மனைவி எப்படி இருக்கிறாள்?" என்று ஆவல் ததும்ப கேட்டான்.

"பதறாதே! உன் மனைவி அழகான ஆண் குழந்தை பெற்றாள். குழந்தையும், தாயும் நல்ல சுகம். உன்னைப் பார்த்தால், கள்வனாகவே தோன்றவில்லை; ஆகவேதான்

உண்மை அறிய உன்னைத் தேடி வந்தேன். நடந்ததை அப்படியே என்னிடம் கூறு'' என்றான் வேணு.

அந்த மனிதன் பின்வருமாறு கூறினான்:

''நான் ஒரு தொழிலாளி. கொத்த (கட்டிட) வேலைக்குப்போவேன். என் குடிசையினின்றும் சற்று தொலைவில் ஒரு பணக்காரர் பெரிய பங்களா ஒன்று கட்டுகிறார். நேற்றுவரை நான் அங்குதான் வேலை செய்தேன். எனக்கு தினக்கூலி இரண்டரை ரூபாய் கிடைக்கும்.

இந்த இடத்தில், குறிக்கிட்டு ''உமது பெயர் என்ன?'' என்றான் வேணு.

'என் பெயர் குமரன்'' பெயரைக் கூறிவிட்டு மேலும் தொடர்ந்தான் குமரன்.

''எனக்குக் கூலியாகக் கிடைக்கும் இரண்டரை ரூபாயில், அங்கு மேற்பார்வையாளராக வேலை வாங்கும் மேஸ்திரிக்கு அரை ரூபாய் லஞ்சம் கொடுக்கவேண்டும். என் குடும்பத்திற்கு அந்த இரண்டு ரூபாய் இன்றைய விலைவாசியில் இரண்டு வேளை உணவுக்குகூட போதாது. இந்த இரண்டு ரூபாயும் வாரத்திற்கு ஆறு நாட்கள்தான் கிடைக்கும்.

என் குடும்ப நிலைமை—வறுமையை சரிக்கட்டச் சில நாட்களில், மேஸ்திரி சுப்பையாவுக்கு லஞ்சம் கொடுக்காமலே இரண்டரை ரூபாயுடன் வீட்டிற்கு வந்துவிடுவேன், இதைக் காரணமாக வைத்துக்கொண்டு மறுநாள் வேலைக்குப் போனதும், 'இன்று உனக்கு வேலை இல்லை'' என்று சீறி விழுவார் சுப்பையா. அந்த வேளையில் என் உள்ளம் கொதிக்கும்; அதற்கேற்ப சூடான வார்த்தைகளையும் நிதானமில்லாமல் பேசிவிடுவேன். தொழிலாளியே, பிற தொழிலாளிகளை வஞ்சிக்கும்பொழுது, துன்பப்படுத்தும்பொழுது—எந்தத் தொழிலாளிதான் பொறுமையாக இருக்கமுடியும்? என் கூப்பாடு உரக்க எழுந்தால், உடனடியாக என்னை சமாதானம் செய்து, வேலை செய்யவும்

அனுமதிப்பார். என்றாலும் என்னை சரியாகப் பழி வாங்க தருணம் பார்த்திருந்தார். காரணம்? அத்தனை தொழிலாளி களிலும், அவனை எதிர்ப்பவன் நான் ஒருவன்தானே.

இன்று நான் வேலை முடிந்து வீட்டிற்கு வந்தேன். சில நாட்களைப்போல், சுப்பையனுக்கு லஞ்சம் கொடுக்க வில்லை. நான் வீட்டிற்குள் ஏறும்பொழுது, என் மனைவி பிரசவ வேதனையால் துடித்துக்கொண்டிருந்தாள். ஈரமான மண் தரையில், தலையணைகூட இல்லாமல் அவள் படுத் திருந்தாள். "உடம்பில் குளிர் ஏறி ஜன்னி வந்துவிடும். எங்கிருந்தாவது ஒரு பாயும் தலையணையுமாவது கொண்டு வா" என்றாள், அடுத்த குடிசையிலிருந்த பாட்டியம்மாள்.

என் கையிலிருந்ததோ இரண்டரை ரூபாய் பாழும் பசி வேறு உயிரை வாங்கியது. என் பெண் குழந்தை யின் தோற்றம் பரிதாபமாக இருந்தது. அந்தக் குழந் தையின் கையில் ஒரு ரூபாயைக் கொடுத்து வீட்டிற்கு சாமான் வாங்கிவரச் சொல்லிவிட்டு, "பாய்-தலையணைக்கு எங்கு போவது' என்று சிந்தித்தேன்.

நான் வேலை செய்யும் இடத்தில் ஒரு பாயும் கிழிந்த தலையணை ஒன்றும் பல நாட்களாக மூலையில் சுருண்டு கிடப்பதைப் பார்த்திருக்கிறேன். அந்த நினைவு சட்' டென்று தோன்றவே, ஆபத்துக்குப் பாபம் இல்லை. அது வும் பழைய பாய்தானே, என்று தீர்மானித்து ஓடிச்சென்று அதை எடுத்துவந்தேன். தரையிலே பாயை-விரித்து என் மனைவியைப் படுக்கவைத்தேன். சற்று நேரத்தில் மூன்று போலீஸ்காரர்கள் வந்துவிட்டார்கள்.

நான் தினமும், வேலை 'முடிந்ததும் இந்த மார்கிரி, சிமின்ட், மற்றும் இரும்புச் சாமான்களைக் களவு செய் வேன் என்றும், அதைப்போல் இன்றும் பாயும் தலையணை யும் எடுத்து வந்ததோடு, விலை உயர்ந்த 'சில சாமான் களையும், தான் வைத்திருந்த இருபது ரூபாயையும் காண வில்லை என்றும் போலீஸில் புகார் செய்துவிட்டான் சுப் பையா. நான் பாயை எடுத்துக்கொண்டு வரும்பொழுது

பார்த்துக்கொண்டே இருந்துவிட்டு, வேண்டுமென்றே என்னைப் பழிவாங்க-ஒழித்துக்கட்ட இந்த தந்திரத்தை செய்துவிட்டான். அவன் சூழ்ச்சிக்கு சாதகமாக நான் எடுத்துவந்த படுக்கை சாட்சியாகிவிட்டது. உண்மையில் நடந்தது இதுதான்; என்னை நம்புங்கள்''.

தன் சரித்திரத்தை சுருக்கமாகக் கூறி முடித்துவிட்டு கண்ணீர் விட்டான் குமரன்.

வேணுவும் மனம் கலங்கினான். 'இந்நாட்டில் குமரனைப்போல் குமுறும் இதயம் படைத்தவர்கள் எத்தனையோ லட்சம் பேர்கள் இருக்கிறார்களே; இவர்களுக்கெல்லாம் என்றுதான் நற்காலம் பிறக்கப்போகிறதோ' என்று ஏங்கினான்.

குமரனின் சோக வரலாறு வேணுவின் உள்ளத்தில் கல்மேல் எழுத்துப்போல் நிரந்தரமாகப் பதிந்துவிட்டது. அன்று முதல் தன்னால் முடிந்த மட்டும் இந்நாட்டு ஏழைகளுக்காக உழைப்பது' என்று உறுதி பூண்டான்.

குமரனுக்கு ஆறுதல் சொல்லிவிட்டு, இன்ஸ்பெக்டரிடமும் உண்மையைச் சொல்லிவிட்டு, போலீஸ் நிலையம் விட்டு வீடு திரும்பினான்.

'பிரசவ வேதனையில் அவதியுற்ற பெண். அதே வேளையில், போலீஸாரால் பிடித்துக்கொண்டு போகப்பட்ட குமரனின் நிலை. இந்தக்காட்சியைப்பார்த்து "ஐயோ என் அப்பாவை போலீஸ்காரர்கள் பிடித்துக்கொண்டு போகிறார்களே; என்று ஓலமிட்ட குழந்தைகளின் அலறல், குமரன் சொன்ன வரலாறு-இவைகளே வேணுவின் மனதைச் சுற்றிச்சுற்றி வட்டமிட்டன.

# 3. நல் நிலத்தில் விழுந்த விதைகள்.

### கிருஸ்தவ வேதத்தில் ஒரு காட்சி.-



விவசாயி ஒருவன் விதைகளை விதைக்கிறான். அந்த விதைகள், நல்ல வண்டல் சத்துள்ள சதுப்பு நிலத்திலும், முட்கள் நிறைப்புதரிலும், கற்பாறைகளிலுமாகப் பல இடங்களில் சிதறி

பண்பட்ட நிலத்தில் விழுந்த விதைகள், வேர்விட்டு நன்றாக வளர்ந்து, பலன் தருகின்றன. முட்களின் நடுவில் விழுந்த விதைகள், வேர் விட்டு முளைத்தாலும், சுற்றிலுமுள்ள முட்கள் அதை வளரவிடாமல் தடுத்து அமுக்குகின்றன.

கற்பாறைகளில் விழுந்த விதைகளோ முளைக்கவே செய்யாமல் வீணாகிறது. இக்கதையை, மனித உள்ளங்களுக்கு ஈடாகச் சொல்வதுண்டு.

நல்ல கருத்துக்களை, எல்லோரும்தான் கேட்கிறார்கள். ஆனால் பண்பட்ட மனதில் விழுந்த கருத்துக்களோ அப்படியே பதிந்து, செயல்படத் தொடங்குகின்றன. அந்த நற்செயலால், எத்தனையோ எண்ணற்ற மக்களுக்குப் பலன் அளிக்கின்றன. அம்மாதிரிய உள்ளங்களே, நல்ல நிலத்திற்கு ஒப்பான.

சிலர், கருத்துக்களைக் கேட்கிறார்கள்; மனதிலும் பதிய வைக்கிறார்கள். அதன் விளைவாக நாட்டிற்குத் தொண்டு செய்ய வேண்டுமென்றும் எண்ணுகிறார்கள். செய்யவும் முற்படுவார்கள். ஆனால் சூழ்நிலையும், சுற்றுப்புறமும்

அவர்களின் நற்பண்பிற்கு இடையூறாக அமைந்து, அப் பண்பைக் கெடுக்கின்றன. இது முட்புதர்களுக்கிடையில் விழுந்த விதைகளுக்கு நிகர்.

'வேறு சிலர், எத்தனைதான் பெரியோர்களின் கருத்துக்களைக் கேட்டாலும் ஒன்றுமே அவர்களின் மனதில் பதிவதில்லை. பண்படாத மனத்தவர்கள்; இவர்களின் மனம் கற்பாறைக்கு நிகர். அதில் விழும் வித்துக்கள் முளைக்காதல்லவா?

இந்தக் கதையைப்போன்றே, நாட்டில் நடக்கும் எத்தனையோ சோக நிகழ்ச்சிகளை வறுமைப்பேயால், அல்லல் படும் குடும்பங்களை எல்லோரும்தான் காண்கிறார்கள். சிலர் இரக்கப்படுகிறார்கள் சிலர் தொண்டுசெய்யவேண்டுமென எண்ணுகிறார்கள், முடிவதில்லை.

ஆனால் ஒன்றிரண்டு பேர்கள் தன்னையே அர்ப்பணித்து தேச சேவைக்கே இறங்கிவிடுகிறார்கள்! இவைகள் நாம் கண்களால் காணும் நிகழ்ச்சிகள்.

அம்மாதிரிய ஒன்றிரண்டு பேர்களில் ஒருவன் ஆகிவிட்டான் நம் வேணு.

"துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி இன்பம் பயக்கும் வினை"-என்ற பொன்மொழியை சிரமேற்கொண்டான்.

தன்னை ஒத்த மனித இனம், பன்றிகளிலும் கேவலமான நிலையில் வாழ்வதைக்கண்டு மனம் பதைத்தான் தன்னால் இயன்ற சேவையைச் செய்யவேண்டுமென எண்ணினான். அந்த எண்ணக் குவியலுக்குச் சிகரமாக அமைந்தது; குமரனின் சோக வரலாறும், நேரில் கண்ட நெஞ்சுருக்கும் காட்சியும்.

உலகத்திற்குச் சேவைசெய்யமுடியாவிட்டாலும், பிறந்த மண்ணிற்கும், பேசும் மொழியாம் தாய் மொழிக்கும் பாரத நாட்டிற்கும் தொண்டு செய்தே தீருவேன்' என்று தனக்குள்ளாகவே சபதம் செய்துகொண்டான்.

அன்றே—அப்பொழுதே மாறிவிட்டான் ஆம், வேறு அடியோடு மாறிவிட்டான், மனிதனாக மாறிவிட்டான். ஏழைத்தொழிலாளி குமாரனைக் காப்பாற்றினான், அடுத்து, அந்தக் கிராமத்து ஏழைகளோடு தொடர்புகொண்டான். அவர்களின் குறையை நேரில் கேட்டறிந்தான். சர்க்காரி லிருந்து கிடைக்கும் உதவிகளை, அந்தக் கிராம மக்களுக் குக் கிடைக்கச்செய்தான். நாள் முழுவதும் அந்த ஏழை களின் முன்னேற்றத்திற்கே உழைத்தான். நாட்டுப் பற் றையும், மொழிப்பற்றையும் ஊட்டினான். அந்த தன்னல மற்றத் தொண்டில் இனம் தெரியா இன்பம் கண்டான்:

சமூக குறைபாடுகளையும், அவைகள நீங்குவதற குள்ள வழிகளையும், பத்திரிகைகளுக்கு எடுத்து எழுதி னான். ஆனால் அவன் நினைத்த அளவுக்குப் பத்திரிகைகள் உதவவில்லை. நாட்டில் நடமாடும் ஒவ்வொரு பத்திரிகை யும், ஒவ்வொரு வழியில் சென்றன. அதற்குப் பற்பல காரணங்களும் இருந்தன. ஆனால் உண்மைத் தொண்ட னை வேறுவின் வேண்டுகோளுக்கு சர்க்கார் செவி சாய்த்

தாய்நாடு, பொருளாதாரத்துறையில் முன்னேறி, கலை களில் மேலோங்கி நிற்கும் அளவுக்கு வருகிற வரையிலு மாவது, எழுத்தாளர்கள், சித்திரமான-காம உணர்ச்சி யைத் தூண்டக்கூடிய கதைகள் எழுதுவதை நிறுத்தி விட்டு, தங்கள் எழுதுகோலை, ஏழைகளின் நல்வாழ்வுக் காக உழைக்கத் திருப்பவேண்டும்' என்று துணிந்து எழுதினான்.

உயிர்களின் உடலில் ஏற்கெனவே ஒன்றி நிற்கும் காம உணர்ச்சிகளைக் கிளறிவிடுவதற்கு, எத்தனையோ எண் ணற்ற எழுதுகோல்கள் போட்டியிடுகின்றனவே. அவை களெல்லாம் நாயினும் கேவலமாக நாட்களைக் கடத்திக் கொண்டிருக்கும், எண்ணற்றத் தமிழர்களின் வாழ்க்கை யைப்பற்றி சற்றேனும் சிந்தித்ததா? இருதயத்தைக் கல் லாக்கிக்கொண்டு உல்லாசிகளின் பொழுதுபோக்கிற்காக

மட்டும் கதை எழுதுகிறார்களே' என்று உளம் நொந்து அந்த நோவை, ஒரு கட்டுரையாக்கிப் பத்திரிகைகளுக்கு அனுப்பினான்......யார் வெளியிட்டார்கள்?

பத்திரிகைகள் அதை வெளியிடவில்லை. திருப்பியே அனுப்பின!

ஆற்றில் ஒரு காலும், சேற்றில் ஒரு காலுமாக நிற்கும் பத்திரிகைகள், பகுத்தறிவுக் கருத்துக்களை எப்படி வெளிடமுடியும்?

வேணுவின் கருத்துக்களுக்கும்-வேகத்திற்கும் ஒன்றிரண்டு பத்திரிகைகளே ஆதரவு கொடுத்தன!

ஒவ்வொரு மலருக்கும் சென்று, தேனை எடுத்து, மொத்தமாகச் சேர்த்துக்கொடுக்கும் தேனீக்களைப்போல், ஒவ்வொரு ஏழைக் குடிசைக்கும் சென்று, அங்கு நிலவும், வறுமை ஆட்சியின் நிழலைப் படம் பிடித்து தொகுத்து கட்டுரை வடிவாக்கி பத்திரிகைகளுக்கு அனுப்பி வைத்தான்.

தேன் எல்லோருக்கும் இனிக்கும். என்றாலும் சில நோய் உள்ளவர்களுக்கு, இனிக்காது. மாறாகக் கசப்பாகவும் இருக்கும். அதைப்போனறே, சுயநலம், வியாபாரம் என்ற நோய்களுக்கு இலக்கானப் பத்திரிகைகளுக்கும் வேணுவின் கட்டுரைகள் கசந்தன; ஏதோ, தாங்களே அகத்தியர், என்றும், தொல்காப்பியர் என்றும், எண்ணிக் கொண்டு, நல்ல கருத்துக்களை உதாசீனம் செய்தார்கள் சில பத்திரிகை ஆசிரியர்கள்.

வேணுவின் மூளை வேலை செய்தது; மகாத்மாவும், பாரதியும், மற்றும் தேச நலம் நாடிய பெரியோர்களெல்லாம் தாங்களே பத்திரிகைத் தொடங்கியதற்கான காரணம், அப்போதுதான் அவனுக்குப்புரிந்தது.

'உயர்ந்தவர்களை உயர்த்தும் இவ்வுலகத்தில், உயராதவர்களுக்கு, உண்மைத் தொண்டர்களுக்கு உதவிகூட கிடைக்காது. தேசத்தொண்டு என்பதும் இலேசானதல்ல என்று படிப்படியாக எண்ணத்தொடங்கினான்.

தன் நண்பன் சபாபதியை அணுகி தன் வேதனையைக் கூறினன்.

இருவருமாகச் சேர்ந்து ஒரு பத்திரிகைத் தொடங்குவது என முடிவு செய்தார்கள்.

வேணு தன் தந்தையை எண்ணிப்பார்த்தான்; அவர் இப்பொழுது இருக்கும் நிலையில், பத்திரிகை ஆரம்பிக்கப் பணம் கேட்டால், பாம்பாகவல்லவோ சீறுவார்?

வேணுவும், சபாபதியும் அன்று முழுவதும் சிந்தனையிலேயே ஈடுபட்டார்கள்.

அவர்கள் சிந்தித்து சிறந்த முடிவுக்கு வரட்டும்; நாம், வேணுவின் தந்தை சிதம்பரநாதனு எப்படி இருக்கிறார் என்பதையும் மற்றும் சில முக்கிய விபரங்களையும் பார்த்து வருவோம்.

---

# 4. இன்ப உணர்வின் முதற் படி

வேணுவின், போக்கையும் வேகத்தையும் கண்ட சிதம்பரநாதனு மிகவும் மனம் வருந்தினர். காரணம்? அவர், வேணுவை சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. 'தன் மகன் வீணுக ஊர் சுற்றி கண்டகண்ட கயவர்களோடு கூட்டு சேர்ந்து நாட்டைக் கெடுக்கும் கட்சிகளில் அங்கம் வகித்துக்கெட்டுப்போகிருனே; என்று எண்ணினர். அதனுல் பட்டணப் படிப்பையே-வெறுத்தார், இத்தகைய வேதனையோடு சாரதாவின் மணப்பருவமும், அவர் மனதைக் கலக்கிக்கொண்டே இருந்தது.

"என்ன! ..... இப்படி வயதுவந்த பெண்ணை வீட்டில் வைத்துக்கொண்டிருந்தால் எப்படி? ஏதாவது ஒரு நல்ல இடமாகப்பார்த்து, இந்தத் 'தை'யிலேயே முடிக்கக் கூடாதோ" என்றெல்லாம் அக்கம்-பக்கத்து நண்பர்கள் (ஏதோ அவர்கள் தலைமீது பாரம் இருப்பதாக நடித்து) அடிக்கடிக்கூறி, நொந்த மாட்டை துகம் கொண்டு இடிப்

பதுபோல்" சிதம்பரநாதனுவை. இடித்துக்கொண்டிருந்த னர்.

ஆனால் சாரதாவின் மனதில் திருமண உணர்ச்சியே புகவில்லை; பெரியவளாக ஆகிவிட்டாலும், குழந்தை போன்றே இருந்தாள். 'எப்பொழுதும் ஆனந்தமாகப் பொழுதைப்போக்கவேண்டும் தன் அண்ணனிடம், பட்டணத்திலிருந்து எதையாவது வாங்கிவரச்சொல்லி தொந்தரவு செய்யவேண்டும்'. தந்தை சொற்படி நடக்கவேண்டும், வீட்டு வேலைகளையும் கவனிக்கவேண்டும் என்பன போன்ற எண்ணங்களிலேயே சின்னஞ்சிறு சிட்டாக வீட்டினுள்ளேயே சுற்றிச்சுற்றி வந்தாள்.

என்றாலும், அந்தக் கிராமத்தில் யாருக்காவது திருமணம் நடக்கும்பொழுது, சாரதாவும் சகுந்தலாவும், தனியாக ஒரு அறைக்குள் இருந்து, தங்களுடைய திருமணத்தைப்பற்றியும், வருங்கால கணவர்களைப்பற்றியும், ஒருவருக்கொருவர், மாறிமாறி வாதித்து மகிழ்ந்தும், திருமணத்திற்குப் பின் வரும் பிரிவை நினைத்து, சிறிது வருந்தியும் தங்கள் மணப் பேச்சிற்கு முற்றுப்புள்ளி வைத்து விடுவார்கள்.

சாரதா, சகுந்தலாவின் திருமணத்தைப்பற்றிய பேச்சை எடுத்ததுமே, தன் அண்ணனின் அழகைப்பற்றியும், திறமையைப்பற்றியும், புகழ்ந்து, அந்தப் பேச்சின் இடையிடையே கலந்துவிடுவாள். உண்மையிலேயே அழகும், அறிவும் நிறைந்த சகுந்தலா, தனக்கு அண்ணியாக வரவேண்டும்' என்று மனமாற எண்ணினாள் சாரதா; அந்த ஆசையின் விளைவாகவே அண்ணனைப்பற்றிய புகழுரைகளை சகுந்தலாவின் முன் படைத்தாள்.

சாரதா நினைத்ததில் தவறில்லை; சகுந்தலாவை மணம் செய்ய விரும்பி, அந்தக் கிராமத்தில் எத்தனையோ இளங்காளைகள் போட்டியிட்டனர். சகுந்தலாவின் பேரழகு, அவர்களின் மனதை மயக்கியது. ஆம் அவள் ஒரு அழகுச்சிலை. தெய்வீக அழகு என்று சொல்வார்களே, அது

சகுந்தலாவைப்போன்ற பெண்களைக்கண்டே கூறியிருக்க வேண்டும். அழகையே தெய்வமாகக் காண்கிறார்கள் அறிஞர்கள். அழகு அமரத்துவம் என்பது ஆன்றோர் வாக்கு. சகுந்தலாவும், அந்த அமரத்துவத்தைப் பூரணமாகப் பெற்றுப் பொலிந்தாள் சகுந்தலா அழகாக இருக்கிறாள் என்று கூறுவதைவிட அழகே சகுந்தலாவாக உருவெடுத்திருக்கிறது, என்று கூறுவதே முற்றிலும் பொருத்தமாகும். கவிஞர்கள் வர்ணிப்பதைப்போல், கற்பனையை ஓடவிட்டு, அன்ன நடை, துவளும் மின்னல் இடை, பிறை நுதல், பேசும் பொற்சித்திரம், என்றெல்லாம் எடுத்துக்கூறினும் அவள் தங்க நிறம் காட்டும் கொடிபோன்ற மேனிக்கும், மாம்பழக் கன்னத்திற்கும், உவமை காட்ட முடியாது. அப்படிப்பட்ட அழகின் முழு வடிவு சகுந்தலா.

சாரதாவும் அழகிதான். சகுந்தலாவைவிட சற்று உயரம். ஆகவே சிறிது ஒல்லியாக இருப்பதுபோல் தோன்றும். அவள் அங்கங்களின் அசைவு மயிலின் சாயலை ஒத்திருக்கும். அன்னத்தின் ஆசிரியரே சாரதாவுக்கும் நடை கற்றுக்கொடுத்தாரோ எனத்தோன்றும், அவள் நடை அழகு கண்டால். சிறிது தொலைவில் இருந்து பார்ப்பவர்களுக்கு செந்தாமரை மலரில் இரு அளிகள் மொய்ப்பது போல் இருக்கும் அவள் முகத்தோற்றமும், குறு குறுவென்ற கண்களும். கண்களில் மை தீட்டாவிட்டாலும் தீட்டியதுபோன்றே காட்சி அளித்தன! என்றாலும் சாரதாவையும் சகுந்தலாவையும் சேர்ந்தாற்போல் காண்பவர்கள், சகுந்தலாவைத்தான் அழகின் சிகரமெனக் கூறுவர். அப்படி ஒரு தனிக் கவர்ச்சி, சகுந்தலாவிடம் இருந்தது.

அன்று மாலை நேரம் கிடைத்த நேரத்தைப் பயன்படுத்திக்கொண்டு தன் தோழி சாரதாவைக் காணவந்துவிட்டாள் சகுந்தலா.

குளித்துவிட்டு கூந்தலை வாளிப்பாக எடுத்து தொங்கலாக துப்பில் மட்டும் முடிந்துபோட்டு, நெற்றியில் குங்குமத் திலகமிட்டு, மஞ்சள் பூசிய முகம், பவுனைப் பிரகாசிக்க சாதாரண உடையிலும் மகா லட்சுமிபோல் வந்தாள்

சகுந்தலா! அந்த எழிய தோற்றத்திலும், கரைகாணாத கவர்ச்சி அவளிடம் ஒளிர்ந்தது.

சகுந்தலாவை வரவேற்ற சாரதா, சிரித்துக்கொண்டே பேச்சைத் தொடங்கி அப்படியே அவள் அழகைப் புகழ ஆரம்பித்துவிட்டாள்.

"அடியே, உன் தங்கமுகம் இன்று தனிக் கவர்ச்சி அளிக்கிறதே, ஏதாவது திருமணச் செய்தியா?" கிண்டல் செய்தாள் சாரதா.

"எனக்கு இப்போ அது ஒண்ணுதான் குறைச்சல்" நீண்ட பெருமூச்சுடன் பதில் சொன்னாள் சகுந்தலா.

"உனக்கு என்ன குறைச்சல்? எந்த துஷ்யந்தனுக்குக் கொடுத்துவைத்திருக்கிறதோ. உம், உன் கண்ணாடிக் கன்னம், அந்த துஷ்யந்தனின் கை நகம் பட்டு, கோடு விழாமல் பார்த்துக்கொள். அப்படி ஏதாவது விழுந்தால் நான் அந்த அடையாளத்தைப் பார்த்து உன்னை பலவிதமான கேள்விகள் கேட்பேன்", படபடவென்று பேசிவிட்டு சற்று இளைப்பாறித் திரும்பவும் பேச ஆரம்பித்தாள், சாரதா.

"உன்னிடம் கேள்விகள் கேட்க எனக்குக் கொடுத்து வைத்திருக்கிறதோ என்னமோ; நீ எங்கே போகப்போகிறாயோ, நான் எங்கே போகிறேனோ யார் கண்டார்கள்?" இத்தனை நேரமும் பொறுமையாகக் கேட்டுக்கொண்டிருந்த சகுந்தலா, பதிலுக்குப் பேசத் தொடங்கினாள். "சும்மா அளக்காதே, சாரதா என்........"

"சாரதா; எப்பொழுதும் சகுந்தலாவிடமே பேசிக் கொண்டிருந்தால் போதுமா? எனக்குப் பசி, காதை அடைக்கிறது........"

எதிர்பாராமல் திடீரென்று வந்த ஆண்குரல்-வேணுவின் குரல், சகுந்தலாவின் சொற்றொடரைத் துண்டாக வெட்டி நிறுத்தியது.

சட்'டென்று பதட்டத்துடன் எழுந்தாள் சகுந்தலா.

"மன்னிக்கவேண்டும். ஏதாவது தப்பாகப்பேசி உங்கள் பேச்சு சுவாரஸ்யத்தைக் கெடுத்துவிட்டேனே?" என்று மழுப்பினான் வேணு.

"அப்படி ஒன்றுமில்லை. உங்களுக்குத்தான் பசி. வந்தால் கோபமும், ஆத்திரமும் கூடவே வந்துவிடுமே" சிரித்துக்கொண்டே கூறினாள் சாரதா.

"சாரதா உன் சகுந்தலா, இங்கேயே இருப்பாள்; எனக்கு சாப்பாடு கொடுத்துவிட்டு உடனே வந்துவிடு" சிரித்துக்கொண்டே கூறினான் வேணு.

"அப்படியா அண்ணா சகுந்தலா இங்கேயே இருந்தால் எனக்கு அளவற்ற ஆனந்தம்தான்." குழந்தைபோல் கைகொட்டிச் சிரித்தாள் சாரதா,

சாரதாவின் சொற்களில் மறைந்துகிடந்த உட்பொருள், வேணுவுக்கும், சகுந்தலாவுக்கும் பளிச்'சென்று புரிந்துவிட்டது,

சகுந்தலாவின் உடல் ஏனோ நடுங்கியது. வெட்கத்தால் முகம் சற்றே சிவந்து வியர்த்தது.

'தன் நடுக்கத்தையும், நாணத்தையும் வேணு கவனிக்கிறானோ' என்ற சந்தேகம் எழவே அவளை அறியாமலே அவள்-மை உண்ட மலர்விழிகள் படிப்படியாக மேல்நோக்கி விரிந்தன.

வேணுவின் விழிகள், நாணத்தில் மிகைப்பட்ட சகுந்தலாவின் அழகைப் பருகிக்கொண்டிருந்தன.

மேலே விரிந்து வந்துகொண்டிருந்த சகுந்தலாவின் பார்வையோடு வேணுவின் பார்வை மோதியது; ஆண் விழிகள் வீசியப் பார்வை அலைகளை சமாளிக்க முடியாமல், சட்'டென்று ஒரு கொடியில் தரையைப்பார்த்து, தயங்கின பெண் விழிகள்.

தரையைப்பார்த்த விழிகளுக்குத் தரையோடு ஒன்றியிருந்த வேணுவின் 'பூட்ஸ்கள்' பளிச்சென்று தென்பட்டன. அந்தப் பாதரட்சைகளைக் கூர்ந்து நோக்கினாள்,

கறுப்பு நிறமான அதன் புது மெருகில் அவள் முகம், கார்முகில் நடுவில் தோன்றும் வெண்ணிலாவென விளங்குவது கண்டாள். அந்த அழகு முகத்தில் எத்தனையோ எண்ண அலைகள், உணர்ச்சிகளின் வளைவு-சுழிவுகள்.

மறுபடியும் அவள் பார்வை சிறிது சிறிதாக மேலே உயர்ந்து, வேணுவின் இடது கரத்தில் இரண்டாவது மோதிர விரலில் ஒரு மோதிரம், அதில் பொறித்திருந்த மூவேந்தர் சின்னம் 'பழ-பழ'வெனப் பிரகாசித்தது. அடுத்து மேலே ஒரு கடிகாரம். அதன் நடு முள் ஒன்றையுமே லட்சியம் செய்யாமல் சுற்றிச்சுற்றி வந்தது. அதை, வேணுவைச் சுற்றிச்சுற்றி வரும் சகுந்தலாவின் மனதிற்கு ஒப்பிடலாமா? அல்லது சகுந்தலாவைச் சுற்றி வரும் வேணுவின் மனதிற்கு ஒப்பிடலாமா? ..... இரண்டுமே பொருந்தும்.

கடிகாரத்திற்கு மேல், 'சிலேக்' என்று சொல்வார்களே அந்த சட்டையின் கை; பிறகு வேணுவின் பரந்த மார்புமீது படர்ந்தது. சட்டையின் இருபுறமும் இரு பைகள் இடது பையில் ஒரு பேனா சற்றே எட்டிப் பார்த்தது. வலது பையில் பல காகிதத்துண்டுகள். மேலும் சிறிது தலை நிமிர்ந்தாள் சகுந்தலா. தாள்வாரத்தின் வழியாகப் பாய்ந்துவரும் காற்றிற்கு ஈடுகொடுக்க முடியாமல் 'படபட'த்துக்கொண்டிருந்தது. அந்தச் சட்டையின் காலர். .......அவ்வளவுதான். அதற்குமேல் பார்ப்பதற்கு அவளுக்குத் துணிவு இல்லை. ஆகவே அதை ஈடு செய்ய, உடனே ய சாரதாவின் முகத்தைப்பார்த்தாள். இவ்வளவும் ஒரு நொடியில் நடந்தன.

வேணு, சகுந்தலாவின் நடுக்கத்தையும், பதட்டத்தையும் புரிந்து கொண்டான். தான் விளையாட்டாக ஏதோ சொல்ல, அதை சாரதா விபரீதமாக பொருள்கொண்டு சற்றும் சிந்திக்காமல் வெளியில் கூறி, சகுந்தலாவின் மனதைப் புண்படுத்தி, அதிர்ச்சியை உண்டுபண்ணிவிட்டாளோ' என்று எண்ணினான்.

"என்ன சாரதா, எந்த வேளையில் என்ன பேச வேண்டும் என்று தெரியாமல் உளறிக்கொட்டுகிறாயே. உன் தோழிக்கு எந்த நாட்டு துஷ்யந்தன் காத்திருக்கிறானே, அவன் வரும் வரைக்கும் இங்கேதானே இருப்பாள்." என்று சாரதாவைக் கண்டிப்பதுபோல், பேசி, சிறிது சமாளித்தான் வேணு.

'நீங்கள் சும்மா இருங்கள் அண்ணா; என் தோழியை நான் ஏதுவேண்டுமானாலும் சொல்லுவேன். அதற்காக நீங்கள் வருந்தவேண்டாம்" என்று பொய்க்கோபத்தில் செல்லமாக அண்ணாவை மடக்கிவிட்டு, சகுந்தலாவின் முகத்தைப்பார்த்து, அடி பைத்தியம்; ஏன் இப்படி 'நடு-நடு'ன்னு நடுங்குறே? என் அண்ணாவைப்பார்த்தா? நீ இப்பத்தான் அண்ணாவைப் பார்க்கிறயாக்கும்? ஏதோ புதுப் பெண் மாதிரி வெட்கப்படுறியே......இரு, அண்ணாவுக்கு சாப்பாடு கொடுத்துவிட்டு ஒரு நொடியில் வந்துவிடுகிறேன்' என்றாள் சாரதா.

சகுந்தலாவின் நாணம் 'வர-வர' அதிகப்பட்டதே தவிர குறையவில்லை அவள் வெட்க உணர்ச்சி கால்களுக்கு சூடேற்றி வெளியில் இழுத்தது.

"நான் போயிட்டு வரேன் சாரதா. சித்தி தேடிக் கொண்டே இருப்பாள்" என்று கூறிவிட்டு சாரதாவின் பதிலுக்காகக்கூட காத்து நிற்காமல், குனிந்த தலையுடன் வாசல் வரைக்கும் போய், சட்டென்று இருவாமீதும் ஒரு பார்வையை வீசிவிட்டு, மானாக ஓடி மறைந்தாள் சகுந்தலா.

சகுந்தலாவின் பார்வை அலைகள், வேணுவின் இருதயத்தை தூண்டில் முள்போல் சுண்டி இழுத்தது. கையில் கிடைத்த புள்ளிமான் குட்டி ஒன்று, விடுபட்டுத் துள்ளி ஓடுவதுபோன்ற உணர்ச்சி, அவன் உள்ளத்தை வருடியது. உள்ளத்தின் சூடு பெருமூச்சாக வெளிவந்து ஏக்கத்தை வெளிப்படுத்தி எங்கும் நிறைந்த காற்றோடு கலந்தது.

"அண்ணு" என்ற சாரதாவின் குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினுன் வேணு

"..........உம்......சரி சாப்பாடு போடு; பசிக்கிறது" என்று சொல்லிக்கொண்டே திரும்பி நடந்தான். ஆனுல் அவன் மனக்குதிரை மட்டும் கடிவாளம் இல்லாமல் கண்மூடித்தனமாக சகுந்தலாவின் பின்னுல் போய்க்கொண்டிருந்தது.



# 5. சகுந்தலாவின் நிலை

வேணுவையும், சாரதாவையும் அவர்கள் குடும்பத்தையும் சுருக்கமாக ஓரளவு அறிந்துகொண்டோம். அடுத்து, வேணுவின் இதயத்தைத் தன்னேடு எடுத்துச் செல்லும் சகுந்தலாவைப்பற்றி சுருக்கமாக அறிந்துகொள்வோம்.

பிறவியிலேயே நண்டுப்பிறவியாகப் பிறந்தாள் சகுந்தலா! அதாவது, நண்டுக்குஞ்சுகள் வெளிவரும்போது, தன் தாயைக் கொன்றுவிட்டு (முதுகு வழியாக) எப்படி வெளிவருகிறதோ, அப்படி பிறந்த உடனேயே தன் தாயைத்

நின்றுவிட்டாள் சகுந்தலா. 'தாயில்லாப்பிள்ளை' என்ற பட்டத்துடனே, ஒவ்வொருவரிடமும் "தரித்திரம், பிறந்த உடன் தாயைத் தின்றவள், மூதேவி என்ற 'செல்லப் பெயர்'களை மனமாற வரவேற்று வளர்ந்து, பிறகு தன் எட்டாவது வயதில் தந்தையையும் இழந்து 'அனாதை' என்ற பட்டத்துடன் வளர்ந்த தங்கப்பதுமையே சகுந்தலா.

கனகாம்பரம்-சகுந்தலாவின் தந்தை தன் ஒரே மகளை அனாதையாக்கினாலும் பிச்சைக்காரி ஆக்கவில்லை, தனக் கிருந்த அரை ஏக்கர் நிலத்தையும், தன் மனைவியின் சகோதரியான சத்தியவாணியிடம் ஒப்புவித்து, சகுந்தலா வையும் அவள் அடைக்கலத்தில் விட்டுத்தான் கண் களை மூடினார்.

அன்றுமுதல் சத்தியவாணியின்-வளர்ப்பு மகள் ஆனாள் சகுந்தலா.

சத்தியவாணிக்குப் பெயர் வைத்தவர்கள் இப்பொ ழுது அவளைப் பார்த்தால், அவள் பெயருக்கு முன்னால் 'அ' என்ற எழுத்தையும், தயங்காமல் இணைத்தே அழைப் பார்கள். குழந்தையாக இருக்கும்போது அறியாத்தனமாக வைத்த அந்த அழகான பெயருக்கும், தற்போதுள்ள சத் தியவாணிக்கும் சம்பந்தமே இல்லை. இரண்டு கண்களும் தெரியாதவனுக்கு நல்ல கண்ணுப்பிள்ளை'ன்னு பெயர் வைத்ததுபோல், எப்பொழுதும் அழுமூஞ்சியாக இருப்ப வனுக்கு 'ஆனந்தன்' என்று பெயர் வைத்ததுபோல், இந்த அசத்தியவாணிக்கும், சத்தியவாணி என்ற பெயரை வைத்து, வருங்கால நிலையை-குணத்தை அறியாமல், பாபத் தைக் கட்டிக்கொண்டார்கள், பரிதாபத்திற்குரியவர்கள். சிலர் வளர்ந்தபின் கொடூரமாக மாறுவார்கள் என்பதை யார்தான் உணரமுடியும்? – சத்தியவாணி பற்றி தற் பொழுது இவ்வளவு அறிமுகம் போதும் என எண்ணு கிறேன்.

இப்படியான (அ) சத்தியவாணியின் கணவர்தான் கணக்குப்பிள்ளை—கருணாகரன்.

அதாவது, அந்தக் கிராமத்தில் பெரிய நெல் வியாபாரியான ஆத்மநாதரின் கணக்குப்பிள்ளைதான் கருணாகரன்.

ஆத்மநாதரைப்பற்றி ஒரு சில அறிமுக வார்த்தைகள்: அக்கிராமத்து மக்களின் உழைப்பை உறிஞ்சிக் கொழுத்து வருகிற ஒரு மனித உருக்கொண்ட ஏதோ ஒன்று! 'பணமே எல்லாம்' என்ற எண்ணத்தில், பணத்தை பூதம் காப்பதுபோல் காத்து, சேர்த்து வருகிறவர்.

இப்படியான-ஆத்மாவே இல்லாத ஆத்மநாதபிள்ளை, ஏதோ "கழிக்கவரும் நாய்க்கு ஒரு கருப்புக்கட்டித்துண்டு" என்பதுபோல், கருணாகரனுக்கு, அவ்வூர் அறுவடை வேளை தோறும், (ஆறுமாதத்திற்கு ஒரு முறை) ஆறு கோட்டை நெல் படி (சம்பளம்) அளந்தார்.

ஆத்மநாதரின் நெல்வியாபாரம் எப்படி என்றால், அக் கிராமத்திலும், சுற்றிலுமுள்ள கிராமங்களிலும், வாழும் விவசாயிகளுக்கு, அறுவடைக்கு முன்பே பணத்தேவை வந்துவிடும். அந்தத் தேவையை - ஏழை விவசாயிகளின் ஏழ்மையை சாதகமாக்கிக்கொண்டு, தன் வியாபாரத்திற்கு முதலீடு செய்யத் தொடங்கிவிடுவார் ஆத்மநாதபிள்ளை.

அதாவது, அறுவடை வேளையில் ஒரு கோட்டை நெல், முப்பது ரூபாய்க்கு விற்பனையாகுமென்றால், அறுவடைக்கு ஒரு மாதத்திற்கு முன், கோட்டைக்கு பதினைந்து ரூபாய் நிர்ணயத்தில் எல்லா விவசாயிகளுக்கும் ரூபாய் கொடுத்துவிடுவார். பிறகு அறுவடை வேளையில், கருணாகரன் என்ற காலகண்டனுடன் களத்திற்கே சென்று, விளைச்சலில் முக்கால் பாகத்தையும் அளந்து கொண்டு வந்துவிடுவார்.

நெல்லை அளந்து கட்டுவது கருணாகரன்தான். அந்த வேளையில் கருணாகரன் நிற்கும் நிலையையும், அருகில் நிற்கும் தன் முதலாளிக்காக, மரைக்காலை, நெற்குவியலினுள் நன்றாகத் திணித்து, இடது கரத்தால் பிடித்துக்கொண்டு வலது கரத்தால் நெல்லை வாரி, அமுக்கி, அளக்கும் அள

வையும் கண்டு இரவு பகலென்று பாராமல் பாடுபட்ட உழவர்களின் உள்ளமெல்லாம் பற்றி எரியும். என்றாலும் செய்வதறியாது சிலையாக நிற்பார்கள், அந்த உத்தமர்கள்.

இந்தக் கொடுமையை உணர்ந்த வேணு, சில வேளைகளில் ஆத்மநாதரை நேரில் கண்டித்ததுண்டு ஆனால் கொடுமை குறைந்ததில்லை வேணுவிடம், "இதெல்லாம் வியாபார தந்திரம்" என்று கூறி சமாளித்துவிட்டு, சிதம்பரநாதனைவக்கண்டு, ஒன்றுக்குப் பத்தாகக்கூறி, தந்தைக்கும், மகனுக்கும் பெரிய கலகத்தையே உண்டுபண்ணிவிட்டார் ஆத்மநாதபிள்ளை

வேணுவைத்தவிர, ஆத்மநாதரை அவர் பகற்கொள்ளை வியாபாரத்தைக் கண்டிப்பதற்கு அந்தக் கிராமத்தில் வேறு யார் இருக்கிறார்கள்? அம்மாதிரி கிராமங்களில்தான், இம்மாதிரிய ஆத்மநாதர்களின் வியாபாரம் பழக்கமாகிவிட்டதே!

இனி கதைக்கு வருவோம்.

இப்படியான—கல்நெஞ்சர் ஆத்மநாதரின் கணக்குப் பிள்ளையாகவும், பிரதம காரியதரிசியாகவும் இருக்கும் கருணாகரன், தன் மனைவி சத்தியவாணிக்குமட்டும் அடிமைக் கடிமைதான். கீரிப்பிள்ளையைக்கண்ட கிழப்பாம்புபோல், தன் மனைவியைக்கண்டதும் அடங்கி ஒடுங்கிவிடுவான் கருணாகரன்.

கொண்ட கணவனைத் தன் மனம்போல் ஆட்டிவைத்து முழு அதிகார ஆட்சி நடத்துகிற சத்தியவாணிக்கு சகுந்தலா ஒரு பொருட்டாக முடியுமா?

அந்த (அ)சத்தியவாணியிடம் பேதை சகுந்தலா அனுபவிக்கும் மரண வேதனை சொல்லி விளக்க முடியாது. அதிகாலையில் எழுந்து, வாசல் பெருக்கி, கோலம் இடுவதிலிருந்து, மறுநாள் தோசைக்கு மாவு அரைக்கிறது வரை ஒரு வீட்டு வேலை முழுவதையும், சகுந்தலாவே செய்யவேண்டும். இடையில் தோட்டத்திற்கும் குடம் குடமாகத் தண்ணீர் இறைத்துக் கொட்டவேண்டும்.

அந்தனை வேலைகளையும் மனம் கோணுது செய்து விட்டு, இடையிடையே சித்தியின் சொல் அம்புகளையும் மனமாற ஏற்றுக்கொள்வாள். மாலையில் கோயிலுக்குப் போகும்பொழுதும், தண்ணீர் எடுக்கும்பொழுதும், ஒரு சில வினாடிகளை மீதப்படுத்தி தோழி சாரதாவைக் கண்டு சற்று மகிழ்ச்சியோடு பேசி தன் மனதை சாந்தி செய்து கொள்வாள்.

எப்போதாவது சில வேளைகளில் தன்னைப்பற்றியும் தன் நிலையைப்பற்றியும் தன் எதிர்கால வாழ்க்கையைப்பற்றியும் எண்ணி விதவிதமாகக் கற்பனை செய்து ஏங்குவாள், சகுந்தலா.

தான் அனுபவிக்கிற நரக வேதனை பூண்டோடு ஒழிய வேண்டுமானுல் ஒரு நல்ல ஆண்மகனுக்கு மனைவியாகி, இந்த வீட்டிலிருந்து விடுதலையாகவேண்டும்; என்ற முடிவுக்கே கொண்டுவரும், அவள் சிந்தனைசக்தி; இந்த முடிவுக்குமேல், சிந்திக்க அவளால் இயலவில்லை.

அந்த நல்ல நாள் வரும் வரைக்கும் இந்த அடங் காப்பிடாரியிடம் சித்திரவதையை அனுபவித்தே ஆக வேண்டும்; என்று தன்னையே சமாதானம் செய்துகொள் வாள்.

"மலடி சத்தியவாணி, அந்த சகுந்தலாவை எத்தனை துன்பப்படுத்துகிறுள் ..பெற்றுல்தானே 'தாயன்பு' என்ற உணர்ச்சியாவது இருக்கும். என்றெல்லாம் அக்கம் பக்கத்து வீட்டார்கள் பல வேளைகளில் வாய்விட்டுக்கூறி வருந்துவதுண்டு. என்றுலும் சத்தியவாணியை நேரில் கண்டுவிட்டால், வருந்துகிறவர்களின் வாய் ஒரு வார்த்தை கூட பேசத்துணியாது; அந்தனை அச்சம்.

இம்மாதிரி அடங்காப்பிடாரி சிற்றன்னையிடம், நாளொரு பயமும், பொழுதொரு ஏக்கமுமாகத் தன் வாழ்நாளைக் கடத்தி வந்தாள் சகுந்தலா.

# 6. நினைத்ததும் நடந்ததும்.

மாலை மணி ஐந்துக்கு மேல் இருக்காது. சகுந்தலாவின் உயிர்த்தோழி சாரதா, சத்தியவாணியின் வீட்டிற்கு வந்தாள். சகுந்தலா, சாரதாவின் வீட்டிற்குப் போவது போல், சாரதா, அடிக்கடி இங்கு வருவதில்லை. ஆகவே சத்தியவாணிக்குச் சிறிது ஆச்சரியமாக இருந்தது! சகுந்தலாவுக்கோ, ஆச்சரியத்தோடு ஆனந்தமும், கலந்தது. ஏதோ முக்கியமான விஷயமும் இருக்கவேண்டுமென்று உணர்ந்துகொண்டாள்.

வீட்டிற்குள் வந்த சாரதா, சற்று நேரம் எதையோ பேசிவிட்டு முடிவில், சகுந்தலாவை, "ஒரு மணி நேரத்திற்கு என்னோடு அனுப்பி வையுங்கள்" என்று வேண்டுகோள் விடுத்தாள் சத்தியவாணியிடம்.

சகுந்தலா கேட்ட வேளை நல்லவேளை, ஆகவே சத்தியவாணியும் "சரி அழைத்துக்கொண்டு போயேன்" என்று அனுமதி கொடுத்துவிட்டு, "சீக்கிரம் அனுப்பிவிடு வீட்டு வேலைகள் ஏராளமாகக் கிடக்கிறது" என்று ஒரு ஆணையும் பிறப்பித்தாள்.

சாரதாவின் வீட்டிற்கு வந்தபிறகுதான், தன்னைத் தன் தோழி அழைத்து வந்ததின் காரணத்தை சரியாகப் புரிந்துகொண்டாள், சகுந்தலா.

தோழிகள் இருவரும், 'கல கல' வெனப் பேசிக்கொண்டும், காதோடு காதாக ஏதேதோ முணுமுணுத்துக்கொண்டும் ஆனந்தமாகப் பொழுதைக் கழித்துக்கொண்டிருந்தார்கள்.

பெரிய விஷயத்தை முடிக்கவிருப்பவன்போல், அடிக்கொருதரம் அங்குமிங்குமாக நடந்துகொண்டிருந்தான் வேணு இடையிடையே சாரதாவிடம் பேசுவதுபோல் வந்து, சகுந்தலாவிடமும் தன் விழிகளால் பேசிவிட்டுப் போய்விடுவான்.

சிதம்பரநாதனும் சிறிது பரபரப்புடன் காணப்பட்டார். என்றாலும் அவருடைய வாய் "முருகா—முருகா" என முணுமுணுக்கத் தவறவில்லை. அதோடு தன் மகள் சாரதாவுக்கு விதவிதமான நகைகளை எடுத்துக் கொடுத்துக்கொண்டிருந்தார்.

சாரதாவைத் தன்னால் எந்த அளவுக்கு அழகுபடுத்த முடியுமோ அந்த அளவுக்கு அழகுபடுத்திக்கொண்டிருந்தாள் சகுந்தலா. தோழிகள் இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துச் சிரிப்பதும், பிறகு எதையோ நினைத்துப் பெருமூச்சுவிட்டு சிறிது வருத்தவதுமாக இருந்தார்கள். இத்தனைக்கும் மொத்தமாக ஒரே காரணம்:-

இன்னும் அரை மணி நேரத்தில் பட்டணத்திலிருந்து, சாரதாவைப் பெண் பார்க்கப் பிள்ளை வீட்டார் வரவிருக்கிறார்கள் என்பதுதான்.

மாப்பிள்ளையாக வரவிருக்கும் பையன் சென்னையில் "புயல்" பத்திரிகையில் உதவி ஆசிரியராம். பி. ஏ. வரைக்கும் படித்திருக்கிறாராம். நல்ல அழகான வாலிபனும் என்றெல்லாம் பக்கத்திலிருப்போர் பலவிதமாகப் பேசிக்கொண்டார்கள். இவற்றையெல்லாம் கேட்ட சாரதாவின் இதய நரம்புகளிலே இன்ப உணர்ச்சிப் பரவியது.

"பையன், நம்ம வேணுவோடு படித்தவன்தான்...... .. அவன்தான் இந்த ஏற்பாட்டைச் செய்தான்" என்று பெருமிதத்தோடு தன் உறவினர்களிடம் பேசிக்கொண்டார் சிதம்பரநாதன்.

அடிக்கொருதரம் வேணுவை சபித்துக்கொண்டும், வைதுகொண்டுமிருந்த சிதம்பரநாதனுவின் மனம், இந்த சமயத்தில் மனமாற வாழ்த்தியது.

வேளை நெருங்கிவிட்டது. எல்லா ஏற்பாடுகளும் முடிந்துவிட்டன. சாரதா சொர்ணப் பிழம்பாக ஒளி வீசினாள்.

வாசலில் எட்டிப்பார்த்த சிதம்பரநாதன், "இந்தாம்மா சகுந்தலா, அவர்கள் வரும் வேளையாகிவிட்டது. தெரு

வாசலை சுத்தப்படுத்தி, ''பளிச்'சென்று ஒரு கோலம் போடு'' என்றார்.

சட்'டென்று எழுந்து, வீட்டினுள்ச் சென்று கோலப் பொடி இருக்கும் டப்பியைக் கையில் எடுத்துக்கொண்டாள் சகுந்தலா.

"நாட்டுக்கேத்த நங்கை . அவள் பேரு நல்ல தங்கை ..பூ.. மிக செய்திடுவாள் புண்ணியங்கள் தேடிடுவாள்" என்ற பாடலை முணுமுணுத்தபடியே அப்பொழுதிருந்த உற்சாகத்தில் சிறு குழந்தையாக மாறி, வாசலுக்குத் துள்ளியோடி வந்து கோலமிட ஆரம்பித்தாள்.

அத்தனையும் கவனித்துக்கொண்டிருந்த வேணுவின் இதயப் பறவை, இன்பவானில் பறந்தது. 'உம், நமக்குத் தான் இத்தனை ஆசை. ஆனால் சகுந்தலாவின் மனதில் எனக்கு இடமுண்டுமோ?...... கண்டிப்பாக உண்டு...... சற்று முன்பு கூட என்னை அவள் பார்த்த பார்வை....... எத்தனைப் பாசம் நிறைந்திருந்தது; அப்படியிருந்தும், ஒரு வார்த்தைகூடப் பேசவில்லையே. எத்தனையோ நாட்கள் வெறும் பார்வையிலேயே கழிகிறதே; பட்டணத்துப் பெண்கள் என்றால், இதற்குள் என்னவெல்லாம் பேசியிருப்பார்கள்; எத்தனை பூங்காக்களில்-தியேட்டர்களில் சந்தித்திருக்கலாம்! காதல் கடிதங்களே மலையாகக் குவிந்திருக்குமே.......ஆனால சகுந்தலா கிராமத்துப் பெண் அல்லவா? ஆதலால்தான் அடக்கத்தை ஆபரணமாக அணிந்துகொண்டாள். என்றாலும் என்மீது வைத்திருக்கும், அன்பு-ஆகத்தின் அன்பு அவள் முகத்தில் தெரிகிறதே......அது ஒன்று போதாதா?......'' பலவிதக் கேள்விகளையும், பதில்களையும் தன் மனதிற்குள்ளேயே போட்டு குழம்பிக்கொண்டான் வேணு. அவன் மார்பை நிமிர்த்திவிட்டு, வெளி வந்த பெருமூச்சு சிந்தனையின் முடிவைத் தெரிவித்து விட்டு காற்றோடு கலந்தது.

அழகாக ஒரு கோலம் போட்டு முடித்து அதை ரசித்தபடியே தலை நிமிர்ந்து எழுந்த சகுந்தலா எதிர்

பாராத விதமாகத் தன்மீது விழுந்த பார்வை அலைகளால் தாக்குண்டு, திகைத்து சட்'டெனக் குனிந்துவிட்டாள்.

அங்கு:

வாசிபத்தின் வாயிற்படியில் நிற்கும் ஒரு வாலிபன்! அந்த அழகனின் விழிகள் சற்றும் இமைக்காமல் சகுந்தலாவை விழுங்கிக்கொண்டிருந்தன. அவன் ஆடாது-அசையாது நின்றாலும், நன்றாக வாரி விடப்பட்டிருந்த அவனுடைய சுருளான தலை மயிர்களில் ஒன்றிரண்டு நெற்றியில் விழுந்து, கிராமத்து மாலைத்தென்றலின் வயப்பட்டு ஆடி அசைந்துகொண்டிருந்தன.

தாமரை மலரைக்கண்ட வண்டாக, தமயந்தியின் அழகை அறிந்த நளனாக சகுந்தலையைக்கண்ட துஷ்யந்தனாக, இந்தக் கிராமத்து சகுந்தலாவைதக்கண்டு, இமைக்க மறந்த இமைகளையும் மறந்து நின்றான் அவ்'வாலிபன்.

யாரோ ஒருவன் தன்னைப் பார்வையால் படிப்படியாக விழுங்குவதை உணர்ந்த சகுந்தலா வெட்கம் மேலிட குனிந்த தலை நிமிராமலே வீட்டினுள் ஓடி மறைந்தாள்.

வந்திருப்போர் பிள்ளை வீட்டார் என்பதை அறிந்த சிதம்பரநாதனும், வேணுவும் எதிர் சென்று வரவேற்றார்கள்.

எல்லோரும் முன் கூடத்திற்கு அடுத்து அமைந்திருக்கும் பெரிய அறையில் வந்து அமர்ந்தார்கள்.

வேணுவும், மணியும்-அதாவது மாப்பிள்ளையாக வர வேண்டிய வாலிபனும் சில நிமிடங்கள் ஆனந்தமாகப் பேசிக்கொண்டார்கள்.

"குழந்தையைக் கூப்பிடுங்களேன்" என்றார் மணியின் தந்தை சொக்கலிங்கனார்.

சிதம்பரநாதனு, சாரதாவை அழைத்தார்.

வேணு, மணியைப் பார்த்து சிரித்துக்கொண்டே வீட்டினுள் சென்றான்.

பாராத விதமாகத் தன்மீது விழுந்த பார்வை அலைகளால் தாக்குண்டு, திகைத்து சட்'டெனக் குனிந்துவிட்டாள்.

அங்கு:

வாலிபத்தின் வாயிற்படியில் நிற்கும் ஒரு வாலிபன்! அந்த அழகனின் விழிகள் சற்றும் இமைக்காமல் சகுந்தலாவை விழுங்கிக்கொண்டிருந்தன. அவன் ஆடாது-அசையாது நின்றாலும், நன்றாக வாரி விடப்பட்டிருந்த அவனுடைய சுருளான தலை மயிர்களில் ஒன்றிரண்டு நெற்றியில் விழுந்து, கிராமத்து மாலைத்தென்றலின் வயப்பட்டு ஆடி அலைந்துகொண்டிருந்தன.

தாமரை மலரைக்கண்ட வண்டாக, தமயந்தியின் அழகை அறிந்த நளனாக சகுந்தலையைக்கண்ட துஷ்யந்தனாக, இந்தக் கிராமத்து சகுந்தலாவைதக்கண்டு, இமைக்க மறந்த இமைகளையும் மறந்து நின்றான் அவ்'வாலிபன்.

யாரோ ஒருவன் தன்னைப் பார்வையால் படிப்படியாக விழுங்குவதை உணர்ந்த சகுந்தலா வெட்கம் மேலிட குனிந்த தலை நிமிராமலே வீட்டினுள் ஓடி மறைந்தாள்.

வந்திருப்போர் பிள்ளை வீட்டார் என்பதை அறிந்த சிதம்பரதாணுவும், வேணுவும் எதிர் சென்று வரவேற்றார்கள்.

எல்லோரும் முன் கூடத்திற்கு அடுத்து அமைந்திருக்கும் பெரிய அறையில் வந்து அமர்ந்தார்கள்.

வேணுவும், மணியும்-அதாவது மாப்பிள்ளையாக வர வேண்டிய வாலிபனும் சில நிமிடங்கள் ஆனந்தமாகப் பேசிக்கொண்டார்கள்.

"குழந்தையைக் கூப்பிடுங்களேன்" என்றார் மணியின் தந்தை சொக்கலிங்கனார்.

சிதம்பரதாணு, சாரதாவை அழைத்தார்.

வேணு, மணியைப் பார்த்து சிரித்துக்கொண்டே வீட்டினுள் சென்றான்.

சொக்கலிங்கனர், 'குழந்தை' என்று சொன்னதைக் கேட்டுச் சிரிப்பதுபோல் இருந்தது அவர்களின் அடக்கச் சிரிப்பு.

கோலப்பொடி டப்பியை முன்பு இருந்த அறையில் கொண்டு வைத்துவிட்டுத் திரும்பிய சகுந்தலாவின் மனம், ஏனே, 'படபட'வென அடித்துக்கொண்டது.

கொடும் மழையில் அகப்பட்டத் தாமரை மலர்போல் அவள் முகம் பலவித உணர்ச்சிகளால் தாக்குண்டு, முத்து முத்தாக வியர்த்துக்கொட்டியது.

வியர்வையைத் துடைப்பதற்காகத் தன் சேலைத் தலைப்பை எடுத்தாள் சகுந்தலா.

"என்ன சகுந்தலா, இந்த மாலை வேளையில் உனக்கு இப்படி வியர்க்கிறதே? .....இந்தா இதனுல் துடைத்துக் கொள்" என்று தன் கைக்குட்டையை நீட்டினன் வேணு. அவன் அன்றுதான்-எப்படியோ முதன் முறையாகத் துணிந்து பேசிவிட்டான்.

வேணுவின் திடீர் வருகையும், அன்பான சொற்களையும் கேட்ட சகுந்தலா, மேலும் அதிர்ச்சி அடைந்தாளே தவிர ஆனந்தப்படவில்லை.

"எனக்கு வேண்டாம்..... என்ன இது.......இப்படியெல்லாம்? நீங்களா இப்படி நடந்துகொள்வது? நான் தனியாக இருக்கும்பொழுது........ இதெல்லாம் நன்ருக இருக்கிறதா?......" தடுமாற்றத்துடன் சொற்களை உதிர்த்தாள் சகுந்தலா.

"அஞ்சாதே சகுந்தலா, உனக்கு என்மீது அன்பு இல்லாவிட்டாலும், இரக்கமாவது இருக்குமெனநம்பினேன். இரக்கமும் இல்லாவிட்டால் இப்பொழுதே கூறிவிடு. நீ இருக்கும் திசையில்கூட திரும்பமாட்டேன். உன்னை தொந்தரவு செய்ததற்கு மன்னித்துவிடு; சொல் சகுந்தலா..... ..வீணுக மௌனம் சாதித்து என்னை ஏன் வதைக்கிருய்?

"......சொல்வதற்கு என்ன இருக்கிறது. நீங்கள் நினைப்பதுபோல் என்றால் நினைக்க முடியவில்லை. ஏனென்றால் அது நடக்காது அதை உணர்ந்துதான் நான் ஆத்திரத்தில் 'படபட'வென்று பேசிவிட்டேன். அல்லாமல் உங்களிடம் எனக்கு எந்தவித வெறுப்பும் கிடையாது. நீங்கள் என்னிடம் செலுத்தும் அன்புக்கு நான் பாத்திரமாகிவிட்டால், அது என்னுடைய பெரும் பேறு நான் கொடுத்துவைத்திருந்தால் உங்கள்........." அதற்குமேல் அவளால் பேச முடியவில்லை.

தொடர்ந்து, "சகுந்தலா" என்று யாரோ அழைக்கும் குரலும் கேட்கவே பார்வையால் விடை பெற்று அங்கிருந்து அகல விரும்பினாள் சகுந்தலா;

"சகுந்தலா நீ போக விரும்புகிறாய்; போ. நீ சொன்ன அந்த ஒரு வார்த்தை மட்டும் போதும். என் இதயக் கோயிலில் அணையாத தீபமாக உன்னை வைத்துக் காப்பாற்றுவேன்". என்று கூறி விலகி நின்றான் வேணு.

நீர் நிறைந்த விழிகளைத் துடைத்துக்கொண்டு, வேணுவின் அன்பு பார்வையிலிருந்து விடுபட்டு சாரதாவின் அறைக்குள் வந்தாள் சகுந்தலா.

மணியின் முன்னால், சந்தணப் பதுமைபோல் வந்து நின்ற சாரதாவைக் கண்டதும், மணியின் தந்தை-சொக்கலிங்கனார், மன நிறைவோடு தன் மகனைப் பார்த்தார். ஆனால் மணியின் கண்கள், வேறு எங்கேயோ சுற்றிச் சுழன்றன.

"இந்தாம்மா சாரதா, பெரியவாளுக்கு வணக்கம் செய்துக்கோ"

சிதம்பரநாதனு கூறிமுடிக்குமுன், தன் தந்தையின் சொல்லைத் தலைமேல் தாங்கி, எல்லோருக்கும் வணக்கம் செய்துவிட்டு, எழுந்து உள்ளே போய்விட்டாள் சாரதா,

"பையனுக்குத் தாயார் இல்லை. நான் ஊரில்தான் இருக்கிறேன். ஏனென்றால் எனக்குச் சென்னையிலிருப்

பது பிடிக்கவில்லை. எங்கு பார்த்தாலும்-யாரைப்பார்த்தாலும் ஒரே வேகம். பேருதான் பட்டணம். அமைதியின் நிற சொல்லையே கேட்கமுடியாது. பையன் வேலையில் இருப்பதால் அங்கே இருக்கிறான். உணவு விடுதியில் சாப்பிட்டு உடம்பைக் கெடுத்துக்கொள்கிறான். மணமானதும் மனைவியை அழைத்துக்கொண்டு போவான்". என்றெல்லாம் சிதம்பரநாதனுவிடம் அளந்துகொண்டிருந்த தன் தந்தையின் காலில் இலேசாக சுறண்டி, அவர் பார்வையைத் தன் பககமாக இழுத்து, காதிலும் எதையோ கூறினன் மணி.

மணியின் சொற்களைக் காதில் வாங்கிய சொக்கலிங்கனாின் முகம் சிறிதே மாறியது. அதைத் திமையாக சமாளித்துக்கொண்டு, "ஆமா......நாங்கள் வரும்போது வாசலில் கோலமிட்டுக்கொண்டிருந்தது உங்கள் பெண் தானே?" சொக்கலிங்கனார் என்னவோ சாதாரணமாகத் தான் கேட்டார். ஆனால் அந்த ஒரு கேள்வி, இராம பாணம்போல் பெருகி, பக்கமாக இருந்த சிதம்பரநாதனுவையும், அடுத்தாற்போல் நின்ற வேணுவையும், உள்ளே இருந்த சகுந்தலா-சாரதா மற்றும் வந்திருந்த அனைவரையும் கடுமையாகத் தாக்கியது.

என்றாலும், சகுந்தலாவின் உள்ளத்தைத்தான் மிகக் கடுமையாகத் தாக்கியது. ஏற்கனவே புண்பட்டிருந்த-கலங்கி இருந்த சகுந்தலாவின் மனம், இக் கேள்வியால் மிகவும் துன்பமடைந்தது.

சிறிது சமாளித்துக்கொண்டு, பேச்சை ஆரம்பித்தார் சிதம்பரநாதனு. 'இல்லே அந்தப் பெண் வந்து இதே தெருதான். நம்ம பெண்ணுடைய தோழி" அவர் குரல் ஏனே நடுங்கிக் குழம்பியது.

சரி நாங்கள் ஊருக்குப்போனதும் கடிதம் எழுதுகிறோம். பட்டணத்துப் பாணியில், பிள்ளை வீட்டாருக்கே உரிய தனி ஆணவத்தில் கூறிவிட்டுப் புறப்பட்டார்கள், பிள்ளை வீட்டார்கள்.

சிதம்பரநாதனு சிலையாகிவிட்டார். வேணுவின் உள்ளத்தில், விருப்பமான எதையோ ஒன்றை இழந்துவிடுவோமா? என்ற ஏக்க உணர்ச்சி, சாரதாவின் மனம் அலைகடல் துரும்பானது. சகுந்தலாவுக்கோ ஆயிரம் தேள்கள் கொட்டிக் கொழுத்துவதுபோல் உடலெல்லாம் பற்றி எரிந்தது. எவர் முகத்தையுமே பார்க்கத் துணியாமல் இரு கைகளாலும், தலையை இறுக்கப் பிடித்துக்கொண்டு, கொந்தளிக்கும் கடலில் சிக்கித் தவிக்கும் பாய்மரக் கப்பலின் கம்பத்தில் இருந்து அவதியுறும் சிறகொடிந்த பறவை, நெருக்கடியை உணர்ந்து பறந்து செல்வதுபோல் சிதம்பரநாதனின் வீட்டிலிருந்து வெளியேறினாள் சகுந்தலா!

பல விநாடிகள் அந்த வீட்டை அமைதி ஆட்சி செய்தது.

---

# 7. படித்தாளோ-இல்லையோ!

ஆதவன் மேற்குத் திசையில் அடைந்துகொண்டிருந்தான். அதன் அறிகுறியாக மேற்கே அடிவானம் செக்கச் செவேலென்று காட்சி அளித்தது. புள்ளினங்கள் தங்கள் புகலிடம் நோக்கி கூட்டங்கூட்டமாக விரைந்துகொண்டிருந்தன.

இரவெனும் அரக்கன் மெள்ள, மெள்ள தன் கறுப் பாடையைப் போர்த்திவிட்டான்.

சிவஞானபுரத்தில், அனேகமாக எல்லா வீட்டு வாசல்களுமே பூட்டப்பட்டிருந்தன. காரணம்?

அன்று ஊர் அம்மன்கோவில் கொடை. ஆண்களும், பெண்களுமாக அக் கிராமத்து மக்களெல்லோரும் ஒரே திரளாகக் கோயிலில் குழுமியிருந்தார்கள்.

சிறுவர்கள் பலர் கோயிலின் சுற்றுப்புற வெளியில், "ஸ்ஸோ"வென்று இரைந்துகொண்டிருக்கும் 'பெட்ரோமாக்ஸ்' விளக்கொளியில் 'சடுகுடு' போன்ற பல விளையாட்டுக்களில் ஈடுபட்டிருந்தார்கள்.

ஊருக்குப் பெரியவர்கள் என்ற நிலையிலிருக்கும் ஒரு சிலர், கோயிலின் உள் தாள்வாரத்தில் வட்டமாகக் கூடியிருந்து பற்பல திட்டங்கள் வகுத்துக்கொண்டிருந்தார்கள். பொதுவாக, எல்லோர் முகத்திலும், மகிழ்ச்சி கலந்த பக்தி உணர்ச்சியே தாண்டவமாடியது

ஆனால் இத்தகைய கோலாகல கொண்டாட்டங்களை மறந்து, வீட்டின் ஒரு மூலையில் முடங்கி, மனதில் நிறைந்திருந்த வேதனை கண்ணீராகப் பாய்ந்து கரைய, சோகமே வடிவாக ஏங்கிக்கொண்டிருந்தாள் சகுந்தலா.

ஆற்றில் பொங்கிவரும் பெருவெள்ளத்தின் சுழியில் அகப்பட்ட ஆலிலைச் சருகுபோல், சுற்றிச் சுழன்று தவித்தது சகுந்தலாவின் உள்ளம். இனம் தெரியாத-குறிப்பிட்டுச் சொல்லமுடியாத கவலை உணர்ச்சி அந்த இளம் உள்ளத்தைக் கறையானக அரித்துக்கொண்டிருந்தது.

குற்றமே செய்யாதவர்கள், சந்தர்ப்பவசத்தால், பிறர் கண்களுக்கு குற்றவாளிகளாகிவிடுவதும், குற்றம் புரிந்தவர்கள் நல்லவர்களாகிவிடுவதும் இயற்கையின் திருவிளையாடல்களில் ஒன்றல்லவா?

ஆனால் சகுந்தலா அப்படி எண்ணி ஆறுதல் அடையவில்லை-அடைய முடியவில்லை. சிதம்பரநாதனின் வீட்டில் நடந்த நிகழ்ச்சியை எண்ணி, எண்ணி தன்னையே வெறுத்தாள். தனிமை அவள் ஏக்கத்தையும், துக்கத்தையும் அதிகப்படுத்தியதே தவிர குறைக்கவில்லை. சில விநாடிகளுக்கொருமுறை இதயத்தின் அடித்தளத்திலிருந்து வரும் பெருமூச்சில், அவள் அழகிய மார்பு சற்று உயர்ந்து சலிப்போடு தாழ்ந்துகொண்டிருந்தது.

'சாரதாவைப் பார்க்க வந்தவர்கள், என்னைப்பற்றி ஏன் விசாரிக்கவேண்டும்? ......, . சாரதாவை ஒருக்கால் பிடிக்கவில்லையோ .....அப்படியானால், அதற்குக் காரணமானவன் நான்தானே?......' என்றெல்லாம் பலவாறு சிந்தனை செய்து, தன்மீதே குற்றங்களை சுமத்திக்கொண்டாள் சகுந்தலா.

தனியே இருந்து நினைக்க-நினைக்க விரிவடையும் சக்தி வாய்ந்தது கற்பனை. மனோ சக்தி, குறைந்தவர்களுக்கும், அதிகமாக உலகத்தை உணராதவர்களுக்கும் கவலை ஏற்பட்டுவிட்டால் அதிலும் அவர்கள் தனியே இருந்து அதைப்பற்றியே சிந்திக்கத் தொடங்கிவிட்டால் கற்பனையைப்போல் விரிவடையும் சக்தி வாய்ந்தது கவலை.

அந்தக் கவலை சற்றுக் குறையவேண்டுமானால், தனக்கு வேண்டியவர்களிடம் வாய்விட்டு-மனம் திறந்து சொல்லியாகவேண்டும். பெரிய அறிவாளிகள் தனக்குத் துன்பம் உற்றக்கால், பொருட்படுத்தாமல் இருந்துவிடுவார்கள். இல்லையேல் தம் மனதைத் துணிந்து வேறு வழிகளில் செலுத்திவிடுவார்கள்.

''......இடுக்கண் வருங்கால் நகுக'......என்றார் தெய்வப்புலவர். இது எல்லோராலும் இயலக்கூடியதா? எல்லோரும் இராமனாகவும், இயேசுவாகவும், புத்தராகவும் மகாத்மா காந்தியாகவும் இருக்கமுடியாதே. பின் எப்படி நகைப்பது?

இடுக்கண் வரும் பொழுது நகைக்காவிட்டாலும், அழாமலாவது இருந்தால் போதும். நம்மைக் கேட்காமலே கண்களில் நீர் தேங்கிவிடுகிறதே.

அபலை—சகுந்தலாவுக்குப் பொங்கி வரும் அழுகையை நிறுத்தவே முடியவில்லை. தன் துக்கத்தை மறக்க முயற்சித்தாள். 'நான் ஒரு குற்றமும் செய்யவில்லை, வீணாக ஏன் வருத்தம் வேண்டும்?' என்று தன்னையே சமாதானம் செய்துகொண்டாள். என்றாலும் பூரண நிம்மதி உண்டாகவில்லை. ஆகவே புத்தகம் படிக்க எண்ணினாள். உடனே எழுந்து தன் பெட்டியைத் திறந்தாள்.

பெட்டியின் மீது, கொட்டை எழுத்துக்களில் பளிச்சென்று மின்னியது. ''மகாத்மா காந்தி சுய சரிதம்''.

அந்த புத்தகத்தின் உள்ளிருந்து சற்று வெளியே நீண்டிருந்த தென்னை ஓலைத் துண்டு ஒன்று, பாதி வரைக்

கும் படித்து அடையாளம் வைத்திருப்பதை சகுந்தலா வுக்கு நினைவூட்டியது.

'நல்ல தருணத்தில் தனக்கு இசைந்த புத்தகமே' என்ற எண்ணம் மேலோங்க ஆர்வத்தோடு புத்தகத்தைக் கையிலெடுத்தாள். புத்தகத்தை எடுத்து விரித்ததும் சாரதாவின் எண்ணமும், வேணுவின் எண்ணமுமே ஓடி வந்தன. காரணம்?

அந்தப்புத்தகம், தன் தங்கை சாரதாவுக்காக சென்னையிலிருந்து வேணு வாங்கிக்கொண்டு வந்தது. சாரதாவிடமிருந்து, படிப்பதற்காக சகுந்தலா இரவல் வாங்கியிருந்தாள்.

புத்தகத்தின் முன் பக்கத்தில் வேணுவின் பெயரைக்கண்டதும், எண்ணம் சுழன்றது. மனம் வேணுவை நோக்கி விரைந்தது. வேணுவின் அழகுத்தோற்றம் முழுமையும் அவள் மனக்கண்முன் தோன்றியது...... 'ஆம்' அன்று கோலப்பொடியை வைத்துவிட்டுத் திரும்பும்போது ....தன கைக்குட்டையை என் முகத்தின் எதிராக நீட்டி என்னவெல்லாமோ சொல்லிவிட்டு......முடிவாக......முடிவாக?......என்மீது இரக்கமில்லையா? என்று என் அன்பிற்காக-காதலுக்காக வேண்டி நின்றாரே....' அதற்கு மேல் சகுந்தலாவின் சிந்தனை ஓடவில்லை.

அன்று வேணுவின் குணம் அறிந்த சகுந்தலா, வேணு தனக்குக் கிடைத்துவிட்டால் - கணவனாக வாய்த்துவிட்டால் தன்னைவிட பாக்கியவதி யாருமே இல்லை' என்று எண்ணினாள். இன்று.... ? கணநேர நிகழ்ச்சி, என் எண்ணத்தில் மண்ணை இறைத்து வரலாற்றையே மாற்றிவிடும்போலிருக்கிறதே' என்று ஏங்கினாள்.

ஊர்க் கோயிலில் இருந்து வந்த 'பம்பை'யின் ஒலியும் முரசின் முழக்கமும் 'பீப்-பீப்' என்று கீச்சு நாதஸ்வரத்தின் கீதமும், ஊளைக்காற்றிலே மிதந்து வந்து சகுந்தலாவின் காதுகளில் பாய்ந்து, கருத்தைக் கலக்கி சிந்த.

லையைத் தடைசெய்து, கையில் இருக்கும் "காந்தி சரித்தை" நினைவூட்டியது.

பெருமூச்சுவிட்டபடி தன் கருத்தைப் புத்தகத்தில் செலுத்தி, விழிகளை அச்செழுத்துக்களில் ஓடவிட்டாள்.

"..........சகுந்தலா..........சகுந்தலா"

வாயிற் பக்கமிருந்து வந்தக் குரல் கேட்டு, அது வேணுவின் குரல் என்பதை அறிந்து, திகைத்து, புத்தகத்தை மூடிவிட்டுத் திரும்பினாள் சகுந்தலா. அவள் வலது கை ஆள் காட்டி விரல், புத்தகத்தினுள்ளேயே அமுங்கியிருந்தது. மற்றைய விரல்கள் புத்தகத்தை அடைத்துப் பிடித்திருந்தன.

வேணு, தன் பக்கமாக வருவதை அறிந்து, கையிலிருந்த புத்தகத்தை அப்படியே கீழே வைத்துவிட்டு, சிறிது பதட்டத்துடன், "வாருங்கள்" என்று வரவேற்று விட்டு சற்றே குறுகி-ஒதுங்கி நின்றாள்.

சகுந்தலாவின் நிலை உணர்ந்த வேணு, "சகுந்தலா, இப்படி சோகச் சிலையாக இருக்கிறாயே, உனக்கு நேர்ந்த இடுக்கண் தான் என்ன?" என்றான்.

சகுந்தலா, சற்றுப் பொறுத்தே பேசினாள்.

"தலைவிதியை அனுபவித்துதானே தீரவேண்டும் ...... நீங்கள் இந்த வேளையில்.......?" அதற்கு மேல் அவளால் பேச முடியவில்லை.

"அஞ்சாதே, கோயிலில் உன்னைத் தேடினேன் காணவில்லை. ஆகவே வீட்டிலதான் இருக்கவேண்டுமென்று எண்ணி இங்கு வந்தேன். ஏனோ உன்னைப் பார்க்க வேண்டுமென்ற வேகம். ஆனால் நீயோ, சோக வடிவாக, 'தலைவிதி' அப்படி-இப்படி'ன்னு சொல்லி வேதனைப் படுகிறாய், அருகில் காந்தியாரின் வரலாற்றை வைத்துக் கொண்டு இப்படி 'விதி-கதி' என்று கலங்கலாமா? காரணம் இல்லாமல் கலங்குவதில் என்ன பயன்? உன் கலக்கத்திற்கு காரணம் என்ன? அதையாவது என்னிடம் கூறு. மனச்சாந்தியாவது உண்டாகும்" படபட'வென்று பேசினான் வேணு.

"கூறுவேன், கண்டிப்பாகத் தங்களிடம் கூறுவேன். ஆனால் இப்போதல்ல சாரதாவின் திருமணத்திற்குப் பின்."

"நமது கல்யாணத்திற்குள் அப்படித்தானே".

"நமது கல்யாணமா? .....நான் அதற்குப் பாக்கியம் செய்தவள்தானா? பிறந்தது முதல் துன்பக் கடலிலேயே உழல்கிறேனே. எனக்கு இப்படியும் ஒரு அதிர்ஷ்டம் வருமா? இல்லை. எனக்கு நம்பிக்கையே இல்லை. நான் இறக்கும் வரையும் துன்பமே அனுபவிக்கவேண்டும். ஆமாம், அப்படி என்னுள் ஏதோ ஒன்று அடிக்கடி வற்பு

"அப்படிச் சொல்லாதே சகுந்தலா!........" உணர்ச்சி வசப்பட்டுக் கூறினன் வேணு

பேச்சோடு பேச்சாகத் தன்னை மறந்தநிலையில், அவனையாமலே அவன் கரங்கள் சகுந்தலாவின் தோளைத் தொட்டுவிட்டன. என்றாலும் உடனேயே வெடுக்கென்று எடுத்துவிட்டான். தீயை தீண்டியவன்போல் படபடத்து இரு கரங்களையும் ஒன்றோடொன்று சேர்த்துக்கொண்டான்.

இந்தப் 'படபட'ப்பைக் கண்ட சகுந்தலாவுக்கு உண்மையாகவே சிரிப்பு மேலிட்டது. 'களீர்' என்று சிரித்துவிட்டாள். அந்தச் சிரிப்பு மகிழ்ச்சியால் ஏற்பட்டச் சிரிப்பல்ல. நிராசையின் எதிரொலி! எல்லாம் இழந்தபின் ஏற்படும் அனுசயச் சிரிப்பு!

வேணுவுக்கு மகிழ்ச்சி ஒரு புறம், திகைப்பு ஒரு புறம். திக்கித் திணறியபடியே-"சகுந்தலா உன் போக்கும், பேச்சும் என்னை திகைக்க வைக்கிறது என் வாழ்க்கையில் நான் இரண்டு வருடங்களுக்கு முன்பே ஒரு பெண்ணை விரும்பினேன். அவளையே என் வாழ்க்கைத் துணைவியாகவும் ஏற்றுக்கொள்ள உறுதி செய்தேன். கொதிக்கும் நீரிலிருந்து புறப்படும் ஆவியை உலைமூடி கொண்டு அடக்கிவைப்பதைப்போல் என் உள்ளத்திலிருந்து உந்திய ஆசை எனும் ஆவியை பல நாட்கள் பல

மாதங்கள் வரைக்கும் அடக்கி வைத்திருந்தேன். சந்தர்ப்பம் கிடைத்ததும் உலைமூடியைத் தூக்கி எறிந்துவிட்டு வெளியேறும் நீராவியைப்போல் இன்று என் ஆசை எனும் ஆவியும், சொற்களால் வெளியாகிவிட்டது. உள்ளம் திறந்து கூறுகிறேன். விரும்பியதும் உன்னையே; மணக்கப் போவதும் உன்னையே. எனக்கு அந்தப் பேறு கிட்டவில்லையானால், நான் அதற்காகப் பைத்தியமாக அலையப்போவதில்லை ஆனால், ஒன்று இந்த வேணுவுக்கு இன்னொருவர் மனைவியாகமாட்டாள். இது மட்டும் உறுதி'' உள்ளத்தைத் திறந்து காட்டி உண்மையை உறுதியாக எடுத்துக் கூறிவிட்டான் வேணு.

சகுந்தலாவுக்கு ஒன்றுமே பேச முடியவில்லை. 'இந்த ஏழையை இந்த அளவுக்கு விரும்புகிற ஒரு உத்தமரும் உண்டுமா?' என்றே எண்ணி ஏங்கினாள். அவள் உள்ளம் உருகியது. உடல் முழுதும் இன்ப உணர்ச்சிப் பெருக்கெடுத்தோடியது. இதயத்தினுள் யாரோ தன் மென் கரத்தை விட்டு கூச்சமூட்டுவதுபோலிருந்தது.

''இந்த ஏழைக்கு நற்காலம் என்று ஒன்று இருந்தால் உங்கள் எண்ணம் ஈடேறும். உங்களைப்போல் நான் வருடக்கணக்கில் எண்ணிக்கொண்டிருக்கவில்லையானாலும், வாரக்கணக்கிலாவது உங்களை எண்ணிக்கொண்டுதான் இருக்கிறேன். ஆனால் கணவனாக அடையவேண்டுமென்று எண்ணவில்லை. ஏதோ ஒரு அன்புணர்ச்சி உங்களைக் காண வேண்டும் என்ற ஒரு துடிப்பு அவ்வளவுதான்; விதியின் எண்ணம் எப்படியோ?'' இதைவிடக் கூடுதலாகப் பேசவேண்ணுல் முடியவில்லை..............சித்தி வரும் நேரமாகிவிட்டது......''

பேச்சை நிறுத்தி வாயில்பக்கமாகத் தன் பார்வையைச் செலுத்தினாள் சகுந்தலா.

'சகுந்தலா, தன் சித்திக்கு அஞ்சி நடுங்குகிறாள்' என்பதை உணர்ந்த வேணு ''அஞ்சாதே சகுந்தலா. நான் போய் வருகிறேன். இவ்வளவு நேரமாவது உன்னுடன் பேசுவதற்கு சந்தர்ப்பம் கிடைத்ததற்கு நான் மிகவும்

மகிழ்ச்சி அடைகிறேன். முடிவாகச் சொல்கிறேன், நிதானம் இழக்காதே. எப்பொழுதும் அழுது வருந்தாதே; உன் நன்மைக்காக எப்பொழுதும் எதுவும் செய்ய நான் இருக்கிறேன் என்பதை மறவாதே! நான் வருகிறேன்".

'படபட'வென்று கூறி முடித்து, சகுந்தலாவின் விழிகளிடம் விடைபெற்று அந்த நடு இரவில் அவளைப் பிரிந்து சென்றான் வேணு.

வேணு சென்ற திசை நோக்கி அவன் உருவம் மறையும் மட்டும் இமைக்காது பார்த்துக்கொண்டிருந்த சகுந்தலா, நீண்டதொரு பெருமூச்சு விட்டுக் கதவைத் தாளிட்டபடி, மறுபடியும் புத்தகத்தை விரித்துப் படிக்கத் தொடங்கினாள்; படித்தாளோ படிக்கவில்லையோ யார் கண்டார்கள்?

# 8. விதியின் சதி

கடிதம் போடுவதாக கூறிச்சென்ற சொக்கலிங்கனார், கடிதம் எழுதினார்; ஆனால் சிதம்பரநாதனுக்கல்ல, ஆத்மநாதனுக்கு.

சொக்கலிங்கனாருக்கும், ஆத்மநாதருக்கும் நெடுநாளைய நட்பு. கருணாகரன், ஆத்மநாதரிடம் வேலையிலிருக்கிறான் என்பதையும், சகுந்தலாவுக்குப் பொறுப்புதாரிகள், கருணாகரனும், சத்தியவாணியும்தான் என்பதையும் மற்றைய எல்லா விபரங்களையும், இங்கிருந்து சாரதாவைப் பார்த்து விட்டுப் புறப்படும்பொழுதே அறிந்துகொண்டார் சொக்கலிங்கனார். ஆகவே ஆத்மநாதரின் வழியாக கருணாகரனைச் சரிப்படுத்தி தன் மகனுக்கு சகுந்தலாவைப் பேசி மணமுடித்துவிடலாம், என்று திட்டமிட்டே ஆத்மநாதருக்கு விபரத்தை விளக்கி ஒரு கடிதம் எழுதினார்.

தன் விரோதி வேணுவுக்கும், சிதம்பரநாதனுக்கும் எந்த வழியிலாவது ஒரு அவமானத்தை உண்டுபண்ண

வேண்டும்' என்ற எண்ணத்தில் காத்திருந்த ஆத்மநாதர் இந்த சந்தர்ப்பத்தை நன்றாகப் பயன்படுத்தலானார்.

ஏதோ, கருணாகரனுக்கும், நண்பர் சொக்கலிங்கனாருக்கும் உதவி செய்வதுபோல் நடித்து, கருணாகரனின் வீட்டிற்குப்போய், கருணாகரனிடமும், சத்தியவாணியிடமும், சொக்கலிங்கனாரையும், அவர் மகன் மணியையும் மிகைப்படப் பாராட்டிப்பேசி, சகுந்தலாவை மணிக்கே மணம் செய்து கொடுக்கவேண்டுமென்றும் உபதேசித்தார்.

சகுந்தலாவை எங்கேயாவது 'மணம்' என்ற பெயரில் தள்ளிவிட்டுத் தன் கையைக் கழுவிவிட வேண்டுமென கங்கணம் கட்டிக் காலத்தைக் கணக்கிட்டுக்கொண்டிருந்த கருணாகரனும், சத்தியவாணியும், ஆத்மநாதரைப் புகழ்ந்து பாராட்டி, அவர் எண்ணத்திற்கு சம்மதம் கொடுத்தார்கள். அதிலும் 'பணமும் வேண்டாம், நகையும் வேண்டாம்' என்று பட்டணத்து மாப்பிள்ளை வரும்பொழுது, சகுந்தலாவின் அரை ஏக்கர் நிலத்தையும் அபகரித்துக் கொண்டு பாரத்தையும் இறக்கினாற்போல் ஆயிற்றே! சத்தியவாணி சம்மதம் கொடுக்கத் தயங்குவாளா?

சகுந்தலாவின் காதிலும் இந்தச் செய்தி எட்ட வெகு நேரமாகவில்லை. மணச் செய்தி கேட்ட சகுந்தலா மனம் குமுறினாள். எண்ணங்கள் மேலெழும்பிக் கூத்தாடின. ஒரு புறம், தன் உயிர்த்தோழிக்குத் துரோகம் செய்கிறோமே என்ற ஏக்கம்; மற்றொரு புறம் ஏழை பங்காளன் வேணுவின் அன்புமுகம். இடையே சிற்றன்னையின் கொடுமை, ஆத்மநாதரின் சூழ்ச்சி. பாவம் பருவத்தின் முதற்படியில் காலெடுத்து வைத்து, கனியாக மலர்ந்து கண்டவர்களைக் கவரும் சக்தி வாய்ந்த கன்னியாக இருந்தும், கவலைச் சுழல்களுக்கிடையே, ஏக்கச் சூறாவளிக்கிடையே சிக்கித் தவித்தாள் இளம் பெண் சகுந்தலா.

தன் சிற்றன்னையிடமோ, சிற்றப்பாவிடமோ தன் மனதைத் திறந்து கூறி வாதாடுவதைவிட, பாறையில் மோதிக் கொள்ளலாம்....! யாரிடம் சொல்லுவாள்? என்ன செய்வாள்? அவளுக்குப் பரிந்து, ஒரு சொல் சொல்லுவதற்கு யார்

இருக்கிறார்கள்?......என்ன, எண்ண குழப்பம் அதிகமா னதே தவிர குறையவில்லை பல மணி நேர சிந்தனைக்குப் பின், அழுகைக்குப்பின் ஒரு உறுதியான முடிவுக்கு வந் தாள் சகுந்தலா.

தன் மனப்போராட்டத்தை-ஏக்க அலைகளை-எண்ணக் குவியல்களை எல்லாம் எழுத்துக்களாக மாற்றி, வேணு வுக்கு ஒரு கடிதம் எழுதினாள்.

  

எதிர்பாராதவிதமாக சகுந்தலாவிடமிருந்து, தனக்கு வந்த கடிதத்தை ஆவலோடு, அவசரமாகப் பிரித்தான் வேணு.

கடிதம், தொடக்கத்தில், பலவாறாக எழுதி-எழுதி, திருத்தி-திருத்தி, 'அன்பே என்று ஆரம்பமாகியது. படிக் கத் தொடங்கினான் வேணு.

அன்பே,

'நாம் ஒன்று நினைக்க தெய்வம் ஒன்று நினைக்கும்' என்பது நம் தமிழகத்தின் பழமொழிகளில்-உண்மையான மொழிகளில் ஒன்று. தாங்கள் ஒரு நாள் என்னிடம் கூறி னீர்கள், 'விதியை வென்றுவிடலாம்' என்று. அது முடி யாது என்று நான் இப்பொழுது கூறுகிறேன்.

சாரதாவைப் 'பெண் பார்க்க' வந்தவர்கள், என்னை மணக்கத் திட்டமிட்டு, என் சிற்றப்பாவுக்கு கடிதம் எழுதியுள்ளதாகத் தெரிகிறது. இந்தச் சிக்கலில் இருந்து தப்புவதற்கு எனக்கு ஒரே வழிதான் தென்படுகிறது. இக் கடிதம் கண்டதும், தாங்கள், தங்களுடைய தந்தை யிடம், தங்களின் விருப்பத்தைத் திறந்து சொல்லி என் னைக் காப்பாற்றுங்கள்! உண்மையைக் கூறுகிறேன், நான் சாரதாவுக்குத் துரோகம் செய்யத் துணியவில்லை. எனது இப்போதைய நோக்கம் இது ஒன்றேதான். என் எண் ணப்படி நடந்தால் வாழ்வு. இல்லையேல்......எனக்கு என்ன

செய்வதென்றே தோன்றவில்லை உடன் பதில் எழுதுங்கள்.

இப்படிக்கு,
அபலை சகுந்தலா.

கடிதத்தைப் படித்து முடிக்குமுன்பே வேணுவின் உள்ளத்தில் வேதனை உணர்ச்சித்தோன்றி விரிந்தது. 'தன் எண்ணப்படி ஒன்றும் நடக்காதுபோலிருக்கிறதே! சகுந்தலா இன்னொருவருக்குச் சொந்தமாகவேண்டியவள்தானு? சே, ஒன்றை நினைத்தால் இன்னொன்று நடக்கிறதே. இந்த உலகில் எத்தனை கோடி மக்கள் எத்தனை விதமாகப்-பிரிவாக இருந்தாலும், இந்த ஒரு விஷயத்தில் ஒற்றுமை இருக்கிறதே ......மனிதன் நினைப்பதுபோல் ஏன் நடத்த முடியவில்லை? அதுதான் விதியின் சக்தியா? அப்படி என்றால், விதியின் பாதையில்தான் மனிதன் செல்கிறானு? அப்படித்தான் என்றால் ஒரு சில அறிஞர்கள், 'விதியை, மதியால் வெல்லலாம் என்று கூறுகிறார்களே! கூறுகிறவர்களும் விதிப்படிதான் வாழ்கிறார்களோ. ஆம் மதியால் எதை வென்றார்கள்? விதியின் சக்தியைத்தான் நாம் கண்கூடாகக் காண்கிறோமே.......சகல கலா வல்லவர்களாகக் காட்சி அளிக்கும் எத்தனையோ பெரியோர்கள், அன்றாடம் வாழ்விற்கே வறுமையுடன் போராடி மடிகிறார்கள்; ஒன்றும் தெரியாதவன் பெரும் செல்வந்தனுகி, அறிவுலக மேதை என்றுகூடப் புகழ்ப்பெறுகிறான். திறமைக்கு தகுந்த இடம் எல்லோருக்கும் கிடைக்கிறதா? இல்லை. அப்படி என்றால் ஊழ்வினை-என்கிறார்களே, அந்த வினை விதித்த விதிப்படிதான் உலகம் வாழ்கிறதா? குறளிலும், நாலடியிலும் கூட விதியின் வலிமையும், ஊழ்வினையின் பயனையும் அழகுபடச் சித்தரித்திருக்கிறார்களே. ஆமாம்; "இயலாது என்பது என் அகராதியிலே இல்லை" என்று கூறிய மேல்நாட்டு மாவீரன்கூட, நல் விதி இல்லையேல் புத்திசாலித்தனமும், திறமையும் ஒரு பயனையும் கொடுக்காது என்றுதானே கூறினுன்........

விதியின் பாதையில்-ஆராய்ச்சியில் கட்டவிழ்த்துப் போகும் தன் மனக்குதிரையை சட்'டென்று நிறுத்தி

சய நினைவுக்கு வந்தான் வேணு. இப்பொழுது அவன் மனக்கண்முன் சகுந்தலாவின் தோற்றம் வந்து நின்றது.

"சகுந்தலா; அவளை எப்படிக் காப்பாற்றுவது? தந்தையிடம் கூறி சம்மதம் பெறவேண்டுமாம் ....சாரதாவின் திருமணம் நின்றுவிட்ட இதே வேளையில் அதுவும் 'சகுந்தலாவினால்தான் தன் மகளின் திருமணம் நின்றுவிட்டது' என்று அவர் உறுதிகொண்டு வருந்திக்கொண்டிருக்கும் இந்த வேளையில், என் திருமணத்தைப்பற்றி சகுந்தலாவை நான் மணக்க விரும்புகிறேன் என்பதை எப்படிச்சொல்வது? தங்கை சாரதாதான் என்ன எண்ணுவாள். ஏன்?.......என் மனமே இதை மறுக்கிறதே....."

பலவாறு சிந்தித்து, சிந்தித்து ஏங்கினான் வேணு. உடல் முழுதும் வியர்த்துக்கொட்டியது. திடீரென ஒரு முடிவுக்கு வந்தான்.

வேறு ஒருவர் வாயிலாகக் கருணாகரனிடம் தன் எண்ணத்தைத் தெரிவித்துத் தற்பொழுது இந்தத் திருமணத்தை நிறுத்திவிடவேண்டும், என்று தீர்மானித்தான். அந்த எண்ணம்-முடிவு நல்ல முடிவாகவே பட்டது.

உடனே அதற்குத் தகுந்தவரான இராமனுஜர் என்பவரைக்கண்டு, அவரிடம் தன் எண்ணத்தை வெளியிட்டு, கருணாகரனைச் சந்திக்குமாறு அனுப்பிவைத்தான்

ராமனுஜரும், அதற்கிசைந்து, ஆத்மனாதரின் வீட்டிற்குச்சென்று, கருணாகரனைக்கண்டு விபரத்தைக் கூறினார்.

கருணாகரன், தன் முதலாளியான ஆத்மநாதரிடம், 'வேணு, சகுந்தலாவை மணம் செய்து கேட்கிறான்' என்ற விபரத்தைக் கூறி, அவருடைய யோசனையைக் கேட்டான்

ஆத்மனாதரா அதற்கு இணங்குகிறவர்? வேணுவை அவமானப்படுத்தவே அவர் சகுந்தலாவை மணிக்கு மணம் செய்து வைக்கத் துணிந்தார். அதிலும் இப்பொழுது வேணுவே சகுந்தலாவை விரும்புகிறான் என்பதை அறிந்ததும் அவர் கூடுதலாக மகிழ்ச்சி அடைந்து, முன்பைவிட

அதிகமாக வேணுவைப் பழிவாங்கத் திட்டம் தீட்டினார். 'ஒரு ஏழைப் பெண்ணைக்கூட வேணுவுக்குத் திருமணம் செய்துகொடுக்க சம்மதிக்கவில்லை, வேணு அந்த அளவுக்கு அயோக்கியன்' என்ற புரளியைக் கிராமம் முழுவதும் பரப்ப எண்ணினார்.

அந்த கெட்ட எண்ணத்தின் அடிப்படையாக கருணாகரனிடம், வேணுவைப் பலவாறு பழித்துக்கூறி, ராமநாதர் முன்னிலையிலேயே தூற்றினார். "அந்த பயல் வேணுவுக்கு என்ன தெரியும்? ஒரு தொழில் செய்து பிழைக்கத் தெரியுமா? அல்லது விவசாயம்தான் தெரியுமா? அதுவுமில்லாவிட்டாலும், நல்லவன் என்றாவது சொல்ல முடியுமா? வேலை வெட்டியில்லாமல் ஊர் சுற்றும் சோம்பேறி. குழப்பம் உண்டாக்குவதும், பெரிய மனிதர்களைப் பழிப்பதும்தான் அவன் வேலை. அவனுக்குப் பெண் கொடுப்பதைவிட கிணற்றில் தள்ளலாம். ஏதோ ஒரு கட்சியிலே ஈடுபட்டு, அதனால் சர்க்கார்கூட அவனைக் கைதுசெய்யத் தேடிக்கிட்டு இருந்தது. 'சேவை, தொண்டு என்று கூறிக்கொண்டு, சேரிகளிலும், கால் அணையுக்கு வழியில்லாத பிச்சைக்காரக் கூட்டத்தோடும் சுற்றித் திரிகிறான்......." என்றெல்லாம் பலவாறு வாய்க்கு வந்தபடி வைது தீர்த்துக் கருணாகரனையும் அச்சுறுத்தி, வந்தவரையும் அவமானப்படுத்தி அனுப்பினார், ஆத்மநாதர்.

# 9. விதியின் வெற்றி

கதிரவனின் சக்திபால் உருளும் காலமெனும் சக்கரம் யாருக்காகவும் காத்திருப்பதில்லையே. வாட்போர் நடந்தாலும் சரி, அணுக்குண்டு போர் நடந்தாலும் சரி, சந்திரமண்டலம் சென்றாலும் சரி, அங்கேயே தங்கினாலும் சரி, அந்த அபூர்வ அதிசய சக்கரம் அதன் போக்

கில் சுழன்றுகொண்டுதானே இருக்கும்? விதி என்ற துணைவன் பின் தொடர அது சுழலும் சுழற்சியை-அதன் வேகத்தை யாரால் கணக்கிடமுடியும்? அது கடந்துவந்த பாதைகள்-கண்ட காட்சிகள், முனிவர்கள், அரசியல் தலைவர்கள்—பேரறிஞர்கள், நல்லவர்கள், கெட்டவர்கள் எத்தனை—எத்தனையோ பேர்களைக் கண்ட அனுபவமல்லவா? அத்தனை அனுபவமும் முதிர்ச்சியும் கொண்ட காலம், நல்லது கெட்டதுகளைக் கண்டும், மகிழாமல், கலங்காமல் தன் மனம் போகும் போக்கிலே போய்க்கொண்டிருக்கும் காலம், இரவும் பகலுமாக இணைந்து, சருகுகளைப் போல் சுற்றிச் சுழன்று, இயற்கையைப் போற்றுவித்து, செயற்கைக்கு உதவி அளித்துக்கொண்டுபோகிற காலம், விதி என்ற அந்தத் துணைவனின் ஆணைப்படி, அதன் எல்லைக்கோட்டில் நின்று சொக்கலிங்கத்தின் மகன் மணிக்கும், சகுந்தலைக்கும் திருமணத்தை நடத்தி முடித்து விட்டு, 'தன் கடமைகளுள் ஒன்று முடிந்துவிட்டது' என்று, கைகொட்டிச் சிரித்தது!

பெண்களின் வேலியான தாலி, மங்கையர்களின் மதிப்பிற்குரியதான மாங்கல்யம், சகுந்தலையின் கழுத்தில் ஏறியது.

'மாங்கல்யத்தைக் கழுத்தில் வாங்கிய சகுந்தலைக்கு ஒவ்வொரு விநாடியும் ஒவ்வொரு யுகமாகத் தோன்றி மறைந்துகொண்டிருந்தது. ஆதவன் தன் பிரயாணத்தை முடிக்கவேண்டாமென்று நிறுத்திவிட்டானோ' என்று கூடத் தோன்றியது. அழுது அழுது கண்கள் சிவந்தன. ஆனால், ஏன் அழுகிறோம்? என்று அடிக்கடி எண்ணுவாள்; காரணம் உணர முடியவில்லை.

மகிழ்ச்சியோடிருந்தால் காலம் கரைவதே தெரியாது. ஆனால், துக்கத்தில் மூழ்கி இருப்பவர்களுக்கு ஒரு விநாடி, ஒரு யுகமாகத் தோன்றும்.

யோகிகளுக்கும், தபசிகளுக்கும் ஒரு யுகம், ஒரு விநாடியாகத் தோன்றும், காரணம்? ........ ....அவர்களின்

மனம் விருப்பு—வெறுப்பு அற்ற நிலையில் தெளிவாக இருக்கும்.

மகிழ்ச்சியில் மூழ்கி இருப்பவர்களுக்கு மனதைப்பற்றிய நினைவே இருப்பதில்லை. துக்கத்தில் இருப்பவர்களுக்கு மனமும், மூளையும் வேதனையோடு போராடுகிறது. இதுவே மூளைக்குமுள்ள வேறுபாடு. எல்லாவற்றிற்கும் மனம் தானே காரணம்?

எத்தனையோ புண்பட்டிருந்த சகுந்தலா, சாரதாவோ அவள் வீட்டாரோ தன் திருமணத்திற்கு வரவில்லை, என்பதறிந்து மிகவும் வேதனை அடைந்தாள்.

அவள் உள்ளுணர்ச்சி, அவளைக் குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தி, "துரோகி....நட்புத் துரோகி" என்று இடித்துக் கூறுவதுபோலிருந்தது. அவள் மனக்கண் முன் சாரதா தோன்றி, "அடி பாவி, நீயே என் வாழ்வுக்கு இடையூறாகி விட்டாயே" என்று கேட்பதுபோல் பட்டது. அடுத்து, அன்பே உருவான வேணுவின் அழகுமுகம்....

உள்ளக் கடலின் கொந்தளிப்பு, முடிவற்ற நீர்வீழ்ச்சியாக கண்களின் வழி ஓடிக்கொண்டிருந்தது.

எங்கிருந்தோ அந்த அறைக்குள் குதித்த பூனை, 'மியாவ்—மியாவ்' என்ற பரிதாபக் குரலுடன் சகுந்தலாவைப் பார்த்தபடியே கடந்துசென்றது.

யாரோ தன் அருகில் வரும் அரவம் கேட்கவே, நினைவுத் தொடரிலிருந்து விடுபட்டுத் திரும்பிப் பார்த்தாள் சகுந்தலா.

வாழ்வில் ஒரே திருநாள், திருமணநாள். அன்று முதல் இரவெனும் இன்ப காலம். அந்த 'இன்ப இரவில்' சகுந்தலா கலங்கிக் கண்ணீர் வடித்துக்கொண்டு இருப்பதைக் கண்டான், அவள் அருகே வந்து நின்ற மணி.

சற்று நேரம் அந்த இடத்தை அமைதி எனும் நல்லாள் ஆட்சி புரிந்தாள்.

சகுந்தலாவின் நிலை கண்ட மணி, பொறுமையிழந் தான். சற்றே அவள்மீது உராய்ந்தபடி, "சகுந்தலா, இன்ப மாகக் கழிக்கவேண்டிய இந்த இரவில் இப்படி என் சோகத்தோடு இருக்கிறாய்?" என்றான்.

அதற்குப் பதிலாக ஒரு நீண்ட பெருமூச்சே அவ ளிடமிருந்து விடுபட்டது.

"சகுந்தலா, உன் மௌனத்தின் பொருள் எனக்கு விளங்கவேண்டும்; துக்கத்தின் காரணம் நான் அறிய வேண்டும்." இதமாகக்கேட்டான் மணி.

"............ஒன்றுமில்லை". தலை நிமிராமல் 'சுருக்கமா கக் கூறிவிட்டு சற்று நகர்ந்துநின்றாள் சகுந்தலா.

"ஒன்றுமில்லை என்றால் ஏன் அழவேண்டும்?" சற்று கோபமாகவே கேட்டான் மணி.

அவன் கோபக்குரல், சகுந்தலாவின் தலையை நிமிர்த் தியது. அவள் கண்கள் மணியின் முகத்தைக் கூர்ந்து நோக்கின. மணியின் கண்களில் பளிச்சிட்ட ஆவல் உணர்ச்சியில்—அந்த ஒளியில் சகுந்தலா தன் பார்வையை மாற்றினாள்.

சகுந்தலாவைக் கடந்துசென்ற பூனை, பால் இருந்த அறைக்குள் சென்றது. உறி வரைக்கும் சிரமப்பட்டு ஏறி, பிடி தவறி தரையில் விழுந்து, திரும்பவும் அந்த உறியில் இருக்கும் பாற்கலத்தையே வெறித்துப்பார்த்தது.

மணியின் பார்வையும், அந்தப் பூனையின் பார்வையும் ஓரளவு ஒன்றுபட்டே இருந்தது.

எதையோ பேச எண்ணி, தலை நிமிர்ந்த சகுந்தலா, மணியின் முகத்தோற்றத்தைக்கண்டு, பேசத் துணியாமல் மறுபடியும் தலையைக் குனிந்துகொண்டாள்.

கீழே இருந்து, 'கோபத்திலும், ஏமாற்ற உணர்ச்சி யிலும், மேலிருக்கும் உறியைப் பார்த்துக்கொண்டே இருந் தால், காலம் கடப்பதல்லாமல் காரியம் நடைபெறாது' என எண்ணி, கதவோரமாக ஏறி, கவனமாக—சன்னலின்

மேல் வந்து லாவகமாக உறியை எட்ட முயற்சித்தது பூனை.

தன் முகத்தோற்றத்தை சிறிது மாற்றி, குரலிலும் கோபத்தைக் குறைத்து மகிழ்ச்சியை வலிய வரவழைத்துக்கொண்டு, "சகுந்தலா............நீ ஏதோ பேசுவதற்கு முனைந்து, உடனேயே நிறுத்திவிட்டாயே........எதுவானாலும் என்னிடம் தைரியமாகப்பேசு. ஏன் தயங்குகிறாய்? என்னைப் பிடிக்கவில்லை' என்றால் கூட பாதகமில்லை. அதை யும் என்னிடம் நேரில் கூறிவிடு. ஒன்றும் பேசாமல் மட்டும் இருக்காதே; உன் அமைதியே என்னைக் கொல்லாமல் கொல்லுகிறது", என்று குழைவுடன் கூறி அவள் மலர்க் கரங்களைப் பற்றினான் மணி.

மறுபடியும் தலை நிமிர்ந்து, மணியின் முகத்தைப் பார்த்தாள், சகுந்தலா.

கனியைக் கடித்து உண்ணத்துடிக்கும் அணிலின் உதடுகளைப்போல், மணியின் உதடுகள் துடித்துக்கொண்டிருந்தன. ஆனால் சற்றுமுன் இருந்ததைப்போல், கோபமும், தாப உணர்ச்சியும் இல்லை. மணியின் தோற்றம் கண்ட சகுந்தலாவுக்கு அந்த வேளையில் இரக்கமே வந்தது.

"............நான்........ஒன்று........கேட்கிறேன்; நீங்கள் கோபப்படமாட்டீர்களே?" இதமாகக் கேட்டாள் சகுந்தலா.

"இல்லை; தாராளமாகக்கேள்." என்று கூறிவிட்டு, சற்று நெருங்கி சகுந்தலாவை அணைத்துக்கொண்டான் மணி.

அங்கு - பூனை உறியைத் தொட்டுவிட்டது........பாலைக் குடித்துவிடலாம் என்ற திருப்தியின் ஒளிஅதன் முகத்தில்.

இங்கு - சகுந்தலா பேசினாள்.

"நீங்கள்...........என் சாரதாவை மணந்துகொள்ளவில்லை?" சட்டென்று கேட்டுவிட்டாளே தவிர அக்கேள்

வியின் சக்தியை அப்பொழுது அவள் உணரவில்லை. ஆனால் அடுத்த கணமே உணர்ந்தாள்.

சகுந்தலா இக் 'கேள்வியைக் கேட்பாள்' என்று சற்றும் எதிர்பார்க்கவில்லை மணி. அவளை அணைத்துப் பிடித்திருந்த மணியின் கரங்கள், படபடத்தன. எதிர்பாராத விதமாகத் தாக்குண்ட சிறுத்தையைப்போல் துள்ளி எழுந்தான்.

"சகுந்தலா இது உனக்கு சம்பந்தமில்லாத கேள்வி. சாதாரணமாய் மணப்பதும், மணக்காமல் இருப்பதும் என்னைப் பொறுத்தது. நீ அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். உன்னை நேரில் பார்த்தவுடனே எனக்குப் பிடித்தது. மணந்தேன்......உனக்கு என்னைப் பிடிக்கவில்லையானால் திருமணத்திற்கு ஏன் ஒப்புக்கொண்டாய்? ஒப்புக்கொண்டபிறகு ஏன் ஒப்பாரி வைக்கிறாய்?......போ போ......சகுந்தலா பட்டிக்காடு; நான்தான் ஏமாந்துவிட்டேன். உன் மனதை நான் முன்னமே அறிந்திருக்கவேண்டும்" கோபத்தில் 'படபட'வென பேசினான் மணி.

"ஏன் கோபமாகப் பேசுகிறீர்கள்? பெண் மனதைப் பற்றி யார் சிந்திக்கிறார்கள்? அதுவும் கிராமங்களில் பெண்களின் சம்மதத்தை அறிந்தபிறகா திருமணம் நடக்கிறது?" சகுந்தலா என்னவோ சாதாரணமாகப்பொதுவாகத்தான் கூறினாள்.

ஆனால் மணியின் மனதில், தனக்கு சாதகமாகப் பொருள் கொண்டது. கோப உணர்ச்சி அதிகரித்தது.

"அப்படியென்றால் என்னை உனக்குப் பிடிக்கவில்லை! உன்னிடம் சம்மதம் கேட்டிருந்தால், நீ கண்டிப்பாக மறுத்திருப்பாய் அப்படித்தானே!"

மணியின் கோபம் கண்ட சகுந்தலாவின் உடல் பதறியது. பேசத் தெரியாமல், பதட்டத்தில் ஏதோ உளறி விட்டோமே, என்று கலங்கினாள். மணியை சமாதானப் படுத்த முயன்று இதமாகப் பேசத்தொடங்கினாள்.

"தயவு செய்து ஆத்திரப்படாதீர்கள். உங்களைப் பிடிக்கவில்லை என்று நான் சொல்லவே இல்லையே..........."

"சீ, நிறுத்து! உன் புற அழகைக்கண்டு நான் அறிவிழந்துவிட்டேன். என் வாழ்வையே கெடுத்துக்கொண்டேன். தங்க ஊசியானாலும் கண்களில் குத்திக்கொள்ள முடியாது.. போ; என் முன் நில்லாதே." வார்த்தைகளைக் கொட்டிவிட்டு வெறுப்புடன் கட்டிலில் சாய்ந்தான் மணி.

'மியாவ்!.......' என்ற ஒலி, அருகே இருந்த அறையிலிருந்து சிதறியது.

பாலைக்குடிக்கும் ஆர்வத்தில் உறியின்மீது ஏறிய பூனை, பாற் கலத்தின் ஓரத்தில் கால் வைத்ததினால், ஏற்கெனவே சரிந்திருந்த கலம், கவிழ்ந்து கீழே விழுந்து உடைந்து சிதறியது; பால் பூராவும், மண் தரையோடு ஐக்கியமாகியது. ஏமாற்றமடைந்த பூனை உறியின்மீதிருந்தபடியே ஏமாற்ற உணர்ச்சியும், அதனால் உண்டான கோப உணர்ச்சியும் போட்டியிட பரிதாபமாகக் கீழே பார்த்து ஏங்கி அழுதது.

கட்டிலில் படுத்த மணி அங்குமிங்குமாகப் புரண்டான். அவன் உள்ளத்தில் புயல்; எண்ணத்தில் ஏக்கம்.

சிலையாக நின்ற சகுந்தலாவின் உள்ளத்தில், துக்கம், ஏக்கம், நிராசை எல்லாமே அலைமோதின.

இருவர் மனங்களும் வேதனை அடைந்தன. ஆனால் வேதனைகளில் வேறுபாடு; அதோடு இரவு நேரம்! வேதனை தீர வழி ஏது?



வியின் சக்தியை அப்பொழுது அவள் உணரவில்லை. ஆனால் அடுத்த கணமே உணர்ந்தாள்.

சகுந்தலா இக் 'கேள்வியைக் கேட்பாள்' என்று சற்றும் எதிர்பார்க்கவில்லை மணி. அவளை அணைத்துப் பிடித்திருந்த மணியின் கரங்கள், படபடத்தன. எதிர்பாராத விதமாகத் தாக்குண்ட சிறுத்தையைப்போல் துள்ளி எழுந்தான்.

"சகுந்தலா இது உனக்கு சம்மந்தமில்லாத கேள்வி. சாரதாவை மணப்பதும், மணக்காமல் இருப்பதுவும் என்னைப் பொறுத்தது. நீ அதைப்பற்றிக் கவலைப்படவேண்டாம். உன்னை நேரில் பார்த்தேன், எனக்குப் பிடித்தது. மணந்தேன்........உனக்கு என்னைப் பிடிக்கவில்லையானால் திருமணத்திற்கு ஏன் ஒப்புக்கொண்டாய்? ஒப்புக்கொண்ட பிறகு ஏன் ஒப்பாரி வைக்கிறாய்?........செ செ........சுத்தப் பட்டிக்காடு; நான்தான் ஏமாந்துவிட்டேன். உன் மனதை நான் முன்னமே அறிந்திருக்கவேண்டும்" கோபத்தில் 'படபட'வென பேசினான் மணி.

"ஏன் கோபமாகப் பேசுகிறீர்கள்? பெண் மனதைப் பற்றி யார் சிந்திக்கிறார்கள்? அதுவும் கிராமங்களில் பெண்களின் சம்மதத்தை அறிந்தபிறகா திருமணம் நடக்கிறது?" சகுந்தலா என்னவோ சாதாரணமாகப்—பொதுவாகத்தான்

ஆனால் மணியின் மனநிலை, தனக்கு சாதகமாகப் பொருள் கொண்டது. கோப உணர்ச்சி அதிகரித்தது.

"அப்படியென்றால் என்னை உனக்குப் பிடிக்கவில்லை! உன்னிடம் சம்மதம் கேட்டிருந்தால், நீ கண்டிப்பாக மறுத்திருப்பாய் அப்படித்தானே?"

மணியின் கோபம் கண்ட சகுந்தலாவின் உடல் பதறியது. பேசத் தெரியாமல், பதட்டத்தில் ஏதோ உளறிவிட்டோமே, என்று கலங்கினாள். மணியை சமாதானப்படுத்த முயன்று இதமாகப் பேசத்தொடங்கினாள்.

“தயவு செய்து ஆத்திரப்படாதீர்கள். உங்களைப் பிடிக்கவில்லை என்று நான் சொல்லவே இல்லையே...........”

“சீ, நிறுத்து! உன் புற அழகைக்கண்டு நான் அறிவிழந்துவிட்டேன். என் வாழ்வையே கெடுத்துக்கொண்டேன். தங்க ஊசியானாலும் கண்களில் குத்திக்கொள்ள முடியாது.. போ; என் முன் நில்லாதே.” வார்த்தைகளைக் கொட்டிவிட்டு வெறுப்புடன் கட்டிலில் சாய்ந்தான் மணி.

‘டபார்!........’ என்ற ஒலி, அருகே இருந்த அறையிலிருந்து சிதறியது.

பாலைக்குடிக்கும் ஆர்வத்தில் உறியின்மீது ஏறிய பூனை, பாற் கலத்தின் ஓரத்தில் கால் வைத்ததினால், ஏற்கனவே சரிந்திருந்த கலம், கவிழ்ந்து கீழே விழுந்து உடைந்து சிதறியது; பால் முழுவதும், மண் தரையோடு ஐக்கியமாகியது. ஏமாற்றமடைந்த பூனை உறியின்மீதிருந்தபடியே ஏமாற்ற உணர்ச்சியும், அதனால் உண்டான கோப உணர்ச்சியும் போட்டியிட பரிதாபமாகக் கீழே பார்த்து ஏங்கி அழுத்தது.

கட்டிலில் படுத்த மணி அங்குமிங்குமாகப் புரண்டான். அவன் உள்ளத்தில் புயல்; எண்ணத்தில் ஏக்கம்.

சிலையாக நின்ற சகுந்தலாவின் உள்ளத்தில், துக்கம், ஏக்கம், நிராசை எல்லாமே அலைமோதின.

இருவர் மனங்களும் வேதனை அடைந்தன. ஆனால் வேதனைகளில் வேறுபாடு; அதோடு இரவு நேரம்! வேதனை குறைய வழி ஏது?



# 10. மணப்பெண்ணின் மனம்

இரவு என்னும் அரக்கனோடு பன்னிரு மணி நேரம் போராடி, வெற்றிக்கொடிபிடித்து வீர நடை போட்டு, வான வெளியில் தோன்றினான் அருணன்.

கள்ளர்களுக்கும், காதலர்களுக்கும் களிப்பைக் கொடுத்துவிட்டு, அருணனுக்குத் தோற்று ஓடிய இருள் அரக்கன், மணிக்கும், சகுந்தலாவுக்கும், துன்பத்தையும் துயரத்தையும் கொடுத்துவிட்டுப் போய்விட்டான்.

என்றும்போன்றே அன்றும் பொழுது புலர்ந்தது. புள்ளினங்கள் சப்த சுரங்களையும் இசைத்தபடி பல்வேறு திசைகளுக்கும் பறந்துசென்றன. தென்னை ஓலைகளில் தேங்கி நிற்கும் பனித்துளிகள், காலைக் கதிரொளியில் முத்துக்களாகப் பிரகாசித்தன. ஒன்றிரண்டு சேவல்கள் இன்னமும் கூவிக்கொண்டே இருந்தன. பூத்த புதுமலர் போன்ற மங்கையர்கள் புதுப்புது வகையான கோலங்களைத் தங்கள் வீட்டு வாயில் முற்றத்தில் இட்டு, வாயிற் முற்றத்திற்குப் புது மெருகு ஊட்டிக்கொண்டிருந்தனர்.

தோட்டத்தில் வந்து நின்ற சகுந்தலாவைக்கண்ட இளம் பசுங்கன்று 'அம்மா' என்று அலறியபடியே கட்டியிருந்த கயிற்றை இழுத்தது. கன்றின் குரல் கேட்ட தாய்ப் பசுவும், வயிற்றை ஏங்கி, ஒலியை சற்று தாழ்த்தி, பாசத்தோடு பதில் குரல் கொடுத்தது.

ஆனால், இத்தகு எத்தனையோ இயற்கை எழிற்காட்சிகளும், சகுந்தலாவின் மனதில் எந்தவிதமான மகிழ்ச்சி ரேகைகளையும் உண்டுபண்ணவில்லை.

மணமான மறுநாளே "சென்னைக்குப் புறப்படவேண்டும்" என்றான் மணி.

'எப்படியும் பாரம் தொலைந்தால் போதும்' என்றிருந்த கருணாகரனும், சத்தியவாணியும், மணியின் விருப்பத்தை மனமாற வரவேற்று, தம்பதிகளை அனுப்பிவைத்தார்கள்.

சகுந்தலாவுக்கு ரயிலில் பிரயாணம் செய்து அனுபவமில்லை. ரயிலில் ஏறியதும் பெட்டியிலிருந்தபடியே, கண்களை இமைக்காது அகல விரித்துக்கொண்டு, அங்குமிங்குமாகப் பார்த்துக்கொண்டேயிருந்தாள்.

ரயில் புறப்பட்டது. மரங்களும் மாடங்களும், தந்திக் கம்பிகளும் யாருக்கோ அஞ்சி ஓடுவதுபோல், சகுந்தலாவின் பார்வையிலிருந்தும் ஓடி மறைந்துகொண்டிருந்தன.

இந்த விநோதமான காட்சிகளில் — புதுக் காட்சிகளில் தன்னை மறந்திருந்த சகுந்தலா, திடீரென்று முதல் இரவு சம்பவம் நினைவு வரவே, கவலை உணர்ச்சி படர்ந்த முகத்தினளாய், பெட்டிக்குள் திரும்பி, மணியின் முகத்தைப் பார்த்தாள்.

சகுந்தலா, தன்னைப் பார்ப்பதைக் கண்ட மணி, ஒன்றுமறியாதவன்போல், சட்'டென்று தலையைத் திருப்பி, தன் பார்வையை வேறு பக்கமாகச் செலுத்தினான்.

அதே பெட்டியில் இருப்பவர்களில் ஓரிருவர், இதைக் கவனித்து, ஒன்றும் புரியாதவர்களாகத் தங்களுக்குள்ளேயே ஆச்சரியக் குறிகளை வெளிப்படுத்திக்கொண்டனர்.

''பார்த்தால் புது மணத்தம்பதிகள்போலிருக்கிறது.... இவ்வளவு நேரமும், அவர்களுக்குள் ஒரு வார்த்தைகூட பேசிக்கொள்ளவில்லையே! இருவரிடமும் மகிழ்ச்சியின் ரேகையைக்கூட காணவில்லை.'' இரகசியமாக யாரோ ஒருவர் அடுத்திருக்கும் பிரயாணியோடு பேசியது, ஓடும் ரயிலின் 'கடபுடா' ஒலியிலும், சகுந்தலாவின் காதுகளில் தெளிவாகக் கேட்டது.

மனம் குழம்பியது. பொங்கி வரும் அழுகையை, சூழ்நிலை-சுற்றுப்புறம் உணர்ந்து அடக்கிக்கொண்டாள். மறுபடியும் தன் கணவனின் முகத்தைப் பார்க்க விரும்பினாள். ஏதோ ஒரு இனம் தெரியா உணர்ச்சி தடுத்தது. திரும்பவும் வெளியில் திரும்பி தன் பார்வையை இயற்கை காட்சிகளில் செலுத்தினாள். தாகத்தால் தொண்டை வரண்டது. விநாடி-விநாடியாக நேரம் போய்க்கொண்டே இருந்தது.

உமிழ் நீரைக் கூட்டி விழுங்கினாள். தாகம் தணியவில்லை. ...........'கல் நெஞ்சுக்காரர்தான் தண்ணீர் வேண்டுமா? என்றுகூட கேட்கவில்லையே!' என்று, அருகில் இருந்த கணவனை எண்ணி வருந்தினாள்.

ரயில், அப்பொழுது ஏதோ ஒரு ஆற்றுப்பாலத்தின் மீது ஓடிக்கொண்டிருந்தது. நொங்கும் நுரையுமாகப் பெருக்கெடுத்து, விதிவிட்ட வழியாகப் போவதுபோல், ஆற்று வெள்ளம் அலைமோதிப் போய்க்கொண்டிருந்தது.

தொண்டை வரண்டு ஒரு குவளைத் தண்ணீர் இல்லாமல் இருக்கிறாள் சகுந்தலா. நேராக கீழே ஆற்றுவெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகிறது. ஆனால் அள்ளிக் குடிக்க முடியாத நிலை: கண்களால் கண்டுகொள்ளலாம் அவ்வளவுதான்.

விதவிதமான உணவுப் பொருட்களை உணவு விடுதிகளில்—கண்ணாடி அலமாரிகளில் பார்த்து ஏங்கும் ஏழைகளின் நிலையில் இருந்தாள் சகுந்தலா. 'தன் வாழ்வும் இப்படித்தான் இருக்குமோ? கணவனைப் பார்ப்பதோடு திருப்தி அடையவேண்டியதுதானோ?'' என்ற ஒரு எண்ணம் மின்னலைப்போல் சகுந்தலாவின் உள்ளத்தில் பளிச்சிட்டு மறைந்தது.

எண்ணங்கள் சுழல்வதைப்போன்று, ரயிலின் சக்கரங்களும் சுழன்றுகொண்டே சென்றன.

---

# 11. தியாகத்தின் உதயம்

இப்பொழுது, நாம் வேணுவின் நிலையை சற்றுக் கவனிப்போம்.

அன்று இரவு சகுந்தலாவை சந்தித்தது; சகுந்தலா தனக்குக் கடிதம் எழுதியது; பிறகு இராமனுஜரை தூது

அனுப்பி, ஆக்மணநரால் அவமானப்பட்டது; — எல்லாமே வேணுவைக் குழப்பிக்கொண்டிருந்தன. அதோடு சகுந்தலா வின் திருமணமும் நெருங்கி வரவே, கிராமத்திலிருக்கப் பிடிக்காமல் உடனேயே சென்னைக்கு வந்துவிட்டான்.

வேணு சென்னைக்கு வந்த அன்று, சீனுவின் ஆரக் கந்தனமான் ஆக்ரமிப்பைக் கண்டித்து, இந்தியா முழுவதும் சர்வ கட்சி ஊர்வலமும், பொதுக்கூட்டங்களும் நடந்துகொண்டிருந்தன. வேணுவும் பல கூட்டங்களில் பங் கெடுத்துப் பேசினன். ஊர்வலத்தின் அணி ஒன்றுக்குத் தலைமைதாங்கி திறம்பட நடத்தினன். அதோடு பல நல்ல அரசியல் தலைவர்களை சந்தித்து அவர்களின் நட்பையும், மதிப்பையும் பெற்றான்.

அந்த அரசியல் தலைவர்களில் ஒரு பெருந்தகையார், தமிழுக்காகவே தமிழ் நாட்டுக்காகவே—தமிழர்களின் வாழ் வுக்காகவே தன் வாழ்க்கையை அர்ப்பணித்திருந்தார். அதோடு இந்தியத்தாய்மீதும் அளவற்ற பக்திகொண்டிருந் தார். அந்த தியாகத்தின் திருஉருவை—வீரத்தின் தனிச் சுடரை நேரில் கண்டு பல மணிநேரம் பேசினன்.

அப்பெருந்தகையார், வேணுவை எளிதில் கவர்ந்ததில் ஆச்சரியமில்லை. வேணுவின் தமிழ் ஆர்வமும், நாட்டுப்பற் றும், ஏழைகளுக்குத் தொண்டு செய்யவேண்டும் என்ற நல்லெண்ணமும் அவருக்கு அவன்மீது அன்பைப் பெருகச் செய்தன.

ஆகவே ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டு ஒன்றி விட்டனர். அந்த அருந்தலைவரைத் தன் குருவாக உள் ளக்கோயிலில் குடியேற்றினன் வேணு. தலைவரும் வேணுவை, தன் கோடானகோடி சீடர்களில் ஒருவராக மனமாற ஏற்றுக்கொண்டார். தியாகியைத் தியாகியால் தானே அறிய முடியும்?

தமிழகத்தின் இன்றைய நிலையையும், பாரதத்தின் இன்றைய நிலையையும் செய்யவேண்டிய சேவைகளையும் அறிந்து கொண்டான் வேணு. தமிழகம் சுயாட்சி பெற்

றல் தான், தன் நிறைவுபெறும் என்பதையும் உணராது கொண்டான். சுயாட்சி வேண்டி விரைவில், சர்வகட்சி போராட்டம் ஒன்று நடத்த வேண்டிய திட்டம், சூழ்நிலை காரணமாக தற்பொழுது கைவிடவேண்டியிருந்தது: என்பதையும் தெரிந்துகொண்டான். முதலில் தமிழகம், அடுத்தது பாரதம்; மூன்றாவது உலகம்; இதுவே உண்மையான தேசப்பற்று, என்பதையும் உணர்ந்தான்! அதற்காகவே உழைக்க உறுதி பூண்டு, புது மனிதனாக, புடமிட்டத் தங்கமாக வெளிவந்தான், அந்த மாபெரும் தலைவரின் இல்லத்தில் இருந்து.

சில நாட்கள் சென்னையிலேயே இருந்தான்.

அன்று, தன் உயிர்த்தோழன் சபாபதியுடன், எழும்பூர் நிலையத்தின் சமீபமாக வந்துகொண்டிருந்தான் வேணு.

வேணுவும், சபாபதியும் மகிழ்ச்சியாகப் பேசிக்கொண்டு வந்தார்கள். பேற்சுக்களின் ஊடேயே சுயாட்சித் தமிழகம் மாநிலங்களுக்குக் கூடுதல் அதிகாரங்கள் வேண்டும் "செஞ்சிறுவுக்கு அழிவு நெருங்கிவிட்டது" என்பன போன்ற சொற்கள் துள்ளித் தெறித்தன.

வேணு பேசும்போது, அவன் வலக்கரம் மேலே போவதும், திடீரென்று கீழே வந்து இடக்கரத்தோடு பின்னுவதுமாக இருந்தது!

இளம்பசு ஒன்று சேர்ந்துவர விரிந்த வீதியில் நடக்கும் விடையைப்போல் நடந்துவந்தார்கள், அவ்வீரப் புதல்வர்கள்.

எழும்பூர் நிலையத்தில் 'ஓ'வென்ற இரைச்சலை வெளியிட்டு, ரயில் ஒன்று வந்து நின்றது.

பெட்டி படுக்கை—மூட்டை முடிச்சுகளுடன் பலர் இறங்கிக்கொண்டிருந்தனர். பேச்சினூடேயே அந்தப் பிரயாணிகளைப் பார்த்துக்கொண்டிருந்த வேணுவின் பார்வையில் ஒரு ஆச்சரியக்குறி தோன்றியது. அதைக் கவனித்த சபாபதியும், வேணு பார்த்துக்கொண்டிருந்த திக்கு நோக்கித் திரும்பினான்.

வேணுவுக்கு ஆச்சரியமூட்டும் வகையில், ரயிலில் இருந்து இறங்கி நடந்து வந்துகொண்டிருந்தவர்கள், சகுந்தலாவும், மணியும் தான் என்பதைப் புரிந்துகொள்ள சபாபதிக்கு சில விநாடிகள் ஆயின.

'மணமான மறுநாளே புறப்பட்டு விட்டார்களே? வீட்டில் ஏதாவது கலகம் நடந்து விட்டதோ................' என்றெல்லாம் எண்ணலானான் வேணு.

பிறகு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனாக கவனிக்காதது போல் தன் பார்வையைத் திருப்பிக் கொண்டான்.

வேணு நிற்பதையும், தன்னைக் கண்டவுடன் அவன் விழிகள் ஆச்சரியக்குறி தோற்றுவித்து, அகல விரிந்ததையும் சற்று நேரத்தில் திடீரென்று பார்வையைத் திருப்பிக் கொண்டதையும், ரயிலில் இருந்து இறங்கிவரும் போதே கவனித்துக்கொண்டாள் சகுந்தலா.

'வேணுவிடம் பேசவேண்டும்' என்ற ஆவல் ஒரு புறமும், 'வீதியில் நிற்பவரிடம் எப்படி பேசுவது?' என்ற நாணம் மறுபுறமுமாக மனதைக்குழப்ப மணியின் பின்னே நடந்தாள் சகுந்தலா.

"என்னப்பா வேணு........... அட, சபாபதியா? என்ன, இரண்டு பேருமா சேர்ந்து எழும்பூரில் என்ன திட்டம் திட்டுகிறீர்கள்?" அருகில் வந்து நின்று 'டக்' கென்று பேசிய மணியின் குரல் கேட்டு, ஏதோ, அப்பொழுது தான் பார்ப்பவர்களைப்போல் நடித்து, "யாரு, மணியா! நாங்கள் கவனிக்கவே இல்லையே! என்று ஒரு போடு போட்டார்கள் இருவரும்.

ஆனால் மணியைப் பார்க்கத்திரும்பிய வேணுவின் கண்கள் முதலில் சகுந்தலாவைக் கண்டன. ஆனால் சகுந்தலாவின் விழிகளோ நில்மென்னும் நல்லானை ய கூர்ந்து நோக்கியபடி இருந்தன.

"என்ன வேணு, எங்கள் திருமணத்திற்கு கூட வரவில்லையே............ஏதாவது" என்று இழுத்தான் மணி.

"செ-செ: அப்படி ஒன்றுமில்லை! மிகவும் அவசரமாக ஒரு வாரத்திற்கு முன்பே சென்னைக்கு வந்தேன். ஆனால் இங்கு வந்ததும், சீன ஆக்கிரமிப்பைக் கண்டித்து ஊர்வலம், பொதுக்கூட்டம் எல்லாம் நடந்தன. சர்வ கட்சிக் கூட்டணி அல்லவா எனக்கு சிறிதளவு பங்கு கிடைத்தது, அப்படியே நாட்கள் நகன்றுவிட்டன. அவ்வளவுதான்!" வேணு கூறி முடிக்கு முன் சபாபதி ஆரம்பித்தான்.

"அது மட்டுமா நேற்று திருவல்லிக்கேணி கடற்கரையில் இளங்கோ விழாவை முன்னிட்டுப் பொதுக்கூட்டம். நம்ம வேணு இரண்டு மணி நேரம் அங்கு இளங்கோவைக் காட்டியே பாரதத்தின் பெருமை கூறி, அரக்க மனம் படைத்து அழிவைத் தேடிக்கொள்ளத் துடிக்கும் கம்யூனிஸ்ட் சீனாவையும் வன்மையாகக் கண்டித்துப் பேசிவிட்டு, இரவு முழுவதும், எதை எதையெல்லாமோ எழுதிக் குவித்துவிட்டு, காலையில், என்னையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டு விட்டான் ஊருக்கு. அதோடு இன்னொரு முக்கியப் பொறுப்பும் இவனுக்கு கிடைத்திருக்கிறது. இந்திய நாட்டை நமது—தாயகத்தைப் பாதுகாக்க தங்கள் இன்னுயிரைத் தியாகம் செய்யும் வீரர்களோடு சேர்ந்து நாங்களும் ராணுவ வீரர்களாகப் பணியாற்றப் போகிறோம்.

கல்லூரியில் கற்ற இராணுவப் பயிற்சியை செயலில் காட்டி, செஞ்சீனாவை முறியடிக்க விரைவில் புறப்படுவோமே. துரிதமாகவும், வீரமாகவும் பேசினான் சபாபதி.

"தகுதிக்கேற்ற பணி; வெல்க பாரதம்!" உணர்ச்சியோடு பாராட்டிவிட்டு, "இருவரும் சிவஞானபுரத்திற்கா போகிறீர்கள்?" என்றான் மணி.

"ஆமாம்" என்ற பாவனையில் தலையை அசைத்த வேணு, "நீ புதுக் குடித்தனம் தொடங்கிவிட்டாய், சீரும் சிறப்பும் பெற்று, பல்லாண்டு வாழ இறைவன் அருள்புரியட்டும். 'புயல்' பத்திரிகையில், சீனாவின் ஆக்கிரமிப்பைக்கண்டித்து

ஒரு தலையங்கம் எழுது' என்று கூறியபடியே சபாபதியின் முகத்தைப் பார்த்தான்.

சபாபதியும் அதை மனமார ஆமோதித்து, தலையை அசைத்தான்.

"ஓ! தாராளமாக எழுதுகிறேன். அது என் கடமை அல்லவா? ' என்று உணர்ச்சியோடு கூறிவிட்டு, சகுந்தலாவின் முகத்தைப் பார்த்தான் மணி.

குனிந்த தலை நிமிராமல், தன் வலது கால் பெரு விரலால், தரையில் குறுக்கும் நெடுக்குமாக கோடு இழுத்துக் கொண்டிருந்தாள், சகுந்தலா. அந்தக் கோடுகள், அவள் மனதிற்குள் விழுந்து கொண்டிருந்த எண்ணக் கோடுகளை வெளிப்படுத்துவனபோல் விளங்கின.

"என்ன சகுந்தலா, நில ஆராய்ச்சியா? அல்லது கோலமிடுகிறாயா?" தன்னை அறியாமலே கேட்டு விட்டான் மணி. கேட்டபிறகுதான் அவனுக்குப் பழைய சம்பவம் நினைவுக்கு வந்தது...............

மணியைப் போன்றே சகுந்தலாவும் அதிர்ச்சி அடைந்து விட்டாள். முதல் இரவு நிகழ்ச்சிக்குப் பின் இது வரைக்கும் சகுந்தலாவிடம் ஒரு வார்த்தைகூட பேசவில்லை மணி. அடுத்து முதல் முதலில் ஆரம்பமான பேச்சும், முதல் சந்திப்பில், கோலமிட்ட காட்சியையே நினைவூட்டியது.

மணியையும், சகுந்தலாவையும், இணைத்துவைத்த கோலம், வேணுவின் வீட்டில் புயலை உண்டாக்கிவிட்டதல்லவா? அது மட்டுமா? அன்று, புயலுக்கு முன் சிறு தென்றல் கூட வீசியதே.

சகுந்தலா கோலப்பொடி டப்பாவை அறையில் கொண்டு வைத்ததும், அவள் முகத்தில் அரும்பிய வியர்வையைத் துடைக்க, வேணு கைக்குட்டையை நீட்டியதும், திரைப்படமாக வேணுவின் இதயத்தில் பளிச்சிட்டு மறைந்தன.

"கோலம் போடுகிறாயா? என்று மணி கேட்ட ஒரு சொல், அந்த நால்வரும் அடங்கிய "மாபெரும்" கூட்டத்தில் சற்று நேரம் அமைதி நிலவச் செய்தது.

'என்ன சகுந்தலா? இப்படி ஊமை மாதிரி நிற்கிறே? உங்கள் ஊர்க்காரர்; உறவினரைப் போல் பழகியவர்......... இப்படி பேசாமல் நின்றால், நாகரீகமாக இருக்குமா?' என்று ஒரு அதட்டு, அதட்டினான் மணி.

தன் கணவர் பிறர் முன்னிலையிலாவது அன்புடன் பேசுகிறாரே என்ற மகிழ்ச்சி மேலிட, வேணுவிடம் ஏதேனும் பேச எண்ணி, தலை நிமிர்ந்தாள் சகுந்தலா.

"பேசாமல் இருப்பது ஒரு பெரிய குற்றமா?........ என்றைக்கும் சிறு பெண்ணு? நல்ல பெண்களுக்கு நாணமே சிறந்த அணிகலன். எங்கள் கிராமத்துப் பெண்கள் எல்லோருமே சகுந்தலாவைப் போல் நற்பண்பு உள்ளவர்கள்தான். அதிலும் என் தங்கை சகுந்தலாவிற்கு, அறிவும், அடக்கமும், நாணமும் அதிகம். எனக்கு நன்றாகத் தெரியும். மணி, ஒன்று சொல்கிறேன்—நல்ல குணவதிதான். ஆனால் பள்ளிப் படிப்பும்; பட்டணத்து நாகரீகமும் இல்லாதவள். என் தங்கை அறியாமல் ஏதாவது தவறு செய்தால் நீ தயவு செய்து மன்னித்துக் கொள். நான் ஒரு அண்ணனின் இடத்திலிருந்து, உன்னிடம் வேண்டிக் கொள்கிறேன்." பாச உணர்ச்சி மிளிர பக்குவமாகக் கூறினான் வேணு. வேணுவின் கண்கள் கலங்கவில்லை. ஆனால் உள்ளம் கலங்கியது.

பேசி முடிந்ததும், மணி ஒரு வாடகைக் காரை அமர்த்திக் கொண்டு, வேணுவிடம் விடை பெற்றான். அது வரைக்கும் பேசாதிருந்த சகுந்தலா, புறப்படும் பொழுது, வேணுவைப் பார்த்து "நான்............போய் வருகிறேன்............அண்ணா..........!' என்று நா தழுதழுக்கக் கூறி கூப்பிய கரங்களுடன், கண்களில் நீர் மல்க, விடை பெற்றாள்.

தம்பதிகளுக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டு ஒரு சலனமும் இல்லாதவனாக சபாபதியைப் பார்த்தான்

வேணுவின் பார்வையில் எதையோ புரிந்து கொண்டவனாகத் தலையை அசைத்தான், சபாபதி. உடனே, இருவரும் சிவஞானபுரத்தை மனதிற் கொண்டு ரயில் நிலையம் நோக்கி நடந்தார்கள்.

---

# 12. வேணுவின் பண்பு

**வா**ழ்வில், எத்தனையோ குடும்பங்களை நாம் சந்திக்கிறோம். ஒவ்வொரு குடும்பமும் ஒவ்வொரு விதமாக வாழும்.

சில குடும்பங்களில், எப்பொழுதும் குழப்பமும், கும்மாளமுமாக இருக்கும். வேறு சில குடும்பங்களில், அங்குள்ள அங்கத்தினர்களுக்குள்ளேயே ஒற்றுமை இல்லாதவர்களைப் போல்—தொடர்பு இல்லாதவர்களைப் போல் தன் காரியம் தனக்கு, என்கிற தோரணையில் ஒவ்வொவரும் நடந்து கொள்வார்கள்.

இன்னும் சில குடும்பங்களில், உள்(வீட்டு)நாட்டுக் குழப்பம் எவ்வளவு இருந்தாலும் அடுத்தவீட்டுக்குக் கூட தெரியாமல் திறமையாக நடந்து சமாளித்துக் கொள்வார்கள். பிறர் முன்னிலையில், வீட்டிற்கு வரும் விருந்தாளிகள் முன்னிலையில் சிரித்துப் பேசி தங்களுக்குள் அன்பும், பண்பும் நிரம்பி வழிவது போல் நடித்து சரிப்படுத்தி விடுவார்கள். விருந்தாளிகள் சென்றதும், திரும்பவும், "பழைய குருடி கதவைத் திறடி" என்ற கதையைப் போல் ஒவ்வொருவரும் கீரியும் பாம்புமாக மாறி விடுவார்கள்.

அதைப் போலவே, காரில் ஏறிய மணியும்; சற்று முன் மகிழ்ந்து பேசியதை மறந்து, சகுந்தலாவிடம் ஒரு வார்த்தை கூட பேசாததோடு, முகத்தையும் கடுப்பாக வைத்துக் கொண்டான். இந்த மாற்று நிகழ்ச்சி சகுந்தலாவுக்குப் பெரிய அதிர்ச்சியைக் கொடுத்தது! மணியைப் புரிந்து கொள்ளவே அவளால் இயலவில்லை. சற்று முன் மகிழ்ச்சியோடு பேசியதுதான் நடிப்பா? அல்லது இப்பொழுது கடுமையாகக் காட்சி அளிப்பதுதான் நடிப்பா?.... எதையுமே உறுதி செய்ய முடியாமல் சிலையாக அசையாமல் இருந்தாள், சகுந்தலா. உடல் அசையவில்லை. 'இதுதான் நல்லவேளை' என எண்ணி, மனம் அசையத் தொடங்கியது.

முருகன் முதலில் கோலம் போட்டு நிமிர்ந்த நிகழ்ச்சி. 'அந்த கோலமே தன் வாழ்க்கையை அலங்கோலமாக்கி விடுமோ' என்ற ஏக்கம். வேணுவின் உறுதி மொழிகள். அந்த மொழிகளின் சிகரமாக நின்று மறக்க முடியாதபடி மனதிற் பதிந்துவிட்ட ஒரு சில வார்த்தைகள். ஆம்; அவளால் அந்த வார்த்தைகளை மட்டும் மறக்க முடியவில்லை.

முக்கியமான ஒன்றை மனம் உறுதியாக ஏற்றுக் கொள்ளும்போது (முக்கியமில்லாத) மற்றவைகளை மறந்து விடுகிறதல்லவா? ஒரு புத்தகத்தைப் படித்து முடிக்கும் போது அவரவர்களுக்கு விருப்பமான கருத்துக்களே மனதில் உறைகின்றன. திரைப்படம் பார்ப்பதிலும் அப்படியே. இசை நிகழ்ச்சியிலும் அப்படியே. சுருங்கக் கூறினால் எந்த நிகழ்ச்சியானாலும், மனம் விரும்பியதையே கிரகித்துக் கொள்கிறது. அதுவே மறக்க முடியாததாகவும் ஆகிறது.

அதுபோன்றே சகுந்தலாவின் மனதிலும் வேணுவின் சொற்களில் சில பதிந்துவிட்டன. அந்த சொற்கள் வேணுவின் பெருந்தன்மையை நிலை நாட்டின. அவன் நல் மனதை எடுத்துக்காட்டின. காதலை விட கடமையே — ஒரு ஆண் மகனுக்கு மட்டுமல்ல பெண்ணுக்கும் முக்கியமானது, என்ற பெருந்தன்மையை உணர்த்தியது. வேணுவின் வாயி

லிருந்து உதிர்ந்த, 'தங்கை' என்ற அந்த சொல்! "என் சகோதரிக்கு வெட்கம் கூடுதல்; அவள் ஏதாவது தவறு செய்தாலும் மன்னித்துக்கொள்!" என்ற வேணுவின் வேண்டுகோள், அப்பொழுது அந்த வார்த்தைகளில் மிளிர்ந்த பரிவின் ஒளி, 'அண்ணனின் இடத்திலிருந்து சொல்கிறேன்' என்ற உரிமைப்பேச்சில் மின்னிய பாசத்தின் தோற்றம்........ எல்லாவற்றையும் எண்ணி—எண்ணி, வேணுவைப் பாராட்டியது, சகுந்தலாவின் புண்பட்ட உள்ளம்.

'எத்தனை மாற்றம்! என்னிடம் இரக்கமில்லையா என்று கேட்ட வேணுவல்லவா? அவர் காதலை நிராகரித்து, இன்னொருவரின் மனைவியான பின்பும், என்னை வெறுக்காததோடு, எனக்காகப் பரிந்தும் பேசுகிறாரே........ அன்றும் என்னிடம் அன்பு கொண்டிருந்தார். இன்றும் அப்படியே! ஆனால் முன்புள்ள அன்புணர்ச்சி வேறு; இப்போதைய அன்புணர்ச்சி வேறு. எத்தகைய பெருந்தன்மை! உருவத்தில் ஆண்களாக இருப்போர்கள் எல்லோருமே ஆண்களாகி விடுவார்களா? வேணுவைப் போல் உள்ளத்தில் ஆண்மை வேண்டும்! அன்பு வேண்டும். அவர்களே ஆண்கள்! இந்த நாடு பெற்ற பேறு அது. காலம் மாறினாலும் கடமை உணர்ந்து செயலாற்றும் எத்தனையோ நல்லவர்கள் இன்னமும் பிறந்து கொண்டுதான் இருக்கிறார்கள்........"

"கிரீச்........!" கார் நின்ற ஒலி, சகுந்தலாவின் சிந்தனையை நிறுத்தி தன் உணர்வு வரச் செய்தது.

பெட்டியை எடுத்துக் கொண்டு இறங்கி அருகில் இருந்த மாடி வீட்டிற்குள் நுழைந்தான் மணி. அவன் பின்னாலேயே சகுந்தலாவும் நடந்தாள்.

மணி அந்த வீட்டிற்குள் நுழைந்ததும், "யாரு? மணியா, வாப்பா வா; இது உன் மனைவியா? வாருங்கள்........ மணி நீ கொடுத்து வைத்தவன். கிராமத்துக்குப்போய் மகாலட்சுமிமாதிரி ஒரு பெண்ணைக் கொண்டு வந்துவிட்டாயே' என்று சிரித்த முகத்துடன் 'பட பட' வென்று பேசி இருவரையும் வரவேற்றாள், வீட்டிற்குள்

இருந்து வந்த—ஐம்பது வயது மதிக்கத்தக்க ஒரு அம்மாள்.

மணி, சிரித்துக்கொண்டே, "ஐயா காரியாலயத்திற்குப் போய்விட்டாங்களா? என்று கேட்டபடியே, சகுந்தலாவைப்பார்த்து, "இதுதான் என் முதலாளியின் வீடு; இவங்க அவர்களுடைய மனைவி. பெயர் கல்யாணி அம்மா. ரொம்ப நல்லவங்க; எனக்கு தாய்மாதிரி". என்று ரத்தினச் சுருக்கமாக அறிமுகப்படுத்தினன்.

மணி, கூறியவைகளைக்கேட்ட சகுந்தலா, சிறிது நாணம் கலந்த மரியாதையோடு; அடக்கமாக வணக்கம் செலுத்தினள்.

"தீர்க்காயுசா இரு; உம் சீக்கிரம் மாடிக்குப்போய் குளித்து, உடை மாற்றிவிட்டு வாருங்கள். சாப்பிட்டு முடிந்தபிறகு பேசலாம்" என்று அன்போடு கூறினள் கல்யாணி அம்மாள்.

மணியும் தலையை அசைத்துவிட்டு, மாடிப்படி ஏறினன். சிரித்த முகத்துடன் கல்யாணி அம்மாளைப் பார்த்தபடியே மணியைப் பின் தொடர்ந்தாள் சகுந்தலா. அவள் எவ்வளவுதான் சிரித்தாலும், அந்த சிரிப்பில், உண்மையான அழகு இல்லை. ஆனந்தம் இல்லை. காரணம்? அது அகத்தில் இருந்து வரவில்லை. வெறும் சிரிப்பாக போலிச் சிரிப்பாக—வரண்ட சிரிப்பாகவே இருந்தது.

மாடி அறைக்குள் நுழைந்ததும், பழையபடி மாறிவிட்டான் மணி. "இ ந் த ா சகுந்தலா, இதுதான் நம் இடம். அதாவது நாம் குடும்பம் நடத்தவேண்டிய இடம். சமையலுக்கு வேண்டியதை எல்லாம் நான் காரியாலயத்திற்குச் சென்றதும் வாங்கி அனுப்புவேன். இன்றைய உணவு முதலாளி வீட்டில். சாமான்களை சரியாக வைத்துவிட்டு குளிக்கப் புறப்படு." என் று அவள் முகத்தைப் பார்க்காமலே கூறிவிட்டு அவள் பதிலை எதிர்பாராமலே குளி அறைக்குச் சென்றான் மணி.

மணி சென்ற திக்கையே பார்த்துக்கொண்டு நின்ற சகுந்தலா, 'எதிர்பாராத விதமாக, முதல் இரவில் உளறிய

ந்த சொற்கள், தன் வாழ்நாள் முழுவதையுமே பாழாக்கி டுமோ என்று மனம் பதறினாள்; இரவு, பகல் என்று மாறிமாறி வரும் காலத்தைப்போல் சில வேளைகளில் சிரிப்பதும், அடுத்தே சினம் கொள்வதுமாக இருக்கிறாரே. ரயிலில் இருந்து வருவதற்குள் எத்தனை தடவைகள் மாறி மாறிப் பேசிவிட்டார். எத்தனை இரவு பகல் ஆகிவிட்டது. 'இந்த எழுத்தாளர்களே இப்படித்தானோ!' என்றெல்லாம் சிந்தித்துச்—சிந்தித்து சிந்தை நொந்தாள் சகுந்தலா. 'இருந்தாலும் நாளடைவில் சரியாகிவிடும்' என்று தன் மனதை சமாதானப்படுத்திவிட்டு; கொண்டு வந்த பொருட்களை ஒழுங்குபடுத்தி வைப்பதில் முனைந்தாள் சகுந்தலா.

---

# 13. தந்தையும் மகனும்

மாலை மணி ஐந்துக்கு மேல் இருக்கும். கார்மேக குழுக்கள் புடைசூழ்ந்து, சிவஞானபுரம் கிராமத்தை விழுங்கிவிடுவதுபோல் நடித்தன. குளிர் காற்று, சற்றுக் கடுமையாக வீசி, குடில்களில் இருந்தவர்களைத் தன் ஆசை தீர அணைத்துக்கொண்டது. கிழக்கு வானில், 'டார்ச் லைட்' அடித்தாற்போல் இடையிடையே மின்னல் விட்டு விட்டுப் பிரகாசித்தது. அகன்ற வானில் யாரோ பெரிய பாத்திரங்களை உருட்டுவதுபோல் 'கட-கட'வென கடூரமான முழக்கம் கேட்டது. அந்த இடி ஓசை கேட்டு, அக்'கிராமத்திலிருந்த தலைப்(முதல்) பிள்ளைகளான, கிழவர்கள் முதல் சிறுவர்கள் வரைக்கும் ஓடி ஒழிந்துகொண்டார்கள்! காரணம்? 'இடி தலைப்பிள்ளைகளின் தலையில்தான் விழும்' என்பது கிராமத்தார்களின் நம்பிக்கை. "யானை வரும் பின்னே மணி ஓசை வரும் முன்னே" என்பதுபோல், மழை பொழிவதற்கான இத்தனை அறிகுறிகளும் தென்பட்டபிறகு, விசும்பின் துளிகளும் மண்ணில் வீழ்ந்து, பசும்புல் தலைகளை மட்டுமின்றி, கிராமம் முழுவதையுமே நனைக்கத் தொடங்கின.

ஓட்டைக் குடிசைகளில் ஒழுகும் மழைநீர், தரையை நனைத்துவிடாதபடி சிறு-சிறு மண் சட்டிகளிலிருந்து, பெரிய பானைகள் வரை ஒழுங்காக வரிசையில் உட்கார்ந்திருந்தன. வயல்களில் வேலை செய்துவிட்டு வீடு திரும்பிக்கொண்டிருந்த விவசாயிகள், வீட்டிற்குப்போய் வென்னீரில் குளிப்பதற்கு முன்பே, மழைத் தண்ணீரில் குளித்தபடி சென்றார்கள்.

மழையின் இரைச்சலையும் மீறிக்கொண்டு, ஆத்மநாதரின் வீட்டு, ரேடியோ ஏதோ புரியாத பாட்டு ஒன்றை உமிழ்ந்துகொண்டிருந்தது.

கொட்டும் மழையில் நனைந்துகொண்டு நடக்கும், இந்நாட்டின் முதுகெலும்பான விவசாயிகள் ஒரு பக்கம், ரேடியோவின் முன்பு உட்கார்ந்துகொண்டு, மழையைப் பற்றியோ, அந்தக்கிராமத்து மக்களைப்பற்றியோ சிறிதும் கவலைகொள்ளாமல் நிம்மதியாகத் தாளம்போட்டுக்கொண்டிருக்கும் ஆத்மநாதரின் வர்க்கம் ஒரு பக்கமுமாகப் போட்டிபோட்டன.

வந்தனை செய்து வரவேற்கவேண்டிய உழவர்களின் குடிசைகள் மழையைத் தாங்க முடியாமல் ஒழுகிக்கொண்டிருந்தன.

நிந்தனை செய்து வெறுக்கவேண்டிய-உண்டு கொழுத்து உறங்கும் வர்க்கம் நிம்மதியாகத் தாளம் போட்டுக்கொண்டிருந்தன.

தெருவின் இரு மருங்கிலும் தோன்றிய குடிசைகளையும் இடையிடையே தோன்றிய ஒன்றிரண்டு வீடுகளையும் கடந்து மழையில் நனைந்தபடி வந்துகொண்டிருந்தார்கள் வேணுவும், சபாபதியும்.

தன் வீட்டு வாயிலில் வந்து நின்றதும், "சாரதா, சாரதா" என்று அழைத்தபடியே கதவைத் தட்டினான் வேணு.

"அண்ணா!" என்று அன்பொழுகக் குரல் கொடுத்தபடியே ஓடிவந்து கதவைத் திறந்த சாரதா, அன்னியர்

ஒருவர் தன் அண்ணாவின் அருகில் நிற்பது கண்டு, நாணத்தோடு தலை குனிந்து சற்றே ஒதுங்கி நின்றாள்.

"என்ன சாரதா சட்'டென்று அதிர்ச்சி அடைந்து சிலையாகிவிட்டாயே; இதுதான் என் நண்பன் சபாபதி. நான் உன்னிடம் பல தடவைகள் இவனைப்பற்றி சொல்லி யிருக்கிறேனே........வெகு சிரமப்பட்டு இன்று நம் வீட்டிற்கு விருந்தாளியாக அழைத்து வந்திருக்கிறேன்........ ஆமா, அப்பா எங்கே?" நண்பனை அறிமுகப்படுத்திவிட்டு தந்தையையும் விசாரித்துக்கொண்டு வீட்டினின் வந்தான் வேணு. கூடவே வந்த சபாபதியைத் தன் ஓரக்கண்ணால் பார்த்தபடியே உள்ளே ஓடினாள் சாரதா.

வேணுவும், சபாபதியும் நனைந்த உடைகளைக் களைந்து வேறு உடை மாற்றிக்கொண்டு வேணுவின் அறையில் வந்து உட்கார்ந்தார்கள்.

அறையினுள், மேசைமீது, சூடாக இரண்டு குவளைக் காப்பி ஆவியை மேலே விட்டபடி காத்துக்கொண்டிருந்தன.

"என்ன வேணு, ஏதாவது மந்திரம் படித்திருக்கிறாயா? கண் மூடித் திறப்பதற்குள் காப்பி வந்து காத்திருக்கிறதே!" சிரித்தபடியே கூறிவிட்டு காப்பியை எடுத்தான் சபாபதி.

"மந்திரத்தில் மாங்காய் விழுந்தது அந்தக் காலம். இந்தக் காலத்தில் மாங்காய் வேண்டுமானால் சிரமப்பட்டு மரத்தில் ஏறி பறிக்கவேண்டும். மேலும், மந்திரம் சொல்லிக்கொண்டு மரத்தடியில் இருக்கிற நேரத்தில் ஒரு மரத்தையே உலுப்பிவிடலாம் அல்லவா?" என்று சொல்லி சிரித்தான் வேணு. சபாபதியும் கூடவே "ஆமாம்" போட்டு சிரித்தான்.

"வயது இருபத்தி ஐந்து தாண்டிப்போகுது. இன்னமும் குழந்தைமாதிரி, சிரிச்சு விளையாடிக்கிட்டு இருங்க. உம், பொறுப்பில்லாத வளர்ச்சி" வீட்டினுள் வந்துகொண்டி

ருந்த சிதம்பரநாதனின் இடிக் குரல் நண்பர்களின் சிரிப் பிற்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தது.

சட்டென்று நாற்காலியை விட்டு எழுந்து, அடக்க மாகத் தன் தந்தையைக் கவனித்தான் வேணு. சபாபதி யும் கூடவே எழுந்து நின்றான். ஏற்கனவே முறுக்கி விடப்பட்ட கம்பீரமான மீசையில் வழக்கம்போலவே அவர் வலது கை ஊராய்ந்துகொண்டிருப்பதைக்கண்டான்.

வீட்டினுள் வந்த சிதம்பரநாதன், சபாபதியைப் பார்த் ததும், இவர் யாரு?'' என்றார்.

''சபாபதி; என் நண்பன்'' சுருக்கமாகக் கூறினான் வேணு.

உன் நண்பனா? உன்னைப்போல்தான் ஊர் சுற்றுகிறா னாக்கும்?'' கிண்டலாகக் கேட்ட சிதம்பரநாதன், அருகிலி ருந்த நாற்காலியை இழுத்துப்போட்டு, உம் ஏன் நிக்கி றீங்க. உட்காருங்க'' என்று உபசரித்தபடியே கையிலி ருந்த தடியை ஒரு புறமாக வைத்துவிட்டு, குடையையும் அதன்மீதே சாத்திவிட்டு, ''சாரதா, சாரதா'' என்று குரல் கொடுத்தார்.

கையில் காப்பியுடன் வந்த சாரதா, அந்தக் காப்பியை மிகவும் பவ்வியமாகத் தந்தையிடம் கொடுத்துவிட்டு, அவர் கொடுத்த மேல் துண்டையும் வாங்கிக்கொண்டு, கருமமே கண்ணாயினவள்போல் நேராக உள்ளே போய் விட்டாள்.

''அவர்களுக்கும் காப்பி'', என்று சிதம்பரநாதன் ஆரம்பிக்குமுன், ''நாங்கள் இருவரும் சாப்பிட்டுவிட் டோம்.'' என்று நண்பர்கள் இருவரும் ஏக காலத்தில் உண்மையை கூறிவிட்டார்கள்.

ஆமோதிப்பதுபோல் தலையை அசைத்துக்கொண்டே காப்பியைக் குடித்துவிட்டுப் பேச்சை ஆரம்பித்தார், சிதம் பரநாதன்.

"சரி........இரண்டுபேருமா என்ன திட்டம் போட்டு புறப்பட்டீர்கள்? ஏதாவது குப்பை மேட்டைக் கிளறவா, சாக்கடையைக் கலக்கவா? அல்லது யாரையாவது எதிர்த்துப் பிரச்சாரம் செய்யவா? உம், சொல்லுங்க" என்று இழுத்தார் சிதம்பரநாதனு:

வேணு, சபாபதியைப் பார்த்தான். சபபதியின் பார்வையோ, வீட்டினுள்ளேயே தாவிப் பறந்துகொண்டிருந்தது. சில விநாடிகளில் உள்ளே இருந்து வந்த வேறொரு பார்வை அலைகளோடு மோதித்திரும்பியது.

வேணு, தன்னைப் பார்க்கிறான் என்பதை உணர்ந்த சபாபதி, எங்கேயோ பார்த்துவிட்டுத் திரும்புகிறவன் போல், வேணுவின் பக்கமாகத் தலையைத் திருப்பினான்.

உள்ளே நின்ற சாரதாவின் கண்களையும் அவளுடைய இமைகள் சட்'டென்று அதட்டி அணைத்துக்கொள்ளவே, குனிந்த தலையோடு உள்ளே மறைந்தாள்.

"பேசாமல், படிப்பு முடிந்ததும், ஏதாவது ஒரு வேலையைத்தேடி, அமர்ந்துகொண்டு குடும்பத்தை நல்முறையில் நடத்தாமல், ஊரைச் சுற்றிவந்து நாட்டை நல்லதாக்கப் போகிறீர்களா?" என்ற சிதம்பரநாதனுவின் ஏளனக்குரல் வேணு—சபாபதி கவனத்தை அவர் பக்கமாக இழுத்தது.

"நமது உரிமைகள் முழுவதையும் நாம் அடைந்துவிட்டால், அதன்பிறகு, குடும்பத்தைக் காப்பாற்ற வழி தேடலாமல்லவா? உரிமைகளை அடையப் போராடித்தானே ஆகவேண்டியதிருக்கிறது. நீங்க சொல்கிறமாதிரி காந்தி மகான் சொல்லியிருந்தால், நமக்கு இப்பொழுது சுதந்திர நாட்டில் இருக்கிற பேறு கிடைத்திருக்குமா?" என்று பதில் கூறினான் சபாபதி!

சிதம்பரநாதனுவும் சளைக்கவில்லை. "ஓகோ அதை வைத்துப் பாடுகிறீர்களா? காந்தியாரைப் பற்றிப் பேச உங்களுக்கு என்ன அருகதை இருக்கிறது? நீங்கள்தான் அவர் கட்டி வளர்த்த காங்கிரசையே எதிர்க்கிறீர்களே! போராட்டமாம் — போராட்டம். அந்த மகான்

கட்டத்தினர் போராட்டம். நாடு முழுவதுமே சிறைசெல்லக் காத்திருந்தது. சிறை சென்றது. செந்நீரைப் பாய்ச்சியது; தியாகத் தீயில் குதித்தது. அந்தப் போராட்டத்தில் பங்குகொண்ட சிதம்பரனார்கள் உண்டு. திருப்பூர் குமார்கள் உண்டு. வ. வே. சு. ஐயர்கள் உண்டு. பாமாலையால் பரங்கியரை பதற அடித்த பாரதியார்கள் உண்டு. இப்படி எத்தனையோ! நான் கூட சுதந்திரப் போராட்டத்தில் சிறை சென்றவன்தான்.'' பெற்ற சுதந்திரத்தைப் பேணி காக்கவேண்டுமானால், ஒற்றுமை வேண்டும்; தியாகம் செய்தவர்களுக்கு மதிப்புக் கொடுக்கவேண்டும். 'நம் நாடு' என்ற உணர்ச்சி — நாட்டுப்பற்று வேண்டும்; பரந்த நோக்கம் வேண்டும். தன் வீடு வாழவேண்டும், என்று எந்த அளவுக்கு ஆசை இருக்கிறதோ, அந்த அளவுக்கு பாரதம் வாழவேண்டும்! என்ற ஆசை—வெறி இருக்கவேண்டும்! இன்னும் சொல்லப்போனால், 'சுயநலம்' என்ற உணர்வு நாட்டிடம் இருக்கவேண்டும்! அதை விட்டு எல்லாம் தெரிந்தவர்கள்போல் நல்லது செய்பவர்களைக் குழப்பத்தில் ஆழ்த்தக்கூடாது! அதனால் நாட்டிற்குத்தான் கெடுதல்! ஆளுவோர் தவறு செய்தால் நேர்மையாக-உறுதியாக எடுத்துக் கூறலாம்! அதைச் செய்யாமல் குழப்பம் விளைவிப்பது அறிவுடைமை ஆகாது! தியாகம் செய்தவர்கள்தான் தியாகத்தின் பெருமை அறிவார்கள்! நீங்களெல்லாம் நேற்று வந்தவர்கள்! உங்களுக்கு தியாகிகளைப்பற்றி தெரிய முடியாது! காந்தியைக் கண்டிருக்கமாட்டீர்கள். வ. உ. சி. யின் வரலாறு தெரியாது! குமரன் சிந்திய குருதியை, திலகர் பெருமானின் சேவையை, பாரதியின் நாட்டுப்பற்றை உங்களால் அறிய முடியாது!''
அடித்துப் பேசினார் சிதம்பரநாதன்.

''அவர்களெல்லாம் தியாகிகள் இல்லை என்று நாங்கள் சொல்லவில்லையே! நீங்கள் மறைந்த தியாகிகளில் சிலரைக் கூறினீர்கள். நாங்கள் இருக்கும் தியாகிகளையும் போற்றிப் புகழ்கிறோம். நீங்கள் கூறிய தியாகிகளின் வரிசையில் சேர்க்கப்படவேண்டியவர் இன்றும் எங்கள் தலைவரைப்

போல் ஒருசிலர் மக்களுக்காகவே வாழ்ந்துவருகிறார்கள்" என்றான் சபாபதி

"உங்கள் தலைவரா? அது யாரப்பா? எனக்குத் தெரியாமல்........"

. உங்களுக்கு நன்றாகத் தெரியும், நீங்கள் ஒரு முறை நாட்டிற்காகச் சிறை சென்று, பெருமை கொள்கிறீர்கள். பெருமை கொள்வதில் தவறில்லை ஆனால், எங்கள் தலைவர் பன்முறைப் பரங்கி ஆட்சியை எதிர்த்துப் போராடி சிறை சென்றவர். மேலும் உங்களைப்போன்ற எத்தனையோ பேர்கள், சுதந்திரத்தோடு தங்கள் கடமையே தீர்ந்து விட்டதாக எண்ணி ஒதுங்கிவிட்டார்கள். ஆனால் எங்கள் தலைவர், பரங்கியனை விரட்டியதோடு ஓய்ந்துவிடவில்லை. அதன் பிறகு தமிழகத்தில் முளை விட ஆரம்பித்த பல தீய சக்திகளை ஒழித்துக்கட்டினார். தமிழ்க் கருவூலங்களான இலக்கியங்களைக் கண்ணாகக் காத்து, கடமை உணர்த்தினார். தமிழகத்தின் எல்லைகளைக் காத்தார்; தமிழ்நாடு என்ற தண்டமிழ் பெயர் பொறித்து தமிழகத்தின் வரலாற்றைப் புனிதப்படுத்தினார். பிரிவினை சக்திகளை ஒழிக்க முதல் மனிதராக முன்னணியில் நிற்கிறார்! தமிழகம் வாழவேண்டும் என்று எண்ணுவதைப்போன்றே பாரதம் வாழவேண்டும் என்றும் எண்ணுகிறார். ஏன்! உலகமே அமைதியாக வாழவேண்டும் என்ற நோக்கத்துடனேயே செயல்படுகிறார்!

நம் நாட்டிலிருக்கும் வெளிநாட்டுக் கைக்கூலி கட்சி தான். நாட்டைக் குழப்புகிறதே தவிர, நீங்கள் நினைப்பது போல் குழப்பம் விளைவிப்பது நாங்களல்ல! கைக்கூலி கட்சியை ஒழித்துக்கட்ட அரசாங்கம் எங்களுக்கு உதவினால்போதும்! அதைத்தான் நாங்கள் எதிர்பார்க்கிறோம்!

சுதந்திரத்தின் விலை தெரிந்திருப்பதினால்தான் சுபிட்சத்திற்கு உழைக்கிறோம்! எங்கள் தலைவரும், இன்னமும் தமிழகத்திற்கு மட்டுமின்றி எங்கெல்லாம் தமிழினம் வாழ்கிறதோ, அவர்களுக்கெல்லாம் தன் அன்புக் கரம்

நீட்டி ஆதரவு கொடுக்கிறார். எல்லாவற்றிற்கும் மேலாக இந்திய தேசிய ஒற்றுமைக்குப் பாடுபடுகிறார்! அவர் ஒழுக்கத்தின் உறைவிடம், உண்மையின் உரு; அரசியல் அறிஞர்; இலக்கிய ஞானி........" சபாபதி பேசிக்கொண்டே போவதைக்கண்ட சிதம்பரநாதன் "போதும், போதுமப்பா; அவர் யாரென்று எனக்குத் தெரிந்துவிட்டது. நீ சொல்வது அத்தனையும் உண்மைதான். என்றாலும், அவர் காங்கிரஸிலிருந்து விலகிய காந்தியவாதி. காங்கிரஸ்காரர்கள் காந்தியாரின் திட்டங்களையே செயல்படுத்துகிறார்கள். ஆனால்........" சிதம்பரநாதன் பேசி முடிக்குமுன் சபாபதி இடைமறித்து, "காந்தி சொன்னபடியா செயல்புரிகிறார்கள்? காங்கிரசைக் கட்டி வளர்த்த காந்தியாரே அதைக் கலைத்துவிடச்சொன்னாரே................ "காங்கிரஸ் என்னும் வாழை சுதந்திரம் என்ற குலையைக் கொடுத்துவிட்டது. ஆகவே அந்த வாழையை வெட்டி எறியுங்கள்" என்று அழகாக எழுதிவைத்துவிட்டுப் போனாரே சொன்னபடி செய்தார்களா? குலை தள்ளிய வாழையையே வைத்துக் கொண்டு, மேல் மேலும் தண்ணீர் விட்டு அந்த வாழையை அழுகவைக்கிறார்கள். அதனால் நாட்டில் நடக்கும் பலவித ஊழல்களை ஒழிக்க முடியாமல் இருக்கிறது. உண்மையிலேயே காந்தி சொன்னபடி, நாங்கள்தான் நடக்கிறோம். காந்தியாரின் சொற்களையே எங்கள் கொள்கையாக கொண்டிருக்கிறோம். இன்றைய நிலை உணர்ந்து, எங்கள் கட்சியின் கொள்கைகளை எல்லாம் நிறுத்தி வைத்துவிட்டு, அன்னியனை விரட்டி அடித்துப் பாரதத்தின் பண்பை நிலை நாட்ட முன்னணியில் நிற்கிறோம்! ஆசியா கண்டத்தில் இனிமேல் 'அரிவாளும் – சுத்தியும்' எந்த ஒரு நாட்டையும் அடிமைப்படுத்த எண்ணக்கூடாது. இதுவே எங்கள் கொள்கை!' ஆவேசமாகவும்–ஆணித்தரமாகவும் மேடையில் பேசுவதுபோல் பேசிய பேச்சைக்கேட்டு உண்மையிலேயே சிதம்பரநாதன் சிறிது அசந்துவிட்டார்.

என்றாலும், சமாளித்துக்கொண்டு, ஏதையோ சொல்ல வாய் திறந்தார். அதற்குள், "அப்பா சாப்பாடு தயார்;

சாப்பிட்ட பிறகு பேசலாமே" என்ற சாரதாவின் திடீர் குரல் கேட்டு, மூவரும் அப் பக்கம் திரும்பினார்கள்.

"அதுவும் சரிதான். பேச்சில் பசியை மறந்துவிட்டோம். முதலில் சாப்பிடுவோம்." என்று சொல்லி சிரித்துக்கொண்டே எழுந்தார் சிதம்பரநாதன்.

மூவரும் எழுந்து சாப்பாட்டு அறையை நோக்கி நடந்தார்கள்.

---

## 14. இல்லறமா பிரம்மச்சரியமா?

"சொல் அம்பு பட்ட புண் ஆறாது, என்று சொல்கள். "யாகாவாராயினும், நாகாக்க" இது தெய்வப் புலவரின் திருவாக்கு. "ஒரு சொல் சொல்லுமுன் பன்முறை யோசி" யாரோ சொன்ன பொன்மொழி. "சோறு விழுந்தால் பொறுக்கலாம், சொல் விழுந்தால் பொறுக்க முடியாது" இது நம் நாட்டின் பழமொழி.

இவைகள் சொல்லின் விலையை விமர்சிக்கிற அனுபவப் பெரியோர்களின் அருள்வாக்குகள்.

உயிர்த் தோழர்களாகப் பழகுகிறவர்களும், எதிர்பாராதவிதமாக சிந்திக்காமல் ஏதாவது பேச்சினூடே சொல்லிவிட்டு, பிறகு வருந்துவதையும், சகோதரர்களையும், தம்பதிகளையுங்கூட இந்த சொல் அம்பு வருடக் கணக்கில் பிரித்து வைத்துவிடுவதையும் காணலாம்.

அன்று, "உன்னை எனக்குப் பிடிக்கவில்லை என்று கூறிவிடு" என்று மணி சொன்னதும், "நீங்கள் ஏன் சாரதாவை மணந்துகொள்ளவில்லை........திருமணத்திற்குப் பெண்களின் விருப்பத்தை யார் கேட்கிறார்கள்?" என்று தன்னையே மறந்து உணர்ச்சிகொட்டியதும், தங்கள் வாழ்வில் இந்த அன்புக்குப் பிளவையும், புயலையும் கிளப்பிவிடும் என்று இருவருமே எதிர்பார்க்கவில்லை.

மணியின் மாங்கல்யம் சகுந்தலாவின் கழுத்தில் ஏறி மாதங்கள் ஐந்திற்கு மேல் ஆகிவிட்டன. இருவருமே ஒவ்வொன்றை மனதில் வைத்துக்கொண்டு போலி கவுரவம் தடை செய்ய, கணவன்-மனைவி உறவிலிருந்து விலகியே வாழ்ந்தார்கள்.

ஆனால் மணி, இதைப்பற்றி சிறிதும் கவலைப்படுவதாகவே சகுந்தலாவுக்குத் தெரியவில்லை. மாறாக, சகுந்தலா புழுங்கி நோவதை மணி புரிந்துகொண்டான். அவள் வேதனை அவனுக்கு மகிழ்ச்சியையே அளித்தது.

முதல் இரவில் ஏற்பட்ட முறிவுக்கு முடிவு காணப் படாமலே காலம் கடந்தது.

மணி, காலையில் காரியாலயத்திற்குப் போவதும், மாலையில் வந்து, சகுந்தலா படைப்பதை ஏனோ, தானோ வென்று தரையைப் பார்த்தபடியே சாப்பிடுவதும்; முக்கியத் தேவைகளுக்குமட்டும் வெட்டி முறித்தாற்போல் சகுந்தலாவிடம் இரண்டொரு வார்த்தைகள் உரையாடுவதும், அதிகப்படியான நேரத்தை தனியாகவே வெளியில் கழிப்பதுமாகத் தன்னை ஒரு இயந்திரமாகவே செலுத்திக் கொண்டிருந்தான்.

அவன வைராக்கியததையும், தனனைப புறக்கணிப்பதையும் உணர்ந்த சகுந்தலா, மணியை நெருங்கவே அஞ்சி ஒதுங்கி இருந்தாள்.

சகுந்தலாவின் ஒதுக்கத்தை வேறுபாடாக - விபரீதமாக எண்ணிக்கொண்டான் மணி. அஞ்சி ஒதுங்கும் சகுந்தலாவை, ஆணவத்தில் ஒதுங்குவதாகக் கற்பனை செய்து கொண்டான். அந்தக் கற்பனையை அப்படியே-படிப்படியாக வளர்த்துக்கொண்டான். 'நான் ஒரு படி விலகினால், அவள் ஒன்பது படி விலகுகிறாளே; உண்மையாகவே என்மீது அவளுக்கு அன்பு இல்லை; கேட்ட கேள்விகளுக்கு மட்டும் தானே பதில் சொல்லுகிறாள். அதுவும் வெறுப்பாகத்தானே சொல்கிறாள். பெரிய நெஞ்சழுத்தக்காரிதான்' என்றெல்லாம் எண்ணி — எண்ணி தன் கற்பனைக் கோட்டையை

அவல மாளிகையை மிகப் பெரிதாகக் கட்டிக்கொண்டிருந்தான் மணி.

இப்படியே ஒருவருக்கொருவர் மாறுன எண்ணத்தை மனதில் வைத்துக்கொண்டு குமுறும் எரிமலையை உள்ளடக்கி, வெந்தணலால் கொதிக்கும் நீரை உலை மூடியால் மூடி வைப்பதுபோல், தங்கள் உள்ளக் கொதிப்பையும் போலி கவுரவத்தால் மூடி—மூடி வைத்துக்கொண்டார்கள்.

என்றாலும், எத்தனை நாளைக்கு? கணவன் மனைவி உறவில் இந்த வாழ்க்கை எத்தனை நாட்களுக்கு நிலை நிற்க முடியும்? என்றாவது ஒரு நாள் பொட்டித் தெறித்துப் பெரும் பிளவை உண்டுபண்ணவேண்டும்; இல்லையேல், நாளடைவில், ஆறி அடங்கி சிறு பிளவும் நெருங்கி ஒன்றுபட வேண்டும்.

சகுந்தலா வாழ்விலும் இந்த இரண்டில் ஒன்று நடந்தது.

குமுறும் எரிமலை ஒரு நாள் வெடிப்பதுபோல், சகுந்தலாவின் மனமும் வெடிக்கத் துணிந்தது.

காரணம்? காலப்போக்கில் சகுந்தலாவுக்கு, வாழ்க்கையில் வெறுப்புத்தட்டியது. பிறந்தது முதல் இன்றுவரை துன்பத்தைத்தவிர வேறொன்றையுமே கண்டறியாத சகுந்தலாவுக்கு இந்த வாழ்க்கை வெறுப்பையூட்டியதில் என்ன ஆச்சரியம்?

தான் கூறியது தவறு, என்று உணர்ந்துவிட்டாள். உணர்ந்தபின் மணியின் அன்பிற்காக, ஏங்கி இளைத்துவிட்டாள். என்றாலும் அவள் எதிர்பார்த்த அந்த அன்பு கணவனின் அன்பு கிடைக்கவில்லை. தாயன்பு இல்லை; பிறகு கணவனின் அன்பும் இல்லை; வீணாக ஏன் வாழ வேண்டும்?........இதுவும் ஒரு வாழ்க்கையா?' என்றெல்லாம் பலவிதமாக எண்ணினாள். அவள் பருவம் எதை-எதையோ எண்ணவைத்து ஒரு முடிவுக்குக் கொண்டு வந்து நிறுத்தியது.

தோடு; 'எதற்கும் இயலாதவர்கள்' என்றும் எண்ணி யிருக்கிறான்.

'கற்பு' எனும் பொற் பேழைக்குள் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்ற அரிய கவசத்தால் கட்டுண்டிருக்கும் மாதரசிகளை அவன் கோழைகள் என்றும், அறிவிலிகள் என்றுமே எண்ணிக்கொண்டான்.

இனி, கதைக்கு வருவோம்.

என்றும் போலவே அன்றும் மணியின் வரவை எதிர் பார்த்திருந்தாள் சகுந்தலா, ஆனால் இன்று கருத்தில் வேறுபாடு; அச்சம், அவளை விட்டு அகன்றுகொண்டிருந்தது. 'இன்று இரண்டிலொன்று—நேரில் கேட்டுவிடவேண்டும்' என்று தீர்மானித்துக்கொண்டாள்.

மணி, காரியாலயத்திலிருந்து வந்ததும், வழக்கம்போல் உடை மாற்றுவதற்காகத் தன் சட்டையைக் கழற்றினான்.

ஆனால், சகுந்தலா என்றும்போல் அன்று சும்மா இருக்கவில்லை. அருகில் சென்று சட்டையை வாங்கி, சுவர்க் கம்பியில் தொங்கவிட்டாள்.

புது வழக்கத்தைக் கண்ட மணி, கோபத்தோடு எரித்துவிடுவதுபோல் சகுந்தலாவை நோக்கினான். சாடையாகக் கவனித்த சகுந்தலா, ஒன்றும் அறியாதவள்போல், உள்ளே போய்விட்டாள்.

முகம் கழுவிவிட்டு, வழக்கம்போல், காப்பி சாப்பிடும் இடத்தில் அமர்ந்தான் மணி. முகத்தில் புன்முறுவலை வரவழைத்து, கையிலிருந்த காப்பியை அவன் முன் வைத்தாள் சகுந்தலா.

குனிந்த தலை நிமிராமலே, என்றும்போல், 'மடக்—மடக்' கென்று குடித்துவிட்டு, வெளியே கிளம்பத் தயாரானான் மணி; வாயிலைக் கடந்து கால் எடுத்து வைத்தான்.

''கொஞ்சம் நில்லுங்கள்!'' மாதக்கணக்கில் மூடிக் கிடந்த சகுந்தலாவின் மனம் பட்'டென்று திறந்ததை அவள் வார்த்தைகள் 'பளீர்' என வெளிக்காட்டின.

வாழ்வார்?" சகுந்தலாவின் பேச்சில் ஆவேசமும், அழுகையுமே கூடுதலாகப் பிரதிபலித்தன! பேசி முடித்து, உமிழ் நீரைக் கூட்டி விழுங்கி ஏக்கத்தோடு நின்றாள்.

மணிக்கு, ஆச்சரியம் அடங்க பல நிமிடங்கள் ஆயின. 'ஒருக்கால் இவளுக்கு பயித்தியம் பிடித்துவிட்டதோ' என்றுகூட எண்ணினான்.

மெதுவாக அவள் அருகில் வந்தான்.

"சகுந்தலா, ஏன் இப்படி கத்துகிறாய்? ஒரு குடும்பப் பெண் பேசும் பேச்சா இது?............ஆம்; நீ பேசவில்லை உன் ஆணவம் பேசுகிறது. பயித்தியக்காரி; உனக்கு எத்தனை அழகு இருக்கிறதோ, அதைவிட பத்து மடங்கு அதிகமாக இருக்கிறது ஆணவம்! உனக்கு மட்டுமல்ல, உன்னைப்போல் அழகாக இருக்கும் பல பெண்கள் ஆணவம் பிடித்தவர்களாகவே இருக்கிறார்கள். ஆணவத்தில் கணவனையே மதிக்காமல் பேசுவது, பிறகு கண்ணீரால் சமாளிக்க முனைவது. அழகான பெண்களுக்கு ஆணவமும் கூடவே பிறந்துவிடுகிறது. அம்மாதிரி ஆணவம் கலந்த அழகி எனக்குத் தேவை இல்லை. உள்ளத்தில் அழகுள்ள பெண்ணே எனக்குத் தேவை. உன்னிடம் அது இல்லை; வெளி அழகையும் ரசிப்பேன். ஆனால் அதில் ஏமாந்து, ஒரு சில ஆடவர்களைப்போல் அடிமையாகமாட்டேன். என் வாழ்க்கை அணைகடந்த வெள்ளமாகிவிட்டது. உடைந்த கண்ணாடி ஆகிவிட்டது. இனி அதை விரும்பி பயன் இல்லை; உனக்கு இங்கு இருக்க விருப்பமில்லையேல், உன் வீட்டிற்கே போய்விடு. இன்றைய நிகழ்ச்சி, நான் எதிர் பார்த்ததே: இத்தனை நாளும் அகங்காரத்தோடு அமைதியாக விலகி வாழ்ந்த நீ, இப்பொழுது ஆவேசப்படுகிறாய். வீணாகக் கண்ணீர் வடித்துப் பயனில்லை" வார்த்தைகளை ஈட்டியாகப் பாய்ச்சிவிட்டு வெளியேறத் திரும்பினான்.

"போய்விடுகிறேன். ஆனால் நான் ஏன் போகவேண்டும்? நான் செய்த தவறு என்ன? இந்த இரண்டிற்கும் பதில் சொல்லுங்கள்; தயவு செய்து சொல்லுங்கள்."

சகுந்தலாவின் திடீர்க் குரலைக் கேட்டுத் திகைத்து விட்டான் மணி....எத்தனைக் கண்டிப்பான குரல்; சகுந்தலாவா இப்படி உத்தரவிடுகிறாள்?...........தன் காதுகளையே நம்ப மறுத்தான் மணி! அவன் கால்கள் நடக்க மறுத்து, திரும்பியது. அனுபசமாகத் தன் தலையை மட்டும் திருப்பி சுகுந்தலாவை நோக்கினான்.

சகுந்தலா, திறந்திருந்த சன்னலின் அருகில் சுவரோடு ஒட்டி நின்றதால் முகம் சரியாகத் தெரியவில்லை. பாதி அளவு தெரிந்த முகத்திலும், அவள் மன உறுதியும், மாற்று உணர்ச்சிகளின் சாயலும் காண முடிந்தது.

சிறிது நேரம் அவர்களிடையே மௌனம் நிலவியது.

மணியே பேசத் தொடங்கினான். "ஏன் ஊமையாக நிற்கிறாய்? ஏன் என்னைத் தடுத்தாய்? உனக்கு என்ன வேண்டும்?' அதட்டலும், ஆணவமும் கலந்திருந்தன அவன் குரலில்.

"என்ன வேண்டுமா? ஒரு கணவன் கேட்கும் கேள்வியா இது? என்று கேட்க நினைத்த சகுந்தலா, அதை அப்படியே அடக்கி விழுங்கிவிட்டு, நிதானமாக, "ஒன்றும் வேண்டாம்........நீங்கள்........" வார்த்தைகள் வெளிவரத் தயங்கின.

"நீங்களாவது-நாங்களாவது உனக்கு வேண்டியதைக் கேள்" மணியின் வார்த்தைகளில் கோபம் கொழுந்துவிட்டெரிந்தது.

"வேண்டியதா? எனக்கு வேண்டியது........அத்தான், அநாதையான என்னை இப்படி ஏன் அழவைத்து வதைக்கிறீர்கள்? என்னவேண்டுமென்று கேட்கிறீர்களே; நாம் வாழவேண்டும் அத்தான், வாழவேண்டும்........வீணாக என் மனதைப் புண்படுத்தாதீர்கள். நான் உங்களுக்கு என்ன குற்றம் செய்தேன்?........என்னை உங்களுக்குப் பிடிக்கவில்லையென்றால் தங்களின் திருக்கரங்களாலேயே கொன்று விடுங்கள். இப்படி அணு-அணுவாக என்னை சித்திரவதை செய்யாதீர்கள். யோசித்துப்பாருங்கள்; நாம் வாழ்வதும் ஒரு

"சொல்லவேண்டுமா? 'என்ன தவறு செய்தேன்?' என்று என்னையா கேட்கிறாய்? தவறு செய்கிறவர்களில் பலர் தெரிந்தே செய்கிறார்கள். அந்தப் பலரில் நீயும் ஒருத்தி; இருந்தும் என்னை ஏமாற்ற எண்ணுகிறாய்; என்றாலும் உன் கேள்விக்குப் பதில் கூறுகிறேன். கேள்: அன்று முதல் இரவில் கேட்டாயே ஒரு கேள்வி, அதாவது—'என்னை ஏன் மணந்தீர்கள்?' என்று........மாங்கல்யம் கட்டிய மணாளனிடம் ஒரு மங்கை கேட்கும் முதல் கேள்வி. நல்ல ஆண்மகனுக்கு இது ஒன்று போதாதா? நீ யாரையோ எண்ணிக்கொண்டுதான் அப்படிக் கேட்டிருக்கவேண்டும். .......போகட்டும். அடுத்து, ஒரு அம்பு தொடுத்தாயே; பெண்களின் விருப்பத்தை யார் கேட்கிறார்கள்?' என்று இதைவிட ஒருவனுக்கு என்னதான் கேட்கவேண்டும்? ஆவலோடு, அன்போடு உன் அருகில் வந்த என்னை, அலட்சியமாகத் தூக்கி எறிந்து பேசியது உன் ஆணவம். அழகால் வந்த ஆணவம். அந்த ஆணவமும், நெஞ்சழுத்தமும் இன்னும் உனக்குக் குறையவில்லை; மாறாக சற்றுக் கூடி இருக்கிறது. இனி அது குறையாது. உடைந்தது உடைந்ததேதான். ஒட்டாது. இதற்குமேல் உன்னிடம் பேச எனக்கு நேரமில்லை. போகிறேன் தடுக்காதே" சகுந்தலாவின் பதிலை எதிர்பாராமலே சொல்லம்புகள் தொடுத்து விட்டு வெளியேறினான் மணி.

யாரை நோவது?........எதனை நோவது?........வேதனை எனும் நெருப்பால் அவள் இதயம் துடித்தது. குற்றவாளி யார்? நானா? அவரா?........நான்தான் சிந்திக்காமல் சிரித்துப் பேசவேண்டிய வேளையில், சீறி விழுந்துவிட்டேனா? பைத்தியக்காரிபோல் உளறிக்கொட்டிவிட்டேனா? என் பேச்சு தவறானதுதானா? அப்படியென்றால், நானே என் வாழ்வைக் கெடுத்துக்கொண்டேனா? அல்லது என் உள்ளன்பை அறியும் சக்தி அவருக்கு இல்லையா? ........இனி என்ன செய்வது? "ஒட்டாது" என்று கூறினாரே, உண்மையாகிவிடுமா?........' என்றெல்லாம் எண்ணி எண்ணி, மூளையையும் குழப்பிக்கொண்டாள் சகுந்தலா; பொங்கி

வந்த அழுகையை அடக்க முடியாமல், தன் கைகளால் முகத்தை மறைத்தபடியே, திறந்திருந்த சன்னல் கதவின் ஓரமாக சாய்ந்தாள்! அவள் கண்களிலிருந்து வெளிப் பட்ட கண்ணீர், கையின் வழி வந்து, சிகப்புவர்ணம் பூசிய சன்னல் பலகையின் ஓரமாக வடிந்து, அடைய விருக்கும் ஆதவன் ஒளியில் இரத்தம் போல் பளபளத்து ஓடியது.

•

கடந்த ஐந்து மாதங்களாக, இளம் தம்பதிகளிடம் யாதொரு விதமான 'சலசலப்'பையுமே காணாத கல்யாணி அம்மாள், அன்று நடந்த போராட்டத்தையும் இருவருடைய தர்க்க வாதங்களையும் மறைவிலிருந்து கேட்டு அதிர்ச்சி அடைந்தாள்! இளம் உள்ளங்களில் மறைந்து கிடந்த இரகசியப் புகைச்சல், அன்று ஒளிக்கூடாக பிரகாசித்ததைக் கண்ட கல்யாணி அம்மாள் மனம் வருந்தினாள்.

'இப்படியான பெரிய வேதனையைக்கூட சொல்லாமல் தானே இருந்தாள். பருவத்தில் பூத்துக் குலுங்கும் புது மலராக ஒளி வீசியும், உள்ளத்தில் எத்தனை துன்பத்தை ஏற்றுக்கொண்டாள். பாவம். ஒரு பெண்ணிற்கு இதை விட தண்டனை வேறு என்ன இருக்கிறது............? கல்யாணி அம்மாளின் மனம் இளகியது, சகுந்தலாவிடம் ஒரு தனி அன்பையும், அபிமானத்தையும் ஊட்டியது. பெண்ணின் இயல்புகளைப் பெண்தானே உணரமுடியும்?

மெதுவாக மாடிப்படிகளில் ஏறி, சகுந்தலாவின் அறைக்குள் வந்தாள். ''இந்தாம்'மா சகுந்தலா வீணாக அழுது என்ன பயன்? எல்லாவற்றையும் நான் நன்றாகக் கேட்டுக்கொண்டுதான் இருந்தேன். என்னதான் இருந்தாலும் இத்தனை நாளும் என்னிடம்கூட சொல்லாமல் மறைத்துத்தானே வைத்திருந்தாய். நான் உன்னிடம் வைத்திருக்கும் அன்பை உணரவில்லையே'' என்று சொல்லிய படியே அவள் கண்ணீரைத் துடைத்தாள், கல்யாணி அம்மாள்.

"அம்மா; யாரிடம் சொல்லி என்ன பயன். என் தாயைப்போல் இருக்கும் உங்களிடம் என் வேதனையைச் சொல்லி, உங்கள் மனதையும் புண்படுத்தவேண்டுமா? என் தலைவிதி, நான் அநுபவிக்கிறேன். பிறந்த உடன் பெற்றோரை இழந்தேன். துன்பத்திற்கிடையே சொல்லமுடியாத வேதனைகளை அநுபவித்து வளர்ந்தேன். உயிர்த் தோழியான ஒருத்திக்கு துரோகம் செய்து இவரைக் கணவனாக அடைந்தேன். நான் வேண்டுமென்று அவருக்குத் துரோகம் செய்யவில்லை. என்றாலும் துரோகம், துரோகம் தானே. அதன் பலனை இப்பொழுது அநுபவிக்கிறேன் அவ்வளவுதான். இன்னும் எனக்கு நற்காலம் பிறக்கவில்லை. பிறக்கவும் முடியாது துன்பப்பேயின் பிடியிலிருந்து, மீள வேண்டுமானால் நான் இறக்கவேண்டும்" வேதனையின் அடித்தளத்திலிருந்து வெளிவந்த சகுந்தலாவின் சொற்கள் கல்யாணி அம்மாளை ஒரு கலக்கு கலக்கியது.

சகுந்தலாவிற்கு உண்மையிலேயே வாழ்க்கை வெறுத்துவிட்டது. உள்ளத்தில் துயரம்; குரலில் வறட்சி கண்களில் ஏக்கம்; எண்ணத்தில் நிராசையின் நிழல், மூளையில் 'இறக்கவேண்டும் இறக்கவேண்டும்' என்ற முடிவான துணிவு.

பிறந்தது முதல் துன்ப இருளிலேயே துடித்துக் கொண்டிருக்கும் ஒரு மனிதப்பிறவி இந்த துணிவுக்கு வந்ததில் என்ன ஆச்சரியம்?

அடுக்கடுக்காக அல்லல்களை அநுபவிக்கும் ஆத்மாக்களுக்கு இந்த துணிவே ஏற்படுகிறது; துயரத்திற்கு முடிவு காண உயிரை விடத் துணிகிறார்கள். அதில் பெரும்பாலும் உணர்ச்சி வசப்பட்டு திடீரென்று செயலில் இறங்குபவர்களில் பெண்களே அதிகம்.

பெண்களிடம், அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்ற நற்பண்புகள் எப்படி இயற்கையாக அமைந்திருக்கின்றனவோ, அதைப்போன்றே துணிவும் அமைந்திருக்கிறது. அதிலும் கிராமத்துப் பெண்களுக்கு இயற்கையா

கவே அதிகத் துணிவு உண்டு. அதிகத் துணிவும் அதிகக் கோழைத்தனமும்தான் தற்கொலைக்கு ஆபத்தமாக்குகிறது.

பெரும்பான்மையானவர்கள் எத்தனைத் துன்பம் அனுபவித்தாலும், உயிரைவிடத் துணிவதில்லை. காரணம்? 'தமக்கும் நற்காலம் வரும்: என்றாவது இன்பமாக இருக்கலாம்' என்ற நம்பிக்கையும், ஆசையுமே காரணம்.

அந்த ஆசை விட்டு, துணிவு பிறந்து இந்த உலக இன்பங்களை வெறுத்து உதறிவிட்டுத்தான், தற்கொலைக்குத் தயாராக முடியும்.

சகுந்தலா, தற்கொலைக்குத் துணிந்ததற்கு காரணம் துன்பச் சுமை மட்டுமல்ல; 'யாரையோ மனதில் வைத்துக்கொண்டு அன்று என்னை மதிக்காமல் பேசினாயே' என்று கூறிய மணியின் வார்த்தைகளும் அவள் தன் வாழ்வை வெறுக்கச்செய்தன; "கணவரின் அவமதிப்பிற்கு ஆளான பின்பும் ஏன் உயிரோடு இருக்கவேண்டும்? என்னிடம் அன்பு காட்ட யாருமே இல்லாதபோது நான் ஏன் வாழவேண்டும்?" என்பனபோன்ற கேள்விக் கணைகள் அவள் இதயத்தை துளைத்தன.

வாழ்வை வெறுத்த சகுந்தலாவின் மனக்கண்முன், சாவின் தலைவாயிற்கள் தோன்றின. ரயில் தண்டவாளம், தூக்குக்கயிறு, தன் கிராமத்துக் கிணறுகள் - எல்லாமே ஒழுங்கு வரிசையில் தோன்றி, அவளை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருப்பதாகப்பட்டன.

சகுந்தலாவின் மனதை மாற்ற முயற்சித்து கல்யாணி அம்மாள் பேசினாள்:

"சகுந்தலா, வீணாகக் கவலைப்பட்டு உடம்பைக் கெடுத்துக்கொள்ளாதே; இறந்தால்தான் துன்பம் தீரும் என்று எண்ணுவது மடமை. இனிமேல் உன் வாயிலிருந்து, 'இறந்துவிடுவேன்' என்ற சொல் வரவே கூடாது. உலகில் துன்பப்படுகிறவர்கள் எல்லோருமே இறக்கவேண்டியவர்களா? இல்லை சகுந்தலா, இல்லை! துன்பத்தின் எல்லையில்தான் இன்பம் பிறக்கும். உனக்கும் நல்ல காலம் பிறக்

கும். என் வீட்டுக்காரர் வந்ததும் நான் அவரிடம் மணியை சமாதானப்படுத்தச் சொல்கிறேன். பல குடும்பங்களில் இதைவிட பெரிய சிக்கல்கள்கூட இலகுவில் சரியாகி இருக்கின்றன. நீ நிம்மதியாக இரு. நான் வருகிறேன்" சகுந்தலாவை இயன்ற மட்டும் சமாதானப்படுத்தி விட்டு மாடிப்படிகளில் இறங்கி நடந்தாள் கல்யாணி அம்மாள்.

# 15. காதல்-விடிவெள்ளி

நடுப்பகல் வேளை; காய்கதிர்ச் செல்வன்—தன் கிரணங்களை எந்தளவுக் கடுமையாகச் செலுத்தமுடியுமோ அந்தளவுக் கடுமையாகச் செலுத்திக்கொண்டிருந்தான். சிறுபுல்லையும் இளம்பயிரையும் அந்நிலையே கருகச் செய் பங்களா வராண்டாக்களில் தங்கி படுத்திருந்தால், அன்றைய வெரிக்கும். அதைச் சட்டைசெய்யாமல் அமைதியாகவே இலங்கியது.

'ஹை—ஹை, இந்தாலே, காளேய்' என்பன போன்ற மாடு மேய்க்கும் சிறுவர்களின் அதட்டல் ஒலிகளும், இடையிடையே அங்குமிங்குமாகப் பறந்துபோகும் ஒருசில காகங்களின் கத்தல்களும் அக் கிராமத்தின் அமைதியைக் கலைக்கவில்லை.

வடக்குத்தெருவின் கோடியில் இருபுறமிருக்கும் ஒன்றிரண்டு நாளங்காடிகளின் முன்புற கூரை நிழலுக்கடுத்திருந்த குப்பை மேட்டில் சில கோழிகள் உருண்டு மண்ணைக் கிளறி தன்மீது இறைத்துக்கொண்டிருந்தன.

கையில் குடை இல்லாமல் 'ச்சூ-ச்சூ' என்ற தாழ்ந்த ஒலியுடன் தன் நண்பன் வேணுவைக் காண விரைந்து வந்துகொண்டிருந்தான் சபாபதி.

வேணுவின் வீட்டை நெருங்கிவிட்டான். வாசல் கதவு திறந்தே இருந்தது. உள்ளே கால் எடுத்துவைத்த சபாபதி,

சட்'டென்று பின்னுக்கிழுத்து, அப்படியே நின்றுவிட்டான். இல்லை; அவனாக நிற்கவில்லை; அவனை நிறுத்தி விட்டது, உள்ளே இருந்து வந்த கானம்.

குரல் இனிமையைக் குயிலின் குரலோடு ஒப்பிடுவார்கள் பலர். ஆனால் குயிலின் குரலை சபாபதி கேட்டதில்லை. இப்பொழுது அவன் கேட்கும் குரலை வைத்து, 'குயிலின் குரல் இப்படித்தான் இருக்குமோ' என்று எண்ணலானான். அத்தனை சக்தி வாய்ந்த அந்த இசை, காற்றோடு கலந்து வந்து, சபாபதியின் காதுகளின் வழிச்சென்று, அவன் இதயத்தில் மோதி, உடலெங்கிலும் இன்ப உணர்ச்சியைப் பரப்பியது.

இசைக்கத் தெரியாதார் பலர் இருக்கலாம். ஆனால் இசைக்கு இசையாதார் இலர்.

தீங்குரலில் கலந்துவரும் பேறுபெற்றப் பாடலைக் கவனித்தான் சபாபதி.

"கல்தோன்றி, மண்தோன்றா காலத்தே வாளொடு முன் தோன்றிய........எங்கள் வான் புகழ் நாடே............' என்ற அழகுத் தமிழ்ச் சொற்கள் ஏதோ ஒரு இராகத்தை துணை கொண்டு பாடலாக உருவாகி, சபாபதியைப் பாகாய் உருக்கியது.

சபாபதியின் ரசனைக்கு மற்றொரு காரணம்; அப் பாடல் அவனே எழுதியது. அதிலும் சாரதா பாடுகிறாள். பின் கேட்கவேண்டுமா? காதலி கை பட்டால் வேம்பும், கரும்பாகிவிடுமாமே; அப்படியிருக்க கவிதை ஏன் ருசிக்காது?.

காதலன் எழுதிய கவிதையை, காதலி பாடும்பொழுது மறைவிலிருந்து அந்த இன்பத்தைப் பருகும் காதலனுக்கு எத்தகைய இன்ப உணர்ச்சிப் பெருகுமோ அத்தகைய இன்ப உணர்ச்சிப் பெருக்கெடுத்து நின்றான் சபாபதி.

ஆம்; சாரதாவின் மனதை அறியாவிட்டாலும், சபாபதியின் மனம், சாரதாவிடம் எப்போதோ சென்றுவிட்டது.

சபாபதி எழுதிய பாடல், வேணுவின் வழியாக சாரதாவிடம் சரணடைந்திருக்கிறது.

'எத்தனையோ பாடல்கள் இருக்க, என் பாடலை ஏன் பாடுகிறாள்?' இந்த எண்ணம் வேறு அவனுக்கு இனிப்பையூட்டியது.

பாட்டு முடிந்தது.

உள்ளே போகவும் துணிவு இன்றி வெளியே நடக்கவும் மனம் இன்றி திணறினான் சபாபதி.

'ஒருக்கால் வேணு உள்ளே இல்லாவிட்டால்........ அப்படி இருக்காது. வேணு தான் பாடச்சொல்லி ரசித்துக் கொண்டிருப்பான். எதற்கும் அவனையே அழைத்துவிடுவோம்' ஒரு முடிவுக்கு வந்த சபாபதி, "வேணு—வேணு" என்று வாயிலில் நின்றபடியே குரல் கொடுத்தான்.

சிறிது நேரத்தில், "அண்ணு இல்லையே" என்றபடியே அன்ன நடை நடந்து வந்த சாரதா, சபாபதியைக் கண்டதும் சட்'டென்று உள்ளே மறைந்துவிட்டாள்.

தன் உடலை மறைத்து, முகத்தை மட்டும் சிறிது வெளிக்காட்டி நின்ற சாரதாவைக் கவனித்த சபாபதியின் மனதில், வளர் பிறையின் வடிவமே பளிச்சிட்டது. மை உண்ட அவள் கருவிழிகள், அரை நொடியில் 'பட—பட'வென பல தடவைகள் அடித்துக்கொண்டன. சற்று நேரம் அந்த அழகைப் பருகிய சபாபதி, "அண்ணு இல்லையா?........அப்போ........நான்....போய்வருகிறேன்" என்றான்.

"அண்ணு தோட்டத்திற்குத்தான் போயிருக்காங்க வரும் நேரம் ஆயிட்டுது. நீங்கள் உட்காருங்களேன்" வந்தவனை பண்போடு வரவேற்றாள் சாரதா.

"தோட்டத்திற்குத்தானு? அதிக தூரம் இருக்குமா?" என்று கேட்டபடியே சுவர் அருகில் கிடந்த நாற்காலியை சற்று முன்னால் இழுத்துப்போட்டு உட்கார்ந்தான் சபாபதி.

"பக்கத்தில்தான்; இரண்டு பர்லாங் தூரம்தான் இருக்கும்....தாகத்திற்கு ஏதாவது கொண்டு வருகிறேன்" என்று அடக்கமாகக் கூறிவிட்டு அவன் பதிலை எதிர்பாராமலே தாவிச் சென்றாள் சாரதா.

அவள் சென்ற பக்கமும், வெளி வாயிலையும் மாறி, மாறிப் பார்த்துக்கொண்டான் சபாபதி. அவன் மனக் கண்ணாடியில், கட்டழகி சாரதாவின் உருவம் அப்படியே பதிந்தது. 'அதை எப்படி அவளிடம் திறந்து காட்டுவது? தன் எண்ணத்தை எழுதிக் காட்டுவதெப்படி? தன்னைப் பற்றிய அவள் எண்ணம் என்ன? புரிந்துகொள்ள முடியவில்லையே....பெண்களின் உள்ளம் கடலைவிட ஆழமானது' என்று கூறுவார்களே; சாரதாவின் உள்ளம் எப்படியோ? ........எதை எதையோ கண்டுபிடித்தவர்கள் பெண்களின் மனதை அறிய ஒரு கருவியை ஏன் கண்டுபிடிக்கவில்லை? ....சாரதா வந்ததும் அவளிடம் எப்படிப் பேசுவது?...." சிந்தனைக் கடலில் மிதந்து தத்தளித்துக்கொண்டிருந்த சபாபதியின் மனதில், கப்பலைக் கண்டாற்போல்—திடீரென்று ஒரு நல்ல யோசனை உதித்தது.

ஆம்........நான் வரும்போது அவள் பாடிக்கொண்டிருந்தாளே, அந்த பாடல்....'டக்'கென்று எழுந்த ஒலி சபாபதியின் சிந்தனையைத் தடுத்து நிறுத்தியது. திரும்பிப் பார்த்தான். அருகில் ஒரு நிறைகுவளை இருப்பது கண்டான். அதில், 'குளு குளு' வென்றிருந்த மோர், தன்னைப் பார்த்து சிரிப்பதுபோல் அவனுக்குத் தோன்றியது. அதனுள் பளிச்சிட்ட சாரதாவின் முகத்தைப்பார்த்த சபாபதி "அழகாக இருக்கிறது" என்றான்.

"எது? அழகு? மோரின் வெண்மை நிறமா?" என்றாள் சாரதா.

"இல்லை; சுவை" சுவையாகப் பேசினான் சபாபதி.

"இன்னும் குடிக்கவே இல்லையே" என்று கூறி 'கொல்' லென சிரித்தாள் சாரதா.

"உம்,....பார்த்தால் தெரியாதா"? அவன் நாவில் நீர் ஊற்றெடுத்தது. அவனை அறியாமலே, அவன் கரம், அந்த மோரை எடுத்து, தாக சாந்தி செய்ய உதவியது.

"ஆகா; மிகவும் சுவையாக இருக்கிறது. மிக்க நன்றி. எங்கள் பட்டணத்தில், எவ்வளவோ மட்டமானதையே தயிர் என்ற பெயரிட்டு விற்பனை செய்கிறார்கள்". சபாபதி பேசி முடித்து, சற்று நேரம் ஆனபிறகும் சாரதாவிடமிருந்து ஒரு பதிலுமில்லை; ஆகவே சபாபதியே மேலும் தொடர்ந்தான்.

"அப்பாவும் இல்லையா?"

சாரதாவின் மனதைப்போன்றே கண்களும் அடித்துக்கொண்டன. எப்பொழுதுமுள்ள புன்முறுவல் அப்போதும் அவள் முகத்தில் படர்ந்து நின்றது.

"இல்லை; அடுத்தத் தெருவில் யாரையோ காண வேண்டுமென்று போயிருக்கிறார்கள்" குழைவாக கூறினாள் சாரதா.

சற்று நேரம் வெளியே—தெருவையே பார்த்துக் கொண்டிருந்த சபாபதி, சட்'டென்று சாரதாவைப் பார்த்தபடியே "நீங்கள் நன்றாகப் பாடுகிறீர்களே" என்றான்.

சபாபதியின் புகழ்மொழி கேட்ட சாரதாவின் செந்தாமரை முகம் வெட்க உணர்ச்சியால் மேலும் சிவந்தது.

சபாபதியே பேசினான்.

"நீங்கள் பாடிய பாடல் வேணு சொல்லிக்கொடுத்ததுதானே?"

"ஆமாம்; எழுதியது நீங்கள்தான் என்றும் சொன்னார்கள்"

இப்பொழுது, சாரதாவிடமிருந்த வெட்கம், சபாபதியிடம் தாவியது. 'அப்படியென்றால் தெரிந்தே பாடியிருக்கிறாள்' தனக்குள்ளாக எண்ணி மகிழ்ந்த சபாபதி, சாரதாவைப்பார்த்து "நீங்கள் நின்றுகொண்டே பேசுகிறீர்களே. ஏன் இத்தனை வெட்கப்படுகிறீர்கள்" என்றான்.

"வெட்கம் பெண்களின் இயல்பு; ஏன்? நீங்கள்கூட முதலில் வீட்டிற்குள் வருவதற்கு வெட்கப்படவில்லையா?"

"ஆமாம்: உண்மைதான் வேறு இல்லாத வேளையானதால் அப்படி. என்றாலும் இக்காலத்துப் பெண்கள் உங்களைப்போல் இல்லை. காலம் முன்னேறி வருகிறது. இந்தக் காலத்தில் பெண்களுக்குத் துணிவு தேவை."

"துணிவு; அது தேவைக்குத் தக்கபடி இருக்கிறதே; அவசியப்படுகிற வேளையில், ஆண்களைவிட அதிகமான துணிவு பெண்களுக்கே வரும்! கண்ணகிக்குத் துணிவு பிறக்கவில்லையா? சாவித்திரிக்கு எமனையே எதிர்க்கக்கூடிய அளவுக்குத் துணிவு பிறக்கவில்லையா?"

சாரதாவின் இந்த பதில், சபாபதியை அதிர்ச்சியடைய வைத்தது; அதோடு அவளுடைய துணிவையும் அந்த சொற்கள் எடுத்துக்காட்டின.

சாரதாவே மறுபடியும் பேசத் தொடங்கினாள்:

"பட்டணத்தில் உள்ளவர்கள் வயதில் குறைந்த பெண்களை மட்டும் "நீங்கள்" என்று அழைக்கிறார்கள். ஆனால் வயதில் முதிர்ந்த எத்தனையோ ஆண்களை 'நீ' என்று அழைக்கிறார்கள். எதற்காக இந்த போலி மரியாதை?"

"வயது முதிர்ந்த ஆண்களை அப்படி அழைப்பதில்லையே;" சபாபதியின் குரல் ஏனோ தாழ்ந்து ஒலித்தது.

"ஏன் இல்லை. தாழ்ந்த சாதி என்று கருதுகிறவர்களையும், கூலி வேலை செய்யும் தொழிலாளர்களையும் எல்லோருமே மரியாதைக் குறைவாகவேதான் அழைக்கிறார்களாம். ஏன்; விவசாயிகளைக்கூட; நாகரீகம் என்ற போர்வையில் மறைந்திருக்கும் எத்தனையோ பேர், 'ஏய்' என்றும், 'அடேய்' என்றும்தானே அழைக்கிறார்கள். பெண்களிடம் மட்டும்—அதுவும் வயது குறைந்த பெண்களை மட்டும் நீங்கள், நாங்கள்......." சாரதாவின் மணிமொழிகள், சபாபதிக்கு வியர்வையை வெளிப்படுத்தாத குறைதான்.

என்றாலும், "அப்படியில்லை சாரதா, முன்பின் பழக்கமில்லாதவர்களை நீங்கள் என்றுதான் அழைக்கமுடியும். மறுபடியும் கேள்விகளைக் கேட்டுவிடாதே! நீ இவ்வளவு பெரிய சீர்திருந்தவாதி என்பதை நான் இப்பொழுதான் தெரிந்துகொண்டேன். வேணுவின் தங்கையல்லவா? வெழுத்துக்கட்டிவிட்டீர்கள்' பேச்சின் முடிவில் ஒரு 'நீங்கள்' போட்டுவிட்டான் சபாபதி.

அதைக்கவனித்த சாரதா, இந்த 'நீங்கள்' பட்டம் எனக்கு விருப்பமில்லை; என்னை 'நீ' என்று அழைத்தால் மரியாதை ஒன்றும் குறையாது" என்று இதமாகக் கூறினாள்.

"உண்மையாகவா?"

"இதிலும் பொய் பேசவேண்டுமா? என்னை நீங்கள் 'சாரதா' என்றே அழைக்கலாம். அதில் குற்றமில்லை.... என் அண்ணா என்னைப் பெயர்சொல்லி அழைக்கவில்லையா?"

எல்லாவற்றையும் கேட்டு அணுஅணுவாக ரசித்துக் கொண்டுவந்த சபாபதி - சாரதாவின் கடைசி வார்த்தையைக் கேட்டதும், வாய் அடைத்துவிட்டான். ஒரு விநாடியில் தன்னை மறந்து மின்சாரத் தாக்குதலுக்கு ஆளானவனைப்போல், 'சாரதா' என்று கத்திவிட்டான். அடுத்த விநாடியே தன் நிலை உணர்ந்து வெட்கமடைந்து, தலையைக் குனிந்துகொண்டான்.

"என்ன; என்ன வேண்டும்? ஏன் இப்படி திடீரென்று என் பெயரைக் கூறினீர்கள். ஏன் இந்த பதட்டம்?" அடுக்கடுக்காகக் கேள்விகளைக் கேட்ட சாரதா, முடிவில் சிரித்தேவிட்டாள்.

சபாபதி எழுந்தான். "ஒன்றுமில்லை; நான் போய் விட்டு..........." என்று இழுத்தான்.

"சும்மா அலட்டிக்கொள்ளாதீர்கள், அப்பாவும், அண்ணாவும் வரும் வேளையாகிவிட்டது, உட்காருங்கள்." குறுநகை கொந்தளிக்க கூறிவிட்டு, மோர் கொண்டு வந்த

குவளையையும் எடுத்துக்கொண்டு உள்ளே நடந்தாள் சாரதா.

ஒன்றுமே புரியாமல் திகைத்தான் சபாபதி. 'இந்த சாரதாவைப் புரிந்துகொள்ளமுடியவில்லையே! அவள் மனதை அறியுமுன், என் மூளையே கலங்கிவிடுமோ! என்ன வெல்லாமோ பேசுகிறளே. பெயர் கூறி அழைக்கச்சொல் கிறாள் அடுத்தே அண்ணு அழைக்கவில்லையா? என்கிறாள்' என்றெல்லாம் எண்ணி அலுத்துக்கொண்டே மனே ஆராய்ச்சியில் இறங்கினுன்.

"என்ன'ப்பா சபாபதி! வந்து வெகுநேரம் ஆகிவிட்டதோ"? ஆவலோடு கேட்டுக்கொண்டே திடீரென்று அகத்திற்குள் வந்தான் வேணு.

வேணுவின் குரல் கேட்ட சபாபதியின் ஆராய்ச்சிக் கயிறு அறுந்தது.

தன் அதிர்ச்சியை சமாளித்தபடியே "சரியான ஆள் தான் நீ. நேற்றே வருகிறேன் என்றாயே........நேற்று முழுவதும் எதிர்பார்த்திருந்தேன், உன்னைக் காணவில்லை; நான் என்னவோ, ஏதோவென்று அஞ்சி ஓடி வந்தேன்' என்றான்.

"தேடி வந்தது சரிதான்; அதற்காக ஓடி வந்திருக்க வேண்டாம். ரயிலிலேயே வந்திருக்கலாம்" என்று நகைச் சுவையோடு கூறினுன் வேணு.

அதைக்கேட்டு, அங்கு வந்த சாரதாவும், சபாபதியும் வாய்விட்டுச் சிரித்தார்கள்.

"உனக்கு எப்போதும் விளையாட்டுத்தான். நான் இங்கே கடும் வெயிலில் கஷ்டப்பட்டு வந்திருக்கிறேன்; சற்றேனும் அனுதாபப்படாமல்........"

சபாபதி பேசி முடிக்குமுன் இடைமறித்தான் வேணு: "ஓகோ அதனுலென்ன; நான் நேற்று வராமல் இருந்ததற்கும், நீ கஷ்டப்பட்டு வந்ததற்கும், இன்று எங்கள் விருந்தாளியாக இருந்து எனக்குத் தண்டனை அளித்து

விடு நீயும் சாப்பிடுவதற்காகத்தானே நடுப்பகலில் வந்தி

வேணுவின் பேச்சு மேலும் சிரிப்பை வரவழைத்தது.

''என்ன அண்ணு; வந்திருக்கிற விருந்தாளியிடம் இப்படியெல்லாம் பேசினுல், பிறகு சாப்பிடாமலே போய்விடக் கூடாது.'' என்ருள் சாரதா.

''யாரு, இவனு? நல்லா போனுனே; என் நண்பனைப் பற்றி எனக்குத் தெரியாதா? சிரித்துக்கொண்டே உரிமையோடு பேசிய வேணு, சாரதாவைப்பார்த்து ''சாரதா, இந்த இலையைக்கொண்டு உள்ளேவை'' என்று தன் கையிலிருந்த, இலைச்சுருளை சாரதாவிடம் கொடுத்தான்.

சாரதா இலையை வாங்கிக்கொண்டு சென்ருள்.

''தோட்டத்திற்குப்போய், வெறும் இலைச்சுருளோடு வந்திருக்கிறயே. காய்கறி வகைகள் ஒன்றையும் காணுமே! ஏதாவது கத்தரிக்காய், வெண்டைக்காய்........'' என்று இழுத்தான் சபாபதி.

''உனக்குப் பிடித்த காய்கறிகளை மட்டும் சொல்கிருயா? அதற்கெல்லாம் அந்த தோட்டத்திற்குப் போக வேண்டியதில்லை; வீட்டின் பின்புறமும், முன்புறமும் இருக்கும் தோட்டத்திலேயே தாராளமாகக் கிடைத்து விடும். நீ வரும்போது வாயில்புறம் பார்க்கவில்லையா?'' என்ருன் வேணு.

''பார்த்தேன்; 'குரோட்டன்ஸ்' களுக்குப் பதிலாக மிளகுச் செடியும், கத்தரிச்செடியும் வெண்டைச் செடியும், காணுததற்கு கீரைப்பாத்தியும் இருக்கிறது. ஏதோ இடையிடையே ஒன்றிரண்டு ரோஜாவும் நிற்கிறது.''

''ஆம்; பட்டணத்திலெல்லாம், 'அழகுக்காக, நாகரீகத்திற்காக என்று சொல்லிக்கொண்டு எங்கேயோ உள்ள அவசியமில்லா வெள்ளைக்காரன் செடிகளை எல்லாம் விலை கொடுத்து வாங்கி, வீட்டிலே நட்டு; படாத பாடு பட்டு வளர்த்து, வேளா வேளைக்கு கத்தரித்து அழகுபடுத்து

கிறார்கள். தண்ணீர் இறைத்துக் கண்ணும் கருத்துமாக வளர்க்கிறார்கள்; ஆனால் அவர்களின்—சொந்த தேவைக்கு காய்கறி வாங்க தனியாகப் பணம் செலவுசெய்கிறார்கள். மேல் நாட்டு நாகரீகப் பயித்தியத்தால் நம் நாட்டில் விளையும் பலவித தீமைகளில் இதுவும் ஒன்று! அந்த அவசியமற்ற அலங்காரச் செடிகளுக்குப்பதில், கத்திரி, வெண்டை, பூசணி, புடலை முதலிய எத்தனையோ அவசியமான செடிகளை வளர்த்தால், அவைகள் பூத்துக் குலுங்கும்போதும், காய்த்துக் கனியும்போதும், காண்பதற்குக் கவர்ச்சியாக இருக்காதா? விலை கொடுத்து வாங்கும் காய்கறிகளைவிட எத்தனையோ மடங்கு ருசியாக இருக்காதா? நல்லவைகளாகப் புத்தம் புதியவைகளாகக் கிடைக்காதா? தனக்குப்போக மீதி வருபவைகளை ஏழை எளியவர்களுக்கு இனமாகக் கொடுக்காவிட்டாலும், குறைந்த விலைக்காவது கொடுக்கக்கூடாதா?'' வேணு பேசிக்கொண்டே போனான்.

''யேய்; ஒரே போக்காகப் பிரசங்கமே செய்யத் தொடங்கிவிட்டாயே; நீ சொல்வதை எல்லாம் நான் முழு மனதோடு ஆமோதிக்கிறேன், நடை முறையில் கடைபிடிக்கப்போகிறேன். நண்பர்களுக்கும் உபதேசிப்பேன். போதுமா?'' என்று கூறி, வேணுவின் சொற்பொழிவுக்கு முற்றுப் புள்ளி வைத்தான் சபாபதி.

''அப்படி ஒப்புக்கொள். எல்லோருமே இதைக் கையாண்டுவிட்டால் நம் நாட்டின் காய்கறிப் பஞ்சம், காற்றில் பறந்துவிடுமே''

''அடேயப்பா, நான்தான் ஒப்புக்கொண்டுவிட்டேனே திரும்பவும் நீயே பேசிக்கொண்டிருக்கிறாயே. எனக்கும் பேசுவதற்கு சிறிதுசந்தர்ப்பம் கொடு.'' என்றான் சபாபதி.

''பேசுவதற்குத்தானே உம், நன்றாகப்பேசு இந்த நாட்டில் அதற்கு தடை கிடையாதே; நல்லவைகளையோ கெட்டவைகளையோ குறைகளையோ நிறைகளையோ யார் வேண்டுமானாலும் பாரதத்தில் பிறந்த ஒவ்வொரு இந்தியனும் தாராளமாகப் பேசலாம்! ஆனால் ஒருசில துரோக புத்தி

யாளர்கள் சுயநலமிகள், அந்தப் பேச்சு சுதந்திரத்தைத் தீய வழிகளில் உபயோகப்படுத்தி மக்களைக் கெடுக்கிறார்களே! என்று எண்ணும்போதுதான் நான் மிகவும் வேதனைப்படுகிறேன்!' உண்மையிலேயே வேதனை மிளிரக் கூறினான் சபாபதி.

"உன் ஒருவனுடைய வேதனையால் என்ன பயன்! சுதந்திரத்தின் பெருமையை நம் நாட்டு மக்கள் எல்லோரும் உணரவேண்டுமே! அந்நாட்டு அதைக் கட்டிக்காக்க ஒன்றுபடவேண்டுமே! அப்படி செயல்பட்டால்தானே சுபிட்சம் மலரும்!" தேசிய ஒற்றுமையை வலியுறுத்தினான் சபாபதி!

"உம் அந்த நன்னாள் விரைவில் வரும்! அரசாங்கமும் தன்னுடைய குறைகளை உணரவேண்டும்; மக்களும் ஒற்றுமையின் வலிமையை—பெருமையை நன்றாக உணர வேண்டும்!"

"உணர்வார்கள் நாடு நலம் பெறும்; நாமும் மகிழ்ச்சிகரமாக வாழ்வோம்!........அது இருக்கட்டும்! முதலில் ஒரு கேள்வி! தோட்டத்திற்கு இரண்டு 'பர்லாங்' தூரம்தானே இருக்கிறது. நீ காலையிலேயே போயிருப்பாய். வருவதற்கு நடுப்பகல் ஆகிவிட்டதே, அத்தனை நேரம் எங்கு போயிருந்தாய்?" இது சபாபதியின் விகடக் கேள்வி.

"அதை ஏன் கேட்கிறாய்?........மிகவும் வருந்தத்தக்க விஷயம்; நம் நாட்டில், அறிஞர்கள் எல்லோரும் போற்றிப்புகழும் விவசாயிகள் இருக்கிறார்களே, அவர்களுக்குள்ளேயே ஒற்றுமை இல்லை! நான் தோட்டத்திற்குப் போகும் வழியில் இரு விவசாயிகளுக்குள் தண்ணீர் பாய்ச்சுவதில் தகராறு. மடையை அடுத்துள்ள வயல் உரிமையாளர், அவருக்குப் பிறகுதான் அடுத்தவருக்கு வெள்ளம் பாய வேண்டுமென்று அடுத்த வயல்காரரோடு—மண் வெட்டியும் கையுமாக வரிந்து கட்டிக்கொண்டு சண்டைக்கு நிற்கிறார். மற்றவர், உனக்குப் பக்கத்து வயல்தானே எப்பொழுது வேண்டுமானாலும் பாய்ச்சிக்கொள்ளலாம், முதலில் எனக்

குக்கொடு'' என்று அவரைவிட வேகமாக நிற்கிறார். நல்ல வேளையில் நான் போனேன். இருவரையுமே சமாதானம் செய்துவிட்டு வந்தேன். கிராமங்களில் இந்த வெள்ளம் பாய்ச்சுவதில்தான் அனேக கொலைகள்கூட நடக்கிறது!''

''அது சரி, இருவரையும் எப்படி சமாதானம் செய்தாய்?'' குறுக்கே ஒரு கேள்வியைக் கேட்டான் சபாபதி.

''அது மிகவும் சுலபமாகத் தீர்ந்துவிட்டது. மடையிலிருந்து வருகிறது வெள்ளத்தில், முதல் வயலுக்குப் பாதியும், கால்வாயில் பாதியும் போகும்படியாக குறுக்கே நீளமாக ஒரு சிறு அணை போட்டு இருவருக்குமே வெள்ளம் பாயும்படியாக விட்டு வந்தேன் சரிதானே?'' என்றான்

''நல்ல பணி! நீ இந்தமாதிரி எத்தனையோ நல்ல தொண்டுகளைச் செய்கிறாய். உன் சேவைகளுக்கு இந்த நாடே நன்றி செலுத்தவேண்டும். என்றாலும், இந்த நாட்டின் பிரதிநிதியாக நான் உனக்கு நன்றி செலுத்துகிறேன்; போதுமா?'' விகடமாகச் சிரித்துக்கொண்டே நன்றிகூறி வேணுவைப் புகழ்ந்தான் சபாபதி.

''நன்றி செலுத்தவேண்டுமா? யாருக்கு வேண்டும் இந்த புகழுரைகளும் நன்றியும்........ மனிதன் பிறக்கும் பொழுது, வெறும் மனிதனாகவே பிறக்கிறான். இறக்கும் பொழுதும் அப்படியே! அப்படிப்பட்ட மனிதன் தன் வாழ்வில், லட்சக்கணக்கில்—கோடிக்கணக்கில்-செல்வத்தை சேர்த்தால், எத்தனையோ ஏழைகளின் உழைப்பை சுரண்டியவனாகிறான். பலன் கருதாமல் சேவை செய்து, மக்களுக்காக - நாட்டிற்காக உழைத்து உயிரை விட்டால், மக்களின் மனதில் நீங்காத-இடத்தைப் பெறுகிறான். இது நாம் காணும் உண்மை. இதைத்தான் நான் விரும்புகிறேன். ஆனால், நான் பலனையும் கருதுகிறேன். எப்படி என்றால், என்னைப்போல் பலர் இம்மாதிரிய சேவைகளில் ஈடுபட வேண்டுமென நான் விரும்புகிறேன். 'நல்லவன்' என்று எல்லோரும் என்னைக் கூறும்படியாக நான் நடக்கவேண்

டும் என்று எண்ணுகிறேன். ஒரு அறிஞர் கூறியதுபோல் 'நீ பிறந்தபொழுது அழுதாய். அதைப்பார்த்து இந்த உலகம் சிரித்தது. ஆனால் நீ இறக்கும் பொழுது சிரிக்க வேண்டும். உன் இறப்பைக் கண்டு இந்த உலகம் அழ வேண்டும். அப்படி இந்த உலகத்தைப் பழி வாங்கிவிடு....'' என்று. அதை நிறைவேற்ற—நான் அழுததைக் கண்டு சிரித்த இந்த உலகைப் பழி வாங்க, இடையறாது மக்களுக்கு உழைத்து, நான் இறக்கும் பொழுது எல்லோரையும் அழவைக்கப் போகிறேன். இது தான் நான் கருதும் பலன்.

இது அண்ணல் காந்தியிடம் படித்த பாடம்! உலக அரங்கில் அணுக்குண்டும், அழிவிக்கு வித்திடும் ஆயுதங்களும் இன்று போர்க்கோலம் கொண்டு கூத்தாடுகின்றன! அவைகளின் கூத்தாட்டத்தை நம்பி, அண்டை நாடுகள் நம் பாரதத்தை விழுங்கப் பார்க்கின்றன! சபாபதி, பாரத மக்களிடம் நவீன போர்க்கருவிகள் இல்லாவிட்டாலும், நாட்டுப் பற்று என்ற ஆயுதத்தால் வென்றுவிடுவோம்! என்பதை நம்மை அடிமைகளாக்க திட்டமிடும் மண்ணாசை பிடித்த மமதையாளர்களுக்கு சரியான புத்தி புகட்டுவோம். அதற்கு நம்மிடையே ஒன்று பட்ட உணர்ச்சி தேவை! பிரிவினை மனப்பான்மை இனிமேல் தற்கொலைக்கு ஒப்பானது! அதை ஒழித்துக் கட்ட மாநிலங்களுக்குக் கூடுதலான அதிகாரங்களை தயங்காமல் வழங்கி விட வேண்டும்! ஏனென்றால் பிரிவினை வேண்டுவோர் மத்தியில் அதிகாரமிருக்கிறது'' என்று கூச்சல் போட்டுத்தானே மக்களை மயக்குகிறார்கள்? அந்த மயக்கம் தெளிவிக்கும் மருந்து மாநில சுயாட்சிதான்! அதில்தான் இந்தியாவின் சக்தி அதிகரிக்கும். உண்மையான நன்மை உண்டாகும்! நம் நாட்டில் சூழ்ல் வைத்த ஏதேச்சாதிகார சீனரை விரட்டி அடித்தபின்பு, திபேத்தையும் சுதந்திர நாடாகப் பிரகடனப்படுத்தியபின்பு மாநில சுயாட்சிக்கொள்கைதான் நடைமுறையில் செயலாக்கப்படும்! வேணு பேசிக்கொண்டே இருந்திருப்பான்.

ஆனால், "டேய் என்ன 'டா நன்மை?........உன் மேடைப் பிரசங்கத்தை நீ வீட்டிலும் ஆரம்பித்து விட்டாயா?" என்ற சிதம்பரநாதனுவின் திடீர்க் குரல் தடை விதித்து விட்டது.

குடையைச் சுருக்கிக்கொண்டே உள்ளே—வீட்டினுள் வந்த சிதம்பரநாதனுவைக் கண்டதும், எழுந்து நின்று வணக்கம் செலுத்தினான் சபாபதி.

அவனுக்குப் பதில் வணக்கம் செலுத்திக்கொண்டே "வாப்பா, வா; இப்பொழுதுதான் வந்தாயா? உட்காரு" என்று வரவேற்றுக்கொண்டே "சாரதா, சாரதா" என்று அன்போடு தன் மகளை அழைத்தார் சிதம்பரநாதனு.

குறிப்பறிந்த சாரதா ஒரு 'செம்பில் தண்ணீரோடு வந்து, தந்தையின் வலக்கரத்தில் கொடுத்துவிட்டு, இடக் கரத்திலிருந்த குடையையும் வாங்கிக்கொண்டு தன் விழிகளை ஒருமுறை சுழலவிட்டு, சபாபதியின் பார்வையை ஒரு நொடியில், வேறு அறியாவண்ணம் அபகரித்துக் கொண்டு உள்ளே போய்விட்டாள்.

---

# 16 மனதின் தீர்மானம்!

சிறு குழந்தைகளிடம், பெரியவர்கள் விளையாடும் பொழுது, சுவர் மறைவில் நின்றுகொண்டு, "நான் போய் விடுவேன், போயிடுவேன்" என்று கூறி, சிறிது சிறிதாக மறைவதுபோல், கதிரவனும் தன் வேலையை முடித்து, படிப்படியாக உலகை அச்சுறுத்துவதுபோல் அடிவானத்தில் மறைந்துகொண்டிருந்தான். புள்ளினங்கள் தங்கள் அகம் நோக்கி விரைவதுபோல், பல அலுவலகங்களிலும் வேலை செய்யும் தொழிலாளர்கள், தங்கள் வேலை முடிந்து, 'சாரை—சாரை'யாக வீடு திரும்பிக்கொண்டிருந்தார்கள்.

பெரிய சாலைகளில், மக்கள் கூட்டம் திடீரென்று சேர்வதும், வாகனங்கள் எதிர்ப்படும்பொழுது, அப்படியே

சிதறுவதுமாக இருந்தது. விநாடிக்கொருதரம், 'பஸ்களும் ரிக்ஷாக்களும், கார்களும்' ஒன்றை ஒன்று ஊடுருவிச் சென்றதைப் பார்ப்போர் பயந்தனர்.

மக்கள், தங்கள் உயிர்களைப் பாதுகாத்துக்கொள்ள— அந்த போக்குவரத்து பெரிய சாலையில் படும் துன்பம், காண்பதற்கு கலக்கமாகவும்; களிப்பாகவும் இருந்தன. "காயமே இது பொய்யடா" என்று பாடும் சந்நியாசிகளிலிருந்து நூறுவருடம் வாழ்வதற்கு தினமும் டாக்டரிடம் ஆலோசனை கேட்போர்வரை வாகனங்களுக்கு அஞ்சி அங்குமிங்கும் ஓடி ஒதுங்குவதைப்பார்த்தால் வேடிக்கையாகக்கூட இருந்தது.

மணிக்கூர் கணக்கில் அழுது - அழுது அவள் முகம் சற்று வீங்கியதுபோலிருந்தது. வடிந்த கண்ணீரின் தடம் கன்னத்தில் அழகாகப் பதிந்திருந்தது. தன் வலக்கரத்தை தாடியில் முட்டுக்கொடுத்து, இடக்கரத்தை, வலக்கரத்தினிடையில் தளர்வாகப் போட்டபடியே சோகச் சித்திரமாகக் காட்சியளித்தாள் சகுந்தலா.

சிந்தனையின் பிரதிபலிப்பாக சில விநாடிகளுக்கொரு தரம்; அழகிய அவள் மார்பகம், சற்று கூடுதலாகவே மேலே விம்மி சூடான காற்றைப் பெருமூச்சாக வெளியே விட்டு தாழ்ந்துகொண்டிருந்தது.

'டக்—டக்—டக்' என்ற 'பூட்ஸின்' துரித ஒலி கேட்டு, சேலையின் முகப்பால் முகத்தைத் துடைத்துக்கொண்டே பதட்டத்துடன் ஓடி வந்து கதவைத் திறந்தாள் சகுந்தலா.

உள்ளே நுழைந்தான் மணி; அவன் கண்கள் நெருப்பைக் கக்கின. அந்த பார்வைக்கு ஈடு கொடுக்கமுடியாமல் தலையைக் குனிந்துகொண்டு திரும்பினாள் சகுந்தலா.

"சகுந்தலா!........" மணியின் கர்ஜனை கேட்ட சகுந்தலா, மானைப்போல் மருண்டாள். அவள் கால்கள் தரையைப்பற்றிக்கொண்டு பெயர முடியாமல் தவித்தன.

"கல்யாணி அம்மாவிடம் என்ன சொன்னாய்?" மணியின் இரண்டாவது முழக்கம் முன்னைவிட ஆங்காரமாக அலறியது.

"...........தப்பாக ஒன்றும்...........சொல்லவில்லையே!" அவள் குரல் நடுங்கியது.

"அப்படியென்றால் சரியாகத்தான் சொன்னாயா? சாகசக்காரி, என்னை மடையன் என்று நினைத்தாய்?............ பாவம், வீட்டில் அடைந்து கிடந்துவிட்டுப் போகட்டும் என்று நினைத்தால், வெந்த புண்ணில் வேல் கொண்டு குத்துவதுபோல் வெளியாரிடமும் சொல்லி என் மானத்தை வாங்குகிறாய்? அப்படித்தானே! என் வாழ்வையே பாழாக்கிய துரோகி........' கூறி முடிக்குமுன் அவன் கை சகுந்தலாவின் மாம்பழக் கன்னங்களை 'பளார் - பளார்' எனத் தாக்கியது.

அடிபட்ட சகுந்தலா, அசையவில்லை, அழவில்லை; அவள் உதடுகள் மட்டும் இலேசாகத் துடித்தன. கண்களை மூடி கண்ணீரை நிறுத்தப்பார்த்தாள். ஆனால் கட்டுப்படுத்த முடியவில்லை.

"ஏன் இப்படி சிலையாக நிற்கிறாய்? உன் நெஞ்சழுத்தமும், பிடிவாதமும் எனக்கு நன்றாகத்தெரியும். சீ, இப்படியும் ஒரு பெண்ணா?" வாய்க்கு வந்தபடி திட்டினான் மணி.

பொறுக்க முடியாத சகுந்தலா, "என்னை அடியுங்கள்; கொல்லுங்கள். ஆனால் தயவு செய்து திட்டாதீர்கள். உங்கள் கால்களைப் பிடித்துக் கேட்டுக்கொள்கிறேன். இந்தப் பாவியின் ஜன்மமும் இதோடு அழியட்டும்." அவன் கால்களைப் பற்றிக்கொண்டு, துக்கம் தொண்டையை அடைக்க அதையும் மீறி, கதறினாள்.

யாரோ மாடிப்படி ஏறிவரும் ஒலி கேட்கவே, "சீ காலை விடு" என்று கூறி பலவந்தமாகத் தன் கால்களை

விடுவித்துக்கொண்டு எதிரே வந்த கல்யாணி அம்மாளைக் கண்டும், காணாததுபோல் வேகமாக வெளியேறிவிட்டான் மணி.

தரையில் கிடந்த சகுந்தலாவைத் தூக்கி நிறுத்தி, ஏதேதோ சமாதானம் சொல்லி அவள் மனதிலிருக்கும் துயரத்தைக் குறைக்க முயன்றாள் கல்யாணி அம்மாள்.

"'உம்........எல்லாம் தலைவிதி. வீணாக அழுது என்ன பயன்? இந்த இடத்தில் எத்தனையோ பேர்கள் குடியிருந்திருக்கிறார்கள். இதுவரைக்கும் இம்மாதிரி ஒரு சம்பவமே நடந்ததில்லை. என்ன செய்வது, யாரை நோவது? படித்தவனான மணியே இம்மாதிரி எல்லாம் நடந்துகொண்டால் நான் என்ன செய்யமுடியும்?........ நான் சமாதானப்படுத்த எடுத்துக்கொண்ட முயற்சி விபரீதமாகிவிட்டது.'' கல்யாணி அம்மாவின் பேச்சு சகுந்தலாவின் துயரத்தைக் குறைக்கவில்லை; அதற்குள்ளாகவே, கீழே இருந்து, அவள் கணவன் அழைக்கவே, ''நான் வருகிறேன்'' என்று சகுந்தலாவிடம் விடை பெற்றுக்கொண்டு அகன்றாள் கல்யாணி அம்மாள்.

தன் நிலையையும், தன்னால் தன் கணவருக்கும், வீட்டு உரிமையாளருக்கும் இருக்கிற தொல்லையையும் எண்ணி வேதனைப்பட்டாள் சகுந்தலா. கட்டிய கணவனுக்கு இன்பமில்லை; தனக்கு இனி நல்வாழ்வு கிட்டப்போவதும் இல்லை. 'நாளுக்குநாள் துன்பம் வளர்கிறதே தவிர குறையவில்லை. குறைபடக்கூடிய சூழ்நிலையும் இல்லை' வாழ்வில் இன்பத்தின் முகப்பையே காணாத சகுந்தலாவின் மனம், துன்பத்தின் எல்லையில் நின்று துயருற்று, புண்ணாகி புரையோடி புது முடிவுக்குக் கொண்டு வந்து நிறுத்தியது.

அன்று வரையுள்ள தன் கடந்தகால வாழ்க்கையை ஒரு முறை நினைத்துக்கொண்டாள். குளம் கலங்கித் தெளிவதுபோல், அவள் மனமும் நன்றாகக் கலங்கி, படிப்படியாக அமைதி அடைந்தது.

நல்ல அழகு இருக்கிறது. தன்மானத்தோடு வாழ ஆசை இருக்கிறது. நற்குணங்கள் யாவும் உண்டு, நான் மனமார யாருக்குமே துரோகம் செய்ததில்லை. என்றாலும், எனக்கேன் இந்த அவலநிலை? என்னைவிட எல்லாவிதங்களிலும் குறைந்த எத்தனையோ பெண்கள் தங்கள் கணவனுடன் இன்பமாக வாழுகிறார்களே! நான் ஏன் துயருற்று வருந்தவேண்டும்?........ஆம்! நான் துரோகம் செய்யாதவளில்லை மறந்துவிட்டேன். என் உயிர்த்தோழி சாரதாவுக்குத் துரோகம் செய்தேனே! அந்த துரோகத்திற்குத்தான் இப்பொழுது தகுந்த தண்டனை அனுபவிக்கிறேன்!........ ஆனால் நான் மனமார அவளுக்குத் துரோகம் செய்யவில்லை. நான் வாழவேண்டுமென்ற ஆசையில் அவள் வாழ்வைக் கெடுக்கவில்லையே!....வேறு ஏதாவது தவறு செய்துவிட்டேனா?....ஆம்! வேணுவிடம் அன்பு கொண்டேனே. அதன் விளைவுதானோ! ஐயோ, என் தலை ஏன் சுற்றுகிறது? ....என் துயருக்கும், வேதனைக்கும் சரியான காரணம்கூட காண முடியவில்லையே! இப்படி முடிவு காண முடியாத நிலையில் வந்தவர்கள்தான், 'எல்லாம் தலைவிதி' என்று ஒரே வரியில் சொல்லி வைத்தார்களோ! அப்படித்தான் இருக்கவேண்டும். இம்மாதிரிய சூழ்நிலையில் எல்லாம் தலைவிதி என்றிருந்துவிட்டால் மனதிற்கு ஒரு அமைதி கிடைக்கக்கூடும்.

'அப்படி என்றால் இதுவும் என் தலைவிதி............ விதியா?........இப்படியும் ஒரு விதியா? இருக்கமுடியாது. இருக்கக்கூடாது; அந்த விதியின் சக்தியை உடைத்து, தூள்தூளாக்குகிறேன். என்னை ஆட்டிவைத்து, சதி செய்து தவிக்கவிட்டு வேடிக்கை பார்க்கும் விதியை எதிர்த்து வெற்றி கொள்வேன்.'

புலவாறுகப் பிரிந்து ஓடி, முடிவில் கடலில் கலக்கும் ஆற்று வெள்ளம்போல், சகுந்தலாவின் சிந்தனையும் பல வழியாகப் பாய்ந்து சென்று முடிவில் ஒரு தீர்மானத்திற்கு வந்தது.

# 17. பிரயாணத்திட்டம்

அன்று வீட்டினின்றும் வெளியேறிய மணி, தன் மனம்போன போக்கில், எங்கெல்லாமோ சுற்றினான்.

'பட்டணத்துப் பெண்களை மணந்துகொண்டால், அவர் களின் மிதமிஞ்சிய நாகரீக மோகத்தில் தன் வாழ்வு, நல் வாழ்வாக மலராது' என்று எண்ணியே கிராமத்தில் பெண் பார்த்து மணந்தான். அது, இப்பொழுது—எலியூருக்கு அஞ்சி புலியூருக்குப் போனதுபோல் ஆயிற்று—அவனுக்கு.

இயற்கையிலேயே எடுத்ததற்கெல்லாம், ஆத்திரப்பட்டு அவசர முடிவுக்கு வரும் குணமுள்ளவனான மணி, தன் வாழ்வில் பெரிய ஏமாற்றத்தை ஏற்று, மிகவும் மனம் குழம்பினான்; உடைந்துபோன தன் வாழ்க்கை இனி ஒட் டப்போவதே இல்லை' என்று தீர்மானித்தான்.

'அத்தீர்மானத்தின் எதிரொலியாக, எல்லாவற்றை யுமே வெறுத்தான். சிந்தித்து, சிந்தித்து சித்தம் கலங்கி ஷனே தவிர சிறந்த முடிவுக்கு வர முடியவில்லை. அமைதி நாடி எங்கெல்லாமோ சுற்றினான். முடிவில், இந்த பட் டணத்தைவிட்டு வெளியூரில் எங்கேயாவது ஒரு சில னாள் தங்கிவிட்டு வரலாம் என முடிவு கட்டினான்.

வெளியூர் போகவேண்டுமென்ற எண்ணம் உதித்த உடனேயே, நாகர்கோவிலில் கல்லூரி விரிவுரையாளராக இருக்கும் தன் நண்பன் ஆறுமுகத்தின் நினைவு வந்தது.

'ஆம்; ஆறுமுகத்தினிடமே போகலாம். அவனும் எத் தனையோ தடவை தன்னை அழைத்துக்கொண்டிருக் கிறானே. அங்கேயாவது போய் சற்று நிம்மதி காணலாம்!' என்ற உறுதியில், அதற்கான ஏற்பாடுகளைச் செய்தான்.

அடுத்த கணமே, அவன் உள்ளத்தில் சகுந்தலையின் உருவம் பளிச்சிட்டது.

சகுந்தலா; அவள் கல்யாணி அம்மாளின் உதவியால் வெஞானபுரத்திற்கே போய்விடுவாள். பிறகு எக்கேடாவது

கெட்டுப்போகட்டும்.......'' தனக்குள்ளேயே முடிவு செய்துகொண்டான் மணி.

என்றாலும் கடந்த கால சம்பவங்களை மறக்கமுடியவில்லை. 'முதன்முதலாக கோலப்பொடியும் கையுமாக சகுந்தலாவைக் கண்டதும், அவள்மீது ஆசை கொண்டு, மணந்ததும், முதல் இரவில் நடந்த பேச்சுக்களும், சம்பவங்களும், கடைசியாக, சகுந்தலாவின் சொல்லம்புகளைத் தாங்க முடியாமல் அவள் கன்னத்தில் அறைந்ததும்—ஒன்றன்பின் ஒன்றாக அவன் மனக்கண்முன் திரைப்படமாகக் காட்சி அளித்தன.'

மனதை அடக்கிக்கொண்டு பிரயாணத்திற்குத் தயாரானான் மணி.

---

# 18. தற்கொலையா, தியாகமா?

கடிகாரம் ஒன்பது அடித்து ஓய்ந்தது.

சிந்தனைச் சுழலிலிருந்து விடுபட்ட சகுந்தலா, தன்னைச் சுற்றிலும் ஒருமுறை பார்த்துக்கொண்டாள். எங்கும் இருள். தன் நினைவு இல்லாமல் இருந்ததால் விளக்குப்போடவே மறந்திருந்தாள். 'தன் வாழ்க்கையைப் போன்றே—அகத்தைப்போன்றே வெளியிலும் இருள் சூழ்ந்திருக்கிறது' என்று எண்ணினாள். அவள் அப்போதைய நிலையில் அந்த இருளும், தனிமையும் அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது.

தன் தீர்மானத்தை உறுதி செய்துகொண்டு, கட்டிலை எழுந்தாள். மெதுவாக கீழே இறங்கி, வேகமாக நடந்தாள். இப்பொழுது அவள் மனதில் எந்தவிதமான சலனமும் இல்லை. ஒரே எண்ணம்; உறுதியான எண்ணம்! அந்த எண்ணத்தின் முன், ஓடும் ரயில்—அதன் பயங்கர சக்கரங்கள் அன்புக்கரம் நீட்டி அவளை அணைத்துக்கொள்ளத் துடிப்பனபோன்ற காட்சி!

மனம் போன போக்கில் நடந்து சென்ற சகுந்தலா, 'ஓ' என்ற அலை ஓசை கேட்டு நின்றாள். எண்ணத்தின் வேகத்தில் எங்கெல்லாமோ சுற்றி, ரயில் தண்டவாளத் திருப்பத்தில், கடற்கரைக்கு வந்துவிட்டதை உணர்ந்தாள்.

'சரி; இங்கு வந்ததும் நன்மைக்கே. ரயில் சக்கரத்தில் விழுந்து உயிரை விடுவதைவிட, கடலில் விழுந்து உயிரை விட்டால் புண்ணியமாவது உண்டு.'........சந்தர்ப்பத்திற்குத் தக்கபடி மனதை மாற்றி சமாதானம் செய்து கொண்டாள் சகுந்தலா.

அந்த இரவில் கடல் அலைகளின் பயங்கர இரைச்சல், அவளுக்கு இனிய கீதமாகக் கேட்டது. அதன் ஆரவார ஓட்டம், அவள் பாதங்களைத் தொட்டு வணங்குவது போல் இருந்தது. கடல் நீரை நெருங்க — நெருங்க தூரத்தில் யாரோ உரக்கப் பேசும் ஒலி அவள் காதுகளில் விழுந்தது.

மனதை யாரோ 'குரங்கு'' என்று சொன்னார்களாமே: யார் சொன்னாலும் பொருத்தமாகவே சொல்லியிருக்கிறார்கள். சகுந்தலாவின் மனக் குரங்கு, சட்டென்று குரல் வந்த திக்கு நோக்கி தாவியது. அதற்கு இசைந்து அவள் கால்களும் அந்தப் பக்கமாக நடந்தன.

குரல் அலைகளை நெருங்க — நெருங்க, அங்கு வெளிச்சமும், சுற்றிலும் பெருந்திரளான மக்கள் டமும், தென்பட்டன. உயரமாக அமைக்கப்பட்ட மேடையில் - ஒலி வாங்கியின் (''மைக்') முன் நின்று ஒருவர் பேசிக் கொண்டிருந்தார்.

கூடியிருந்த மக்கள் இமைக்காது பேசுகின்ற வீரத் திருமகனின் முகத்தில் தோன்றும் வீராவேச உணர்ச்சிகளைப் பார்த்துக் கொண்டும், பேச்சைக் கேட்டு, இடையிடையே உணர்ச்சி வயப்பட்டு கை ஒலி எழுப்பிக் கொண்டுமிருந்தார்கள்.

அந்த சொற்பொழிவாளரின் சொற்கள் கூடியிருக்கும் மக்களின் நெஞ்சில் நிலைத்து, அவர்களை அஞ்சாநெஞ்சர் களாக ஆக்கிக் கொண்டிருந்தன.

தற்கொலைக்குத் துணிந்து வந்த சகுந்தலாவையும் அவருடைய சொற்கள் கவர்ந்தன. மெதுவாக கூட்டத்தில் பெண்கள் இருக்கும் பக்கமாக வந்து, மேடையைக் கூர்ந்து பார்த்தாள்.

சொற்பொழிவாளரின் பின்னல் நாலைந்து பேர்கள் அமர்ந்திருந்தார்கள். ஒவ்வொருவரும் போருக்குப் புறப் படும் வீரத் தளபதியைப் போல் காட்சி அளித்தார்கள்.

ஒவ்வொருவரையும் கவனித்துக் கொண்டு வந்த சகுந்தலாவின் கண்கள், மூன்றுவது நாற்காலியிலிருப்ப வரைக் கண்டதும், அப்படியே நிலைத்து நின்று விட்டன.

பேசிக் கொண்டிருந்த பேரறிஞர் நீண்ட கை ஒலி களுக்கிடையே பேச்சை முடித்தார்:

"அடுத்ததாக நீங்கள் ஆவலோடு எதிர்பார்க்கும் திரு. வேணு அவர்கள் பாரத பாதுகாப்பிற்கு தொண் டர் படை திரட்டும் பணியைப் பற்றி விளக்கமாகப் பேசுவார்கள்" தலைவர் இடத்திலிருந்தவர் எழுந்து சொல்லி விட்டு, தம் மீசையையும் தடவிக் கொண்டு இருக்கையில் அமர்ந்தார்.

மக்களின் ஏகோபித்த கை தட்டல் களுக்கிடையே எழுந்தார், மூன்றுவது நாற்காலியிலிருந்தவர். ஒலி பெருக்கி நிலையத்தாரின் ஆள் ஓடி வந்து ஒலி பெருக்கி யை சரி செய்தார். எல்லோரையும் போல் சகுந்தலாவும் தன் காதுகளைத் தீட்டிக் கொண்டாள். வேணுவின் சொற்பொழிவை இது வரைக்கும் கேட்காதவள் அல்லவா? ஆகவே மற்றவர்களைவிட கூடுதலான ஆர்வத்துடனேயே கவனிக்கலானுள். வேணு பேச ஆரம்பித்தான்.

"அன்பிற்குரிய அவைத் தலைவர் அவர்களே! உரிமை யைக் காப்பாற்ற உணர்ச்சி பொங்க நிற்கும் உயிரனைய

சகோதரர்களே! தாய்மார்களே! அனைவருக்கும் என் அன்பு வணக்கம். வளர்ந்து வரும், நெற்பயிரில் பூச்சி விழுந்தது போல் வளம் பெற்று வரும் நம் நாட்டில் விஷப்பூச்சிகள் விழுந்திருக்கின்றன. பயிரைக் காப்பாற்ற பூச்சிகளை ஒழித்துக் கட்டுவதைப்போல் பாரதத்தைக் காப்பாற்ற சீன ஆக்கிரமிப்பாளர்களான விஷப் பூச்சிகளை நாம் ஒழித்துக் கட்டியே ஆகவேண்டும். நம் பாரத நாட்டை மாற்றானிடமிருந்து பாதுகாக்க ஆக்கிரமிப்பாளர்களின் கொட்டத்தை அடக்க நாளையிலிருந்தே தேசபாதுகாப்புத் தொண்டர் படை நாம் திரட்டவேண்டும். இன்று நாட்டில் இருந்து வரும் பிளவு சக்தியை ஒழித்துக் கட்ட, மக்களின் உள்ளங்களில் மறைந்து கிடக்கும் நாட்டுப்பற்றை வளர்க்க, பாரதம் முழுவதும் தொண்டர் படை தயாராக வேண்டும். நம் நாட்டை சுற்றி இரத்த வெறி கொண்ட சிறுத்தைகளைப் போல்—நரிகளைப் போல் மாற்றார்கள் மோப்பம் பிடிக்கிறார்கள். உள் நாட்டுப்பூசல்கள், பிளவுகள், கலகங்கள் அந்த பேராசைக் காரர்களுக்கு சாதகமாக இருக்கும். பாரதத்தின் வடக்கே சீனர்கள் கால் ஊன்றி விட்டார்கள். அவர்களுக்கு சரியான பாடம் கற்பித்து முறியடிப்பதே நம்முடைய முதற்பணி! அந்நியர் எவருமே நம் இந்தியாவை அடிமைப்படுத்த முடியாது. அந்த உறுதியில் நாம் சற்றும் பின்னடையத் தேவையில்லை. தொண்டர் படையில் சேர விரும்புவோர் நாளையே திருவல்லிக் கேணியில் அதற்காக அமைக்கப்பட்டிருக்கும் அலுவலகத்தில் வந்து பெயரைப் பதிவு செய்துகொள்ளுங்கள். விரைவில் நாம் எதிரிகளை சந்திக்கவேண்டிய பேறு வரலாம். நமது தேசீய உணர்ச்சி பாரதம் எங்கும் கொழுந்துவிட்டு எரியட்டும். எதேச்சாதிகாரத்தை நாம் முறியடிப்பது திண்ணம். நமது உரிமைப் போராட்டத்திற்கு ஆதரவு கொடுக்க மக்கள் எல்லோரும் ஒன்றுதிரண்டு நிற்கிறார்கள்"

"நமக்குள்ளேயே நாம் எத்தனையோ முறை போராடி இருக்கிறோம். அது தந்தைக்கும் மகனுக்குமுள்ள போராட்டம். ஆனால் இப்போது நம் நாட்டில் அந்நியர்கள் இம்மி

யும் நம்மோடு ஒவ்வாதவர்கள்-ஊடுருவுகிறார்கள். ஆகவே உலக மத்தியில் பாரதத்தின் பண்பை நிலைநாட்ட அத்தனை பேரும் ஒன்றுதிரளுவோம் நம் நாட்டின் வளர்ச்சிக்காக—நலத்திற்காக நல்ல திட்டங்களை உருவாக்கி வெகு சிரமப்பட்டு நிறைவேற்றி வருகிற வேளையில், ஆபத்தின் அறிகுறி-சிவப்பு சின்னம் தாங்கிய சின்ன புத்திக்காரர்கள் பொறாமைகொண்டு நம் எல்லையில் நுழைகிறார்கள். கொடூர குணம் படைத்த கொலைகாரனுக்கு, குணசீலன் என்று பெயர் வைப்பதுபோல் அரக்க மனம் படைத்த 'சீனப் படைகளுக்கு, மக்களைக் காப்பாற்றும் படை' என்று பெயர் வேறு வைத்துக்கொண்டார்கள். பெயரை எப்படி வைத்துக்கொண்டாலும் எத்தனை சூழ்ச்சிகள் புரிந்தாலும் பாவிகளின் பகற் கனவு பலிக்காது என்பதை நாம் அறிவோம்! பாரதம் அறியும்! ஏன்? ஆழி சூழ் உலகமே அறியும்!

தாய்நாட்டைக் காக்க அனைவரும் ஒன்றுசேர்ந்து போராடுவோம். தாய்நாட்டிற்காக நம் உடல், பொருள், ஆவி அத்தனையும் தியாகம் செய்வோம். உயிரைவிட மானமே பெரிது. துணிந்து செல்வோம்; உயிர் கொடுத்தும், பாரதத்தின் பண்பை நிலைநாட்டுவோம்.

கம்யூனிச நாடுகள் தங்களுக்குள்ளேயே விரோதம் இருப்பதாகப் பாவனை செய்துகொள்கின்றன. அதாவது உலகத்தின் முன் நடிக்கிறார்கள். இதை உண்மையென நம்பி நாம் ஏமாற்றமடையமாட்டோம்! சீனு வெளியேறும் வரை இந்தியாவுக்குள் கட்சிகள் — கழகங்கள் எதுவுமே கிடையாது! பாரதம் முழுவதும் தியாகமே உருவெடுத்து-உலக மத்தியில் ஒரு தியாகச் சுடராக ஒளிவீசவேண்டும்! ஆம்! பாரத மக்கள் அனைவரும் ஒரே மகாத்மாவாக—விஜேபாவேயாக வீரபாண்டிய கட்டபொம்மனுக ஆகிவிடவேண்டும் நம்மை எதிர்ப்பவர்கள் ஆயுத பலம் சற்று மிகுந்தவர்களாக இருக்கலாம். ஆனல் ஆத்மபலம் நம்மைவிட மிக—மிகக் குறைவே! இதை நாம் உறுதியாக நம்பவேண்டும்! ஆயுதத்தால் பிறரை அடிமைப்படுத்திய காலம் மலையேறிவிட்டது! அன்பினுலும், பண்பினுலுமே அடுத்தவர்களை

வசப்படுத்தமுடியும்! இந்த உண்மையை நாம் மாற்றானுக்கு உணர்த்தவேண்டும்!

என் அருமை சகோதரர்களே காலம் வந்துவிட்டது! களத்திலே குதிப்போம்! கடமையை நிறைவேற்றுவோம்! உரிமையை அடைவோம் வெற்றி நமதே! என்று உறுதிகூறி என் சொற்பொழிவை முடித்து உங்களிடம் விடை பெற்றுக்கொள்கிறேன்!"

வேணுவின் சொற்பொழிவில் வீர உணர்ச்சிபெற்றிருந்த மக்கள், தங்கள் ஆதரவை கரம் தட்டி வெளிப்படுத்தினார்கள்.

நீண்ட கைஒலிகளுக்கிடையே தன் பேச்சை நிறுத்தி இருக்கையில் அமர்ந்தான் வேணு!

மக்களின் கை ஒலி, வேணுவின் வீராவேசப்பேச்சில் தன்னை மறந்து நின்ற சகுந்தலாவுக்கு சுயநினைவு வரச் செய்தது.

'என்ன பேச்சு வன்மை, எத்தனைக் கருத்தாழம்?....'

வேணுவின் சொற்பொழிவைக் கேட்டு மனதிற்குள்ளேயே வியந்து புகழ்ந்த—சகுந்தலா, 'தற்கொலை' என்ற முடிவினின்றும், மாறுபட்டாள். உயிரை விட அஞ்சி மாறுபடவில்லை!

ரயில் சக்கரங்கள், கடல் அலைகள் என்று எண்ணிக் கொண்டிருந்த சகுந்தலாவின் உள்ளத்தில் "போராட்டம் துப்பாக்கிக் குண்டுகள்" என்ற வேணுவின் சொற்கள் ஆழமாகப் பதிந்தன!

மனதைக் "குரங்கு" என்று சொன்னது சரிதானே?

சகுந்தலாவின் மனம் இப்பொழுது நல்ல முடிவுக்கு வந்தது. நாளை நடக்கவிருக்கும் தொண்டர்ப்படை அணி வகுப்பில் கலந்து தன் நாட்டிற்காக துப்பாக்கிக் குண்டுகளை ஏற்று உயிரை விடுவதே நலம் என்று முடிவு செய்தாள்? தொண்டர்படையில் சேர்ந்தால் உடனேயே தன்னை

கூட்டுவிடுவார்கள்; என்று எண்ணிக்கொண்டாள் பேதை சகுந்தலா!

அந்த உணர்ச்சியில் கூட்டத்திலிருந்து பிரிந்து, எழும்பூர் ரயில் நிலையத்திற்கு வழி கேட்டு நடந்தாள் சகுந்தலா! காலையில் திருவல்லிக்கேணி அலுவலகத்திற்குச் செல்ல முடிவு செய்தாள்.

சிறிது வழி நடந்ததும், பாதை புரியாமல் தடுமாறினாள்.

யாரிடமாவது 'கேட்டு தெரிந்துகொள்ளலாம்' என முடிவு செய்து பின்னால் திரும்பிப்பார்த்தாள்.

சிகரெட் புகையை கக்கியபடி சதுரக்கட்டமிட்ட துண்டு ஒன்றைத் தலையில் கட்டிக்கொண்டு, தன் பின்னால் ஒருவன் வருவது தெரிந்தது. சிகரட் புகை வெளிச்சத்தில் அவன் முகத்தைப் பார்ப்பதற்கே சகுந்தலாவுக்கு அச்சம் மேலிட்டது. அவள் மனம் 'ஓடிவிடு—ஓடிவிடு' என்று கூறினாலும், கால்களுக்கு உறுதியில்லை. ஓடவும் முடியாமல் நிற்கவும் முடியாமல் தடுமாறினாள் சகுந்தலா!

நடந்துவந்தவன், சகுந்தலாவின் அருகில் வந்து நின்றான். கசாப்புக்கடைக்காரன் ஆட்டைப் பார்ப்பதுபோல் சகுந்தலாவின் அங்கங்களைக் கூர்ந்து நோக்கினான்! இருளின் நிறமும், அவன் நிறமும் ஒத்திருந்தது. அவன் பார்வை கண்ட சகுந்தலா, மேலும் தயங்கினாள்.

"இந்தா புள்ளே, கிராக்கி எங்கே மோதுது?" புகையை அவள் முகத்தில் விட்டபடியே-போக்கிரிகளுக்கே உரித்தான கேள்வியைக் கேட்டான்—அந்த அயோக்கியன்!

சகுந்தலாவுக்கு அவன் சொற்களின் பொருள் சரியாக விளங்கவில்லை. ஆனால், அவனை நன்றாக உணர்ந்து கொண்டாள்! 'ஆபத்து நெருங்கிவிட்டதுபோலிருக்கிறதே....!'

"என்ன பொண்ணு அப்படி சும்மா கம்'னு நிக்கிறியே! இந்த முத்து வாத்தியார்க்கிட்ட உன் கபர்தா

வேலை எல்லாம் நடக்காது. உம்; புறப்படு, அப்படியே ஜாலியா போய்ட்டு வரலாம்!"

அச்சத்தின் கடைசிப்படியில் உண்டாகும் உறுதி, சகுந்தலாவின் மனதில் வேரூன்றியது! 'இவனிடம் அஞ்சி ஒடுங்குவதில் பயனில்லை!' என்ற முடிவுக்கு வந்தாள்!

"சீ! என்னை யார் என்று எண்ணிக்கொண்டாய்? கடற்கரையில் பொதுக்கூட்டத்திற்குப் போய்விட்டு வருகிறேன்! என் அண்ணா பின்னால் வருகிறார். அவர் வந்தால் உன்னை கொலைசெய்துவிடுவார்!" ஆங்காரமாக—ஆவேசத்துடன் அந்த அயோக்கியனைப்பார்த்து முழங்கிவிட்டு தொடர்ந்து, "அண்ணா! அண்ணா!" என்று கத்திக் கொண்டே ஓடினாள் சகுந்தலா!

அவள் குரலுக்கு எதிரொலிபோல், "போலீஸ் போலீஸ்!" என்று முழங்கிக்கொண்டே யாரோ ஒருவன் சற்று தூரத்தில் ஓடி வந்துகொண்டிருந்தான்!

கோழைகள்தானே அயோக்கியத்தனத்தில் வல்லவர்களாக இருப்பார்கள்! அந்த நியதிக்கிணங்க, தூரத்தில் ஓட்டமாக வந்துகொண்டிருப்பவனையும், அவன் முழங்கிய 'போலீஸ்' என்ற முழக்கத்தையும் கேட்டு, குலைநடுங்கி ஓட்டம்பிடித்தான் அந்த அயோக்கியன் முத்து வாத்தியார்! போக்கிரிகளின் தலைவனுக்கு சென்னையில் வாத்தியார் என்ற பட்டம் வேறு!

சிங்கத்திற்கு அஞ்சி, சிறு நரி ஓடுவதுபோல் ஓடிய அயோக்கியனைக்கண்டு, 'போலீஸ் போலீஸ் என்று குரல் கொடுத்துவந்தவன் மேலும் விரைந்தான். "அண்ணா அண்ணா"வென்று ஓடிக்கொண்டிருந்த சகுந்தலா பாதையின் அருகிலிருந்த தந்திக்கம்பத்தில் மோதி "அம்மா!" வென்ற அலறலுடன், கீழே விழுந்துவிடுவதுபோல் தள்ளாடினாள்!

கீழே விழவிருந்த சகுந்தலாவை லாவகமாகத் தூக்கினான் வந்தவன்!

மயக்க நிலையில் இருந்தாலும், ஆடவனின் கரம் படு வதை உணர்ந்து வெடுக்கென உதறிவிட்டு எழுந்து நின்றாள் சகுந்தலா!

வந்தவன் திகைத்துவிட்டான்! "அம்மா, அந்த அயோக்கியன் ஓடிவிட்டான். தைரியமாக நீ, என்னோடு வா, உலகத்தில் நல்லவர்களும் உண்டு. உன்னை என் தங்கையாக எண்ணியே அழைக்கிறேன்" என்றான் அவன்!

அவனை உற்று நோக்கிய சகுந்தலாவுக்கு சற்றே அச்சம் நீங்கி, அமைதி பிறந்தது

வந்தவன் ஒரு வாலிபன்; அவன் கையில் காகிதச் சுருள் ஒன்று இருந்தது. அதைப்பார்த்த சகுந்தலா, அவன் முகத்தைப் பார்க்காமலே "அண்ணா! ஆபத்து வேளையில் கடவுள்போல் வந்து காப்பாற்றினீர்கள். ரொம்பவும் நன்றி" என்று அடக்கமாகக் கூறினாள்.

தந்தி கம்பத்தில் மோதியதால் அவள் நெற்றியில் இலேசான காயம் ஏற்பட்டிருந்தது. அது கண்ட அவன் தன் மேல் துண்டை கிழி சகுந்தலாவின் தலையில் ஒரு கட்டுப்போட்டான்: "அம்மா! உனக்கு எந்த ஊர்?.... இந்த இரவு நேரத்தில் இப்படித் தனியாக வரலாமா? இந்த பட்டணம் பொல்லாத இடமாச்சுதே! எத்தனை நல்லவர்கள் இருக்கிறார்களோ, அதற்கு நான்கு மடங்கு மேலாக கெட்டவர்களும் உண்டுமே. அந்த அயோக்கியன் உனக்குத் தொந்தரவு கொடுத்தானா?...................இப்போ எங்கே போகணும்? சாதுரியமாகக் கேட்டான் . அந்த வாத

'சாகத் துணிந்தவருக்கு சமுத்திரமும் முழங்கால் அளவுதானே! இந்த இருள் அதைவிட பயங்கரமானதா? வாழவேண்டும் என்ற ஆசை இருந்தால்தானே இருளுக்கும், போக்கிரிகளுக்கும் அஞ்சவேண்டும். இதை அறியாமல் இவர் இப்படி உபதேசம் செய்கிறாரே' என்று மனதிற்குள் எண்ணிக்கொண்டாள். என்றாலும், சற்று முன் அச்சத்தோடு நடுங்கிய அவள் இதயம், இன்னமும் தன்

படபடப்பை நிறுத்தவில்லை! மென்று விழுங்கியபடி, "அவன் எனக்கு தொந்தரவு கொடுப்பதற்கு முன்பேயே தாங்கள் வந்துவிட்டீர்களே" என்று துக்கம் தொண்டையை அடைக்க கூறினாள், சகுந்தலா.

"அதைப்பற்றிக் கவலைப்படாதே. உனக்கு எங்கே போகணும்? அதைச்சொல்லு" என்றான் அவன்.

"சிவஞானபுரத்திற்கு" துணிந்து ஒரு பொய் கூறினாள் சகுந்தலா.

"ஓஹோ! சிவஞானபுரத்திற்கா........ரயில் ஏறத்தான் எழும்பூருக்கு போகிறாயா? சரி, நானும் அங்குதான் போகணும். நீயும் என்னோடு வரலாம்" என்றான் அவன்.

"உங்களுக்கு அந்த சிரமம் வேண்டாமுங்க எழும்பூர் நிலையத்திற்கு வழியைக் காட்டினால் போதும்" என்றாள் சகுந்தலா.

"உதவி செய்வதில் சிரமம் ஏது? நீ வித்தியாசமாய் ஏதாவது நினைக்கவேண்டாம் சற்று முன் வந்ததுபோல் வழியில் ஏதாவது தொந்தரவு வந்துவிடக்கூடாதே என்றுதான், நானும் வருகிறேன் என்று சொன்னேன். நான் மாஜி ராணுவ வீரன். எனக்கு கூடிய விரைவில் ராணுவத்திலிருந்து அழைப்பு வரும்! என்று வருமென்று எதிர்பார்த்து இருக்கிறேன்; வேணு என் நண்பன் இருவரும் ஒன்றாகப் படித்தோம். ஆனால், வேணு மேல் படிப்புக்காக கல்லூரிக்குச் சென்றான் நான், அந்த வேளையில் ராணுவத்தில் சேர்ந்தேன். நான் ராணுவத்திலிருந்து திரும்பியதும், பழயபடி நண்பர்களானோம். அவனோடு சேர்ந்து நானும் முடிந்தவரை பொதுத்தொண்டு செய்

நாளைக்கு இங்கே ஊர்வலம் நடக்கவிருக்குதில்லே, அதற்கான சுவரொட்டிகளை ஒட்டி முடிச்சு, இப்போ எழும்பூர் போய்க்கிட்டிருக்கேன். நான் கூலிக்காக இந்தப் பணியைச் செய்யவில்லை; கடமைக்காகச் செய்கிறேன். கழகத்

தொண்டன். நாளை ஊர்வலத்திலேயும் கலந்துகொள்ள விருக்கிறேன்.'' அவன் சொற்களில், அமைதியும், நேர்மையும் கலந்திருந்தன.

இருவரும் பேசிக்கொண்டே நடந்தார்கள். எங்கிருந்தோ தெரிந்த விளக்கொளியில், அவ்வாலிபனின் முகத்தைப்பார்த்தாள் சகுந்தலா. நல்ல பண்புள்ள—கடமை வீரனின் இலக்கணங்கள் அந்த முகத்தில் பளிச்சிட்டன! 'உண்மையிலேயே நல்லவர்தான்' தனக்குள்ளேயே தீர்மானித்துக்கொண்டாள்.

''நாளை போராட்ட ஊர்வலம் எத்தனை மணிக்கு ஆரம்பமாகும்?'' ஆவலோடு கேட்டாள் சகுந்தலா.

''சுமார் எட்டு மணிக்கு.''

''நீங்கள் எந்த அணியில் கலந்துகொள்கிறீர்கள்?''

''நான் எழும்பூரிலிருந்து புறப்படும் அணிவகுப்பில் தான் கலந்துகொள்ளவிருக்கிறேன்! எங்கள் பிரிவுக்கு வேணு அண்ணாதான் தலைமை வகிப்பார்'' வாலிபனின் பேச்சில் இப்பொழுது தனித் தெம்பு ஒளி வீசியது.

சகுந்தலாவின் மனதில் நிம்மதி படர்ந்தது.

''அண்ணா, உங்கள் அணிவகுப்பில் பெண்கள் கலந்து கொள்கிறார்களா?''

''ஆமாம்; கலந்துகொள்ள விரும்பும் பெண்கள் முன்னதாகவே பெயரைப் பதிவு செய்துகொள்ளவேண்டும்!'' என்றான் அவன்.

''தவறாக எண்ணாதீர்கள்............உங்கள் பெயர் என்னவென்று............'' ஏனோ அந்த வாலிபனின் பெயரை அறிந்துகொள்ளவேண்டுமென்ற ஆவல், சகுந்தலாவுக்கு.

''ஏனம்மா பெயரைக் கேட்கிறாய்?'' சற்று ஆச்சரியமாகவே கேட்டான் வாலிபன்.

''நீங்கள் எனக்கு செய்த உதவி மறக்கக்கூடியதா? இத்தனை நல்லவரான உங்கள் பெயரை அறியவேண்டு

மென்ற ஆசையினால்தான் கேட்டேன் வேறு காரணமே இல்லை.''

அவன் சிரித்துக்கொண்டே, ''இது ஒரு உதவியா?.... என் பெயர் சண்முகம்'' என்றான். ஆனால் அவள் பெயரைக் கேட்கும் எண்ணம் அவனுக்கில்லை.

சற்று தூரத்தில் தெரிந்த பல மின்சார விளக்குகளின் ஒளியைக்கண்ட சகுந்தலா, ''அதோ வெளிச்சம் தெரிகிறதே........' என்றாள்.

சகுந்தலா சுட்டிக்காட்டிய இடத்தை நோக்கிய சண்முகம், எழும்பூர் ரயில் நிலையத்தை நெருங்கிவிட்டோம் என்பதைத் தெரிந்து, ''ஆமாம் அதுதான் எழும்பூர் ரயில் நிலையம் அங்கு சென்று, கவனமாக இருந்து ரயில் ஏறிப் போய்வா........நான் இந்த வழியாகப் போகிறேன்'' என்று இடத்தைக் காட்டிக்கொடுத்துவிட்டு, தான் வேறொரு வழியாகப் புறப்படத் தயாரானான்.

உடன் பிறந்த சகோதரனைப் பிரியும் உணர்ச்சி சகுந்தலாவின் உள்ளத்தில் நிழலாடியது. அந்த எழுச்சியை மறைத்தபடியே ''ரொம்பவும் நன்றி அண்ணா. உங்களின் உதவியை மறக்கவே முடியாது' என்று கூறியபடி. கரம் குவித்து வணங்கி, சண்முகத்திற்கு விடை கொடுத்தாள்.

சண்முகம் வேறு வழியாக நடந்தான்.

அவன் களங்கமற்ற முகம் சகுந்தலாவின் உள்ளத்தில் நிலைத்தது. ஒரு நாள் பழகினும் பெரியோர் கேண்மை இரு நிலம் பிளக்க வேர் வீழ்ன்றுமல்லவா?

சண்முகத்தின் விரைந்த—கம்பீரமான நடையை திரும்பித்—திரும்பிப் பார்த்தபடியே ரயில் நிலையத்தை அடைந்தாள் சகுந்தலா!

# 19. மணியின் தெளிவு

நடுப்பகல் நெருங்கும் வேளை, மணி பன்னிரண்டு.

ரயிலுக்குள் — தன்மீது யாரோ தண்ணீரைத் தெளித்துபோலிருந்தது மணிக்கு. நன்றாகத் தூங்கிக்கொண்டிருந்த மணி 'திடுதிப்'பென்று எழுந்து வெளியில் எட்டிப் பார்த்தான்.

திருநெல்வேலி சந்திப்பிற்கு ரயில் வந்துவிட்டதையும், அங்கு 'சோ'வென்று ஓங்கியடித்துப் பெய்துகொண்டிருக்கும் மழையே தன்னை எழுப்பியது என்றும் உணர்ந்தான்.

அந்த ரயிலில் வந்த பிரயாணிகளில் பலர் வெளியில் இறங்கமுடியாமல் ரயிலில் இருந்து இறங்கி, நடைபாதையிலும், காரியாலய கட்டிடத்திற்குள்ளும் ஒதுங்கினார்கள்.

சற்று நேரத்தில்-மழை சிறிது நின்றதும், மணி ரயில்வே நிலையத்தினின்றும் வெளியேறி பஸ் நிலையம் நோக்கி நடந்தான்.

'உஸ்.......' என்று இரைச்சலோடு வீசிய காற்று மணியின்மீது கனமான நீர்த்துளிகளை வாரி வீசியது. குடையில்லாததால், தன் வலக்கரத்தை நெற்றியின்மீது தூக்கி, 'மழைக்கு ஒரு சின்ன அணை கட்டிவிட்டோம்' என்ற எண்ணத்தில் பஸ்நிலையம் வந்து சேர்ந்தான் மணி.

நாகர்கோவிலுக்குப் புறப்படத் தயாராக நின்ற பஸ்ஸில் ஏறி, டிக்கட் வாங்கிக்கொண்டு முன்பக்கமுள்ள இருக்கையில் அமர்ந்தான்.

கண்டக்டர் ஊதுகுழல் ஊத, பஸ் புறப்பட்டது:

மழை நீரில் உறவாடி வந்த காற்று, குளிர்காற்றாகி, மணியின் உடலை வருடியது

தூக்கம் வராமல் படுக்கையில் புரளுகிறவனும், கடந்த கால சம்பவங்களை ஒன்றன்பின் ஒன்றாக நினைத்துக் கொண்டே இருந்தால் கண்டிப்பாகத் தூங்கிவிடுவான்.

மணியும், தன் கடந்தகால வாழ்க்கையை-சம்பவங்களைப் படிப்படியாக எண்ணிக்கொண்டே இருந்தான்.

தமக்கு வேண்டியவர்களிடம், ஏதோ ஒரு காரணத்தினால் திடீரென்று விரோதம் உண்டாகிவிட்டால், நிம்மதியாக அவர்கள் அருகில் இருக்க முடிவதில்லை. அப்படியே இருந்தாலும், உண்மையில் விரோதம் உண்டாக யார், காரணம்? என்று சிந்தித்து 'தம்—தம்' தவறை உணர சந்தர்ப்பமும் கிடைப்பதில்லை. ஆனால் ஒருவரை ஒருவர் பிரிந்து வெகு தூரம் பிரயாணம் செய்யும்பொழுது, நடந்தவைகளை கோர்வையாக எண்ணிப்பார்க்கும்பொழுது அந்த சிந்தனையின் முடிவு: உண்மையை உணர்த்தும், மிகவும் தெரிந்தவர்களானாலும், உள்ளூரில் காணும்போது 'உம்' மென்று முகத்தை வைத்துக்கொண்டு போகிறவர்களும், அதே நபரை வெளியூரில் காண நேர்ந்தால் தன்னை மறந்து விசாரிப்பதோடு—மகிழ்ச்சியாகவும் பேசுகிறார்கள் அல்லவா?

இதைப்போன்றே தவறை உணர்வதற்கும், நன்றாக சிந்திப்பதற்கும் பிரயாணம் துணை செய்கிறது.

சிந்தனையின் உதவியால் திருவின் தமக்கைக்கு வயப்பட்டிருந்த மணி திடீரென விழித்தான். அவனுக்கும், அவன் மனைவி சகுந்தலாவுக்குமிடையே நடந்த சம்பவங்களை எண்ணிக்கொண்டே இருந்தான். எண்ணத்தின் முடிவில், தவறு அவனிடமே அதிகமாக இருப்பதுபோல் பட்டது.

நாகர்கோவிலின் நடுநாயகமாக அமைந்திருக்கும் மணிக்கூண்டை ஒரு சுற்றுச் சுற்றி நிலையத்தில் வந்து நின்றது பஸ்.

பஸ்ஸிலிருந்து இறங்கும் பிரயாணிகளை வரவேற்பது போல், மணிக்கூண்டு மணியும் மூன்று அடித்து ஓய்ந்தது.

'நண்பன் ஆறுமுகம் கல்லூரியினின்றும் வருவதற்கு ஐந்து மணியாவது ஆகுமே; அதற்குள் இந்த 'டவுண்'

பக்கம் மட்டுமாவது ஒரு சுற்றுச் சுற்றிப் பார்த்துவிடலாம் என்று எண்ணினன் மணி.

"குளிப்பதற்கு ஏதாவது இடம் இருக்கி" என்று அருகில் இருந்த உணவு விடுதி உரிமையாளரிடம் கேட்டான்.

அருகிலிருக்கும் நகர பூங்காவனத்திற்கு சென்ருல் எல்லா வசதிகளும் இருக்கிறது என்ற விபரம் அறிந்து பூங்கா நோக்கி நடந்தான் மணி.

மணிக்கூண்டின் இடதுபுறமாக சுமார் இருபது 'ஜட்கா'-(குதிரை) வண்டிகள் அடுக்கி வைத்தாற்போல் இருந்தன. அந்தக் காட்சி காண்பதற்கு நன்ருக இருந்தாலும், அதன் அருகில்கூட செல்லமுடியாதபடி துர்நாற்றம் அடித்து விரட்டியது. மேலும் குதிரைகளைக் கவனித்த மணிக்கு, வண்டிகளை குதிரைகள் தாங்குகிறதா? அல்லது குதிரைகளைத்தான் (கீழே விழாதபடி) வண்டிகள் தூக்கிக் கொண்டு நிற்கின்றனவா? என்ற சந்தேகம் தோன்றிவிட்டது. அப்படிப்பட்ட குதிரைகள்! அதோடு மூக்கைத் துளைத்து, மூளையையும் குழப்பும் துர்நாற்றம். 'சே, இந்த அழகான இடத்தில்—நல்ல சந்திப்பில் இப்படி அவலட்சணம் நிறைந்திருக்கிறதே! குதிரை வண்டிகளுக்கென ஒரு தனியான இடம் அமைத்துக்கொடுக்க முடியாமல் இங்கும் ஒரு நகரசபை இருக்கிறதே' என்று எண்ணிக்கொண்டே நடந்தான்.

பூங்காவனத்திற்குள் வந்ததும் சற்றுமுன் வருந்திய அவன் மனம், மிகவும் மகிழ்ந்தது. மிகப் பெரியதும், அழகு

நிறைந்ததுமான அந்தப்பூங்கா, மணியின் மனதைக் கவர்ந்தது. வானளாவிய மரங்களும், அழகான பலவிதச் செடி கொடிகளும் பலவித உருவங்களாகக் கத்தரித்து விடப்பட்ட மேல் நாட்டு குத்துச் செடிகளும் பார்க்கப்பார்க்க பரவசமூட்டின! 'திவான்' டாக்டர் சர், சி. பி. ராமசாமி ஐயர் அவர்களால் திறந்துவைக்கப்பட்டது, என்ற எழுத்தைத் தாங்கி நின்ற 'போர்டு' பளிச்சென்று மின்னியது.

பண்டைய திருவிதாங்கூரில் அமைச்சராகப் பணி புரிந்த சர், சி. பி. ராமசாமி ஐயர் அவர்களின் நற்பணிகளில் பூங்காவனம் நிறுவியதும் ஒன்றாகும். அந்த பூங்காவனம் மணியை மட்டுமல்ல, கலை உள்ளம் கொண்ட எவரையும் கவரும் திறம் படைத்தது! நாகர்கோவிலின் அழகை அதிகப்படுத்தவல்லது! பூங்காவினுள் அமைந்திருக்கும் பாதையில் இடதுபுறமாக நடந்தான் மணி. அங்கு, நேரம் அறிவிக்கும் 'சங்கு' உயரமான ஒரு ஆசனத்தில் அமைந்திருக்கக்கண்டான்.

அடுத்து ரேடியோ ஒலிபரப்புக் கட்டிடம், அதற்கு எதிராகக் கலைவாணர் கட்டிய காந்தி ஸ்தூபி. கம்பீரமாகக் காட்சி அளிக்கும், அந்த ஸ்தூபியைச் சுற்றிலும், கவிமணி அவர்களின் பொன் எழுத்துக்கள் கல்லில் செதுக்கப்பட்டிருந்தன. ஸ்தூபியை ஒரு சுற்றுச்சுற்றி வந்து மகாத்மாவுக்கும் அதோடு வள்ளல் கலைவாணருக்கும் மனதார வணக்கம் செலுத்தினான்.

ஸ்தூபியை அடுத்து, சிமெண்ட் இருக்கைகள் பல அழகாக அமைக்கப்பட்டிருந்தன! பின்புறத்தில், சின்னஞ்சி

சிறு குளம். அதில் சில தாமரை இலைகளும் பூக்களும் அதைச்சுற்றிலும் அழகாக எழுப்பப்பட்ட சிமெண்ட் மதில் களும் காணக்காண திகட்டாத கலைவிருந்து.

• குளத்தின் எதிரில், பெரிய வாசகசாலை! அங்கு ஏராளமானவர்கள் படித்துக்கொண்டிருந்தார்கள். எண் ணற்றப் பத்திரிகைகள் அங்கு படிக்கப்படுவதைப் பார்த் தான் மணி.

வாசகசாலையின் அருகே சுமார் அறுபது அடி சுற் றளவில் வட்டமான வெறும் தரை. பச்சைப்பசேல் என்ற சுற்றுப்புறத்தின் நடுவில் இருக்கும் அந்த தரைப்பாகம் பச்சைக்குளத்தின் நடுவில் பளிச்'சென்று காட்சி அளிக் கும் தாமரை மலரை நினைவூட்டியது! தரையின் ஓரமாக இடப்பட்டிருந்த சாய்வு இருக்கைகள் தாமரையைச் சுற்றி நிற்கும் இலைகளையும், மொட்டுகளையும் நினைவூட்டின.

அந்த பூங்காவில் இல்லாத மரங்களே இல்லை என்று சொல்கிற அளவுக்கு வேம்பு, ஈட்டி, காற்றுடி, புளி, புங்கு முதலிய பல மரங்கள் அணிவகுத்து நிற்கும் அழகை நிமிர்ந்து பார்த்து வியந்தான்.

மா, பலா, கொய்யா, மாதுளை போன்ற தீங்கனி வழங் கும் மரங்களுக்கும் குறைவில்லை எல்லா காட்சிகளையும், ரேடியோவிலிருந்து பரவும் இசையையும் அனுபவித்துக் கொண்டே ரசித்தான் மணி.

'குதிரை வண்டிகளின் அருகே ஐம்பது அடி தூரத் தில் நீர்நாற்றமும், அருவருப்பும். இங்கே கண்ணிற்கினிய

காட்சிதரும் பூங்காவும் இன்னிசையும், நறுமணமும்! ஐம்பது அடி தூரத்திற்குள் எத்தனை வேறுபாடு! இன்பமும், துன்பமும் எவ்வளவு அருகில் இருக்கிறது. இதை உணர்த்தத்தான் நாகர்கோவில் நகரசபையார், நகர பூங்காவையும், குதிரை வண்டி நிலையத்தையும் அருகே அமைத்திருக்கிறார்களோ!' என எண்ணி மனதிற்குள்ளேயே சிரித்துக்கொண்டான்.

குளிப்பதற்காக வாசகசாலையின் அருகே அமைத்திருக்கும், அறைக்கு வந்து,'ஒரு அணு கொடுத்து சீட்டு வாங்கிக்கொண்டு தன் சாமான்களையும், சீட்டுக் கொடுத்தவரிடமே ஒப்படைத்துவிட்டு, குளிக்கச் சென்றான் மணி.

ஆசை தீர நிம்மதியாகக் குளித்தான். புது உடை மாற்றிக்கொண்டு மனக் கண்களால் அந்த பூங்காவை ஒரு முறை விரிவாகப் பார்த்துவிட்டு வெளியேறினான்.

'ஓ' என்ற இரைச்சலுடன் பெரு முழக்கம் செய்தது, பூங்காவினுள்ளிருந்த மின்சாரச் சங்கு!

கைக்கடிகாரத்தைப்பார்த்த மணி, சங்கின் ஒலி, ஐந்து மணியை அறிவிப்பது என்று அறிந்தான்! என்றாலும் ஐந்து மைல் தூரம் வரைக்கும் கேட்கும் அதனுடைய கடூரமான முழக்கத்தை, அருகிலிருந்து கேட்க முடியாமல் விரைந்தான்.

குளித்த தெம்பும், சங்கின் ஒலியும் மணியின் பசியைத் தட்டி எழுப்பவே, அருகிலிருந்த உணவு விடுதியினுள் ஏறி, நான்கே அணுவில் தன் பசியை நிறுத்தி

விட்டு, ஆறுமுகத்தின் முகவரியை ஒரு தரம் குறிப்புப் புத்தகத்தைத் திறந்து மனப்பாடம் செய்துவிட்டு, ராம வர்மபுரம் நோக்கி நடந்தான்.

எதிர் வருவோரிடமெல்லாம் விசாரித்து, ஆறுமுகத்தின் வீட்டு வாயிலில் வந்து நின்றான். 'வே. ஆறுமுகம் எம். ஏ.' என்ற சிறிய அழகான 'ஸ்டீல்' போர்டு, வீட்டு நடையின் மேல் பளிச்சிட்டதைக் கண்ட மணி, ஆறுமுகத்தையே கண்டாற்போல் மகிழ்ந்தான்.

ஊக்கமாக உள்ளே சென்றான். முன் பக்கத்தில் இருந்த அறைக்குள் ஆள் அரவம் கேட்கவே திரும்பிப் பார்த்தான் மணி. யாரோ ஒருவர் கண்ணாடியைப்பார்த்து தலைவாரிக்கொண்டிருப்பதைக்கண்டு, கண்ணாடியில் அவர் முகத்தைப் பார்த்தான். 'சந்தேகமில்லை, ஆறுமுகமேதான்' என்று உறுதி செய்தான்.

அதற்குள் கண்ணாடிக்குள் மணியின் முகத்தைக் கண்ட ஆறுமுகம், ஒரு விநாடிக்குள் மணிதான் என்பதைத் தெரிந்து "சிரிப்பும், ஆச்சரியமும் கலந்த முகத்துடன் வாயில்புறமாகத் திரும்பினான்.

மகிழ்ச்சி தொண்டையை அடைக்க இருவருமே பேச முடியாத நிலைக்கு வந்து, பிறகு சமாளித்து, "மணி" "ஆறுமுகம்" என்ற குரல்கள் இணைய ஒருவரை ஒருவர் அணைத்துக்கொண்டார்கள்.

மணியை வரவேற்று உட்காரவைத்த ஆறுமுகம், "டேய் மணி, என்னடா, ஒரு முன் அறிவிப்புக்கூட

இல்லாமல்- உரித்து வைத்த வாழைப்பழம் மாதிரி பளிச் சென்று வந்து நிற்கிறே' என்றான் சிரித்துக்கொண்டே.

ஆறுமுகத்தின் அகமகிழ்ச்சியால் வார்த்தைகள் தடு மாறி வருவதை உணர்ந்த மணி, தானும் சிரிப்பதுபோல் நடித்து, "எல்லாம் காலமும், நேரமும், விதியும் செய்கிற வேடிக்கைதான். நாம் நினைத்ததுபோல் எதுதான் நடக் கிறது? நேற்று வரைக்கும் நான் கூட நினைக்கவில்லை. இன்று இங்கே வந்து நிற்கிறேன். நாமெல்லாம் விளையாட்டு மைதானத்தில் அகப்பட்ட பந்திற்கு சமம்தானே! ஆண்ட வன் எப்படி எல்லாம் அடிக்கிறானே, அப்படி எல்லாம் போய் விழவேண்டியதுதான்" தத்துவம் பேசினான் மணி.

"டேய் என்னடா 'உமர்கய்யாம்' பாதையா இப் பொழுது? ஏன் இந்த திடீர் மாற்றம்? காலம்-விதி இவை களெல்லாம் உன்னை என்ன செய்தன?" சற்று கிண்ட லாகவே கேட்டான் ஆறுமுகம்.

"சூழ்ச்சி செய்தன, வேறு என்ன செய்தன?" 'டக்' என்று விரக்தியாகப் பதில் சொன்னான் மணி.

"என்ன மணி, மனிதர்கள்தான், தன் நலத்திற்காக- தான் இன்பமாக வாழ்வதற்காக, ஒருவருக்கொருவர் சூழ்ச்சி செய்கிறார்கள்; உன் விஷயத்தில் காலமும், நேர மும்கூட சூழ்ச்சி செய்கிறதா? மணியிடம் கேள்வி கேட்ட ஆறுமுகம், "அடடா உன்னைக்கண்ட மகிழ்ச்சியில் ஒன் றுமே ஓடவில்லை, என்றபடியே எழுந்து உள்ளே பார்த்து "நீலா, நீலா! சீக்கிரம் காப்பி பலகாரம் எல்லாம் கொண்டுவா! என் நண்பன்-மணி வந்திருக்கிறான்." என்று

உரக்க ஆணையிட்டு விட்டுத்திரும்பவும் நாற்காலியில் அமர்ந்து, மணியின் முகத்தைப்பார்த்தான்.

அந்தப் பார்வை, 'என் கேள்விக்குப் பதில் எங்கே?' என்று கேட்பது போலிருக்கவே "ஆறுமுகம், மனிதர்களின் சூழ்ச்சிக்கு காலமும்–நேரமும் தானே துணை செய்கிறது!' என்று சரியாகப் பதில் சொன்னான் மணி.

மணியின் பேச்சுக்களில் இருந்து, 'ஏதோ வெறுப்புடன் தான் சென்னையிலிருந்து புறப்பட்டிருக்கிறான்!' என்பதை உணர்ந்த ஆறுமுகம், உரையாடலை வேறுபக்கமாக திருப்ப எண்ணி, "நீ சொல்வதும் சரிதான்........ அந்த பெரிய ஆராய்ச்சிகளை எல்லாம் நாம் நாளைக்கு வைத்துக்கொள்வோம். அதற்கு வசதியாக நாளைக்கு ஞாயிற்றுக் கிழமை தானே! இப்பொழுது பேச வேண்டியது வேறு. "ஊரில் ஏதாவது விசேடம் உண்டுமா? உன் வீட்டில் ஏதாவது விசேடம் உண்டுமா? நீ தனியாக வந்திருப்பதிலிருந்து, உன் மனைவி பிரசவத்திற்காக உன் மாமியார் வீட்டிற்குப் போயிருக்கலாம்.' என எண்ணுகிறேன் சரிதானா?............ஆறுமுகம் பேசி முடிக்கு முன்பே அவன் மனைவி, பலகாரங்களையும் காப்பிகளையும் கொண்டு வந்து வைத்தாள்.

நிலா' வென்று பெயர் வைப்பதற்குப் பதில், நீலா' வென்று வைத்து விட்டார்களோ,! என்று சொல்லும்படியாகத் திகழ்ந்த–தன் முகத்தில் அரும்பிய வியர்வையைத்துடைத்துக்கொண்டே நின்றாள் நீலா.

"இவன் தான் மணி. நம் திருமணத்திற்கு வரவில்லை என்று என் மீது அன்பு இல்லாதவன் என்று எண்ணி விடாதே. உயிர் நண்பன். நான் தான் உன்னிடம் பல தடவைகள் சொல்லியிருக்கிறேனே!" நண்பனை மனைவிக்கு அறிமுகப் படுத்தினான் ஆறுமுகம். மணிக்கு கரம் கூப்பி வணக்கம் செலுத்திய நீலா, தன் மணவன்—ஆறுமுகத்தின் கர்தோடு, "மனைவியை ஏன் அழைத்துக் கொண்டு வர வில்லை"? என்றாள்.

சரியான கேள்வி தான்.' அதைப்பற்றித்தான் கேட்டுக்கொண்டிருக்கிறேன். பலகாரத்தை விழுங்கிக் கொண்டே பதில் சொன்னான் ஆறுமுகம்.

மணியும் சிரித்துக்கொண்டே தன் பங்கை தின்று தீர்த்துக் கொண்டிருந்தான்.

இருவரும் சாப்பிட்டு முடிந்ததும், பாத்திரங்களை எடுத்துக்கொண்டு உள்ளே சென்றாள் நீலா.

"சரி இனிமேல், என் கேள்விகளுக்குப் பதிலும், உன் திடீர் வருகையின் காரணத்தையும் எனக்குச் சொல்லலாம்" கட்டளையிடுவது போல் அன்பாக கூறினான் ஆறுமுகம்.

சற்று நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்த மணி, உன்னிடம் கூறுவதற்காகத் தானே — நானூற்றைம்பது மைல் கடந்து வந்திருக்கிறேன்—என்ற முகவுரையுடன், நாம் வெளியில் சிறிது-நேரம் சுற்றிப் பார்த்துவிட்டு வருவோமே" என்றான்.

ஆறுமுகம் அந்த நோக்கத்தை வரவேற்கவே; நண்பர்கள் இருவரும் வீட்டினின்றும் புறப்பட்டு நடந்தார்கள்.

சேது லெட்சுமி பாய் உயர் நிலைப் பள்ளி, காம்பவுண்டிற்குள் காலெடுத்து வைத்ததும் மனதை மயக்கும் மாலைத் தென்றல் அவர்களை வரவேற்றது. 'பளீர்' பளீரென்ற பெரிய திடல்கள் பல சுற்றிலும் காட்சியளிக்க, நடுவில் கம்பீரத் தோற்றத்துடன் அழகு நிலையமாக விளங்கியது, அந்த உயர்தரப் பாடசாலை. பாடசாலையைச் சுற்றிலும்—வட்டமாக வளைந்து கிடந்த தார் ரோடு தனிக் கவர்ச்சியூட்டியது.

துக்க சுமையோடு வந்திருந்த—மணிக்குக் கூட அந்த சூழ்நிலை மிகவும் அமைதியையும், இன்பத்தையும் அளித்தது.

வெளியூர் தலைவர்கள் வந்தால் பேசுவதற்கென உயரமாக அமைத்திருக்கும் மேடையின் அருகில் இருவரும் உட்கார்ந்தார்கள்.

"உம், இனிமேல் உன் விஷயங்களைக் கூறு. நீ வெளியில் அழைத்து வந்திருப்பதிலிருந்து ஏதோ இரகசியம் கூட இருக்குமென எண்ணுகிறேன்." என்றான் ஆறுமுகம்.

"அப்படிப் பிரமாதமாக ஒன்றுமில்லை." என்ற முகவுரையுடன், தனக்கு மணமானதிலிருந்து அன்றுவரையுள்ள தன் சரித்திரத்தை சுருக்கமாக கூறி முடித்து, முடிவுரையாக ஒரு நீண்ட பெருமூச்சும் விட்டு நிறுத்தினான் மணி.

மணியின் சரித்திரத்தை சுருக்கமாக — க வ ன மா கக் கேட்ட ஆறுமுகம், சற்று நேரம் அமைதியாக இருந்து விட்டு," மணி, நான் சொல்கிறேனே என்று, வருந்தக் கூடாது. உனக்காகப் பரிந்து நீ செய்ததெல்லாமே சரி' என்று கூறுவேனென்றும் நீ எதிர்பார்க்காதே. 'அழச் சொல்லி அல்லது இடித்து வழக்கறிய வல்லார் நட்பு ஆய்ந்துகொளல்' என்ற குறள் உனக்குந் தெரியுமே! உன் சோக வரலாற்றுச் சுருக்கத்தை உன் வாயாலேயே கேட் டேன். மிகவும் வருந்துகிறேன். என்றாலும் துன்பத்தை விலை கொடுத்து வாங்கிக் கொள்வதைப் போல் வாங்கி, நீயே உன் அமைதியைக் குலைத்திருக்கிறாய். உன் இல் வாழ்வில் வீசிய புயலுக்கு தோன்றுற சமாதானம் நீயே காரணம். பத்திரிகையில் உதவி ஆசிரியனுகப் பணியாற்றுகிறவன் நீ. பல புத்தகங்களைப் படித்திருப்பாய், பலவித அனுபவங்களை அடைந்திருப்பாய். பி. ஏ பட்டமும் பெற்றிருக்கிறாய். ஆனால் இல் வாழ்வை எப்படி நடத்த வேண்டும்? அதிலும் கிராமத்துப் பெண்களை மணந்தவன், தன் வா ழ் வை எப்படித் தொடங்கவேண்டும், என்பன போன்றவைகளைச் சரியாகத் தெரிந்து கொள்ளவில்லை. தெரிந்து கொள்ளாத உனக்கு—உணர்ந்து கொள்ளாத உனக்கு, வாழ்வு கசந்ததில் ஆச்சரியமில்லை. இளமை யி லே யே எடுத்ததற்கெல்லாம் ச ந் தே க ப் படுகிறவன் நீ. , ஆத்திரப் படுகிறவன் நீ. 'ஆத்திரம் அறிவை மறைக்கும் பயங்கர ஆயுதம். அதை நீ இல் வாழ்விலும் பயன் படுத்தி உன்னையே அழித்துக் கொள்ளப் பார்க்கிறாய்.

மணி, ஒவ்வொருவரும் தனக்குத் திருமணமாகுமுன்-வரக்கூடிய மனைவியைப் பற்றி, 'இப்படி இருக்க வேண்டும்,

அப்படி இருக்கவேண்டும், என்றெல்லாம் பலவித கற்பனைக் கோட்டைகளைத் தன் மனதிற்குள்ளேயே கட்டிக் கொள்வார்கள்.

ஏதோ ஒரு சிலருக்கு எண்ணியபடியே நடந்துவிடும். அதாவது கற்பனையில் கண்ட கன்னி கிடைத்து விடுவாள். ஆனால் பலருக்கு கிடைப்பது ஏமாற்றமே! என்றாலும் என்ன செய்ய முடியும்? அறிவில்லாதவனென்றால், தன் வாழ்க்கையை நரகமாக்கிக் கொள்கிறான். அறிவுள்ளவன்—அனுபவமுள்ளவன், அந்த ஏமாற்றத்தையும் சமாளித்து, தனக்குரிய மனைவியாக அவளை மாற்றி, வாழ்க்கையை சரிசெய்து கொள்கிறான். நான் கூறுவது ஆண் வர்க்கத்திற்கு மட்டுமல்ல, பெண் வர்க்கத்திற்கும் சேர்த்துத் தான். மேலும், எண்ணியபடி—எதிர்பார்த்தபடி மனைவி, அல்லது கணவனைப் பெற்றவர்களெல்லாம் திறமைசாலிகள் என்று எண்ணாதே! ஏமாற்றம் எப்படி அறியாமல் நடக்கிறதோ, அதைப் போன்றே அவர்களேயும் அறியாமல் தான் ஏமாற்றத்திலிருந்தும் தப்புகிறார்கள்.

மனித வாழ்வு பல பிரிவுகளைக்கொண்டது. பிறந்தது முதல் ஐந்து வயது வரை ஒரு பிரிவு. பிறகு ஐந்து முதல் பத்து வரை, பத்து முதல், பதினாறு வரை; பதினாறு முதல் இருபத்தி ஒன்று வரை, இருபத்தி ஒன்று முதல் முப்பது வரை........இப்படியே இறக்கும் வரைக்கும் சொல்லிக்கொண்டே போகலாம்: ஒவ்வொரு பிரிவுக்கும், தகுந்தாற்போல் குணங்களும் மாறிக்கொண்டே போகும். ஒன்றிரண்டு குணங்கள் தான் இறக்கும் வரைக்கும் நிலைத்து நிற்கும்! பல குணங்கள் பருவத்திற்கேற்றபடி மாறிவிடும்.

சில குணங்களை பருவத்திற்கேற்றபடி, பருவத்தை உணர்ந்து நாமாகவே விட்டுவிடவேண்டிய கட்டாயம் வந்து விடும். அப்படிப்பட்ட சூழ்நிலையில் விட்டுவிடவேண்டியது தான். 'நான் விடவேமாட்டேன்!' என்று பிடிவாதமாக இருப்பது தவறு!

இளமையில் ஆத்திரக்காரனான நீ, திருமணத்திற்குப் பிறகும் அதே குணத்தில் நிம்மதியாக வாழ முடியாது. எல்லா பருவங்களையும்விட, எல்லா பருவங்களிலும் வரும் மாற்றங்களைவிட, பெரிய மாற்றத்தை ஏற்படுத்துவது—வாழ்க்கைக்கே ஒரு புதிய திருப்பத்தைக் கொடுப்பது இந்த மண வாழ்க்கையின் முதற்படி. 'வாழ்வு என்பது கடல் என்றும், வாழ்க்கை என்பது படகு' என்றும்—'பல பல' சொல்லுகிறார்கள் பலர். நான் சொல்கிறேன்:—விநாடிக்கு விநாடி மாற்றத்தைக்கொடுக்கும் ஒரு விந்தையான கண்ணாடியே வாழ்க்கை. ஏதோ ஒரு காரணத்தால் மித மிஞ்சிய மகிழ்ச்சியில் கூத்தாடுகிற ஒருவன், மறு கணமே மற்றொரு காரணத்தால், "வாழ்வாவது மண்ணாங் கட்டியாவது, செ, எல்லாப் மாயையே" என்று மிகவும் மனம் நொந்து கூறுவான். இம்மாதிரிய மனிதர்களை உலகெங்கிலும் காணலாம். ஏன்? உலகத்தில் உள்ள அத்தனை பேர்களும் அப்படியே; நன்றாக சிந்தித்தால் உனக்கு இது புரியும்.

ஆகவே வாழ்க்கை எனும் அந்த விந்தைக் கண்ணாடியை முதலில் உணர்ந்து மாற்றங்கள் காணும்போது, 'இது இயற்கைதான். இந்த மாற்றத்திற்கு நாம் இப்படி நடந்துகொள்ளவேண்டும்!' என்ற வரம்பில் நடந்துகொண்

டால் எல்லாம் நிம்மதியாக நடக்கும் அதைவிட்டு, அந்தக் கண்ணாடியைப் போட்டு உடைத்துவிட்டால் பிறகு பொருத்துவதற்குப் பெரிய முயற்சி எடுக்கவேண்டும். ஆனால் உன் வாழ்க்கை உடையவில்லை. சற்றே கீறல்; அவ்வளவுதான்! இது விரைவில் ஒன்றாகிவிடும்'' ஒரு சொற் பொழிவே செய்து முடித்தான் ஆறுமுகம்.

ஆறுமுகத்தின் ஆழ்ந்த கருத்துக்களைக் கேட்டு உணர்ந்து, ஆச்சரியத்தில் தன்னை மறந்திருந்த மணி, ''ஆறுமுகம்............எத்தனை பெரிய உண்மைகளை எனக்கு தெளிவாக-சுருக்கமாக எடுத்துச் சொல்லி விட்டாய்! நீ பழைய ஆறுமுகம் தானா? என்ற சந்தேகம் கூட எனக்கு வந்துவிட்டது. நான் நல்ல வேளையில் தான் உன்னை சந்தித்திருக்கிறேன். வேறு எங்கு சென்றிருந்தாலும் எனக்கு இத்தனை சாந்தி கிடைத்திருக்காது. நானும் வாழ வேண்டுமென்ற ஆசையினால் தானே மணம் செய்தேன்! ஆனால் வந்தவள் எனக்கு வாழ்வைக் கொடுக்கவில்லையே!' என்றான்.

''யாருக்கு யார் வாழ்வு கொடுக்க வேண்டும்? உனக்கு அவள் வாழ்வு கொடுக்க வேண்டுமா,? அல்லது நீ அவளுக்கு வாழ்வு கொடுக்க வேண்டுமா? உனக்கு அவள் வா[illegible]ளிக்க வில்லை' என்று சொல்கிறாயே — தவறு! இ[illegible] குற்றச்சாட்டை உன் மீதும் அவள் சும[illegible]லாம். 'நான் படிக்காத கிராமத்துப் பெண்தானே. நான் தெரியாமல் ஏதாவது தவறு செய்தாலும் என்னை மன்[illegible]த்து - அல்லது தண்டித்து திருத்தி இருந்தால் நான் [illegible]மலால் தவறு செய்ய மாட்டேனே' படித்தவர்,

நல்லவர், எனக்கு வாழ்வு அளிப்பார் என நம்பினேன், ஆனால் மலரைக் கசக்குவது போல், என்னைக் கசக்கி எறிந்துவிட்டுப் போய் விட்டாரே!' என்று உன்னைக் குறை கூற அவளுக்கு உரிமை இருக்கிறது. காரணம்? நீ படித்தவன் அது ஒன்றே போதும், உன் மீது குற்றம் சுமத்த!'! சாட்டை அடி போல் 'சூளீர்.' என்று உறைத்தது; ஆறுமுகத்தின் சொற்கள்

"நான் என்ன சொன்னாலும், என் மீதே நீ குற்றம் காணுகிறாய்!"

'உண்மை நண்பன் அப்படித்தான் காணுவான். ஏனென்றால், நீங்கள் வாழவேண்டும் என்று நான் எண்ணுவதால்"

"நீ, நான் கூறுவதை மட்டும் தானே கேட்டாய்; என் மனைவியின் குணத்தை என்னால் சரியாக விளக்க முடியவில்லை. ஆகவேதான், நானே வழக்குத் தொடுத்து விட்டு, நானே குற்றவாளியாக உன் எதிரில் நிற்கிறேன். பெண்களின்..........." மணி பேச்சை முடிக்கவில்லை.

"போதும், பெரிய ஆராய்ச்சிகளுக்குப் போகாதே. எல்லா பெண்களையும், அவர்கள் இதயங்களையும் நாம் ஆராய்ச்சி செய்யவேண்டியதில்லை. உன் மனைவியின் இதயத்தை உன்னால் உணர முடியவில்லை! அதை உணர முயற்சி செய்! நண்பா, 'மலரைப்போன்றவர்கள் பெண்கள்!' என்று ஒருவர் கூறியிருக்கிறார். அதே பெண்களை நஞ்சிற்கு சமமாகவும் கூறினவர்கள் உண்டு. அதுவும் வாழ்வை அனுபவித்து வெறுத்தவர்களின் கூற்றே! நாம் 'மலர்' என்று கூறினவரின் கூற்றைத்தான் எடுத்துக்

கொள்ளவேண்டும். ஏனென்றால், அவர் தான் வாழ்வை நல்முறையில் அனுபவித்திருக்கமுடியும். நாமும் வாழவேண்டுமென்ற எண்ணத்தில்தானே இருக்கிறோம்? ஆகவே 'மலர்' என்று கூறியவரின் கட்சியில்தான் நாம் சேர வேண்டும். அப்பொழுதுதான் மனைவியை மலராக்கி வாழ்வை மணமுள்ளதாக்கமுடியும். மலராக்கவேண்டுமென்றால் தூக்கித் தலையில் வைத்துக் கூத்தாடவேண்டுமென்று பொருளல்ல! மலரைத் தோட்டத்தில் வைத்தும் அழகு பார்க்கலாம்! அனுபவிக்கலாம்! மாலையாகக்கட்டி தெய்வச் சிலைக்கு அணிவிக்கலாம், கூந்தலில் சூட்டியும் அழகு பார்க்கலாம்; ஏன், சட்டையில்கூடக் குத்திக்கொள்ளலாம். அதோடு, மலர் என்று பொதுவாக எண்ணுவதைவிட உயர்ந்த மலராக எண்ணிக்கொள்ளலாம். அதாவது, ரோஜா மலர் என்றிருக்கட்டும். ரோஜாவை அணுகும் போது லாவகமும், மென்தன்மையும் இருக்கவேண்டும். பருவப்பெண்ணை அணுகும்போதும், இவ்விரண்டும் இருக்க வேண்டும். பெண்களை அடிமைகள் என எண்ணி மிதிக்கும் வழக்கம் இப்பொழுது அதிகமாக இல்லை. மலரை மிதிப்பதுவும், மங்கையைக் கொடுமைப்படுத்துவதும் சுலபம். ஆனால் அதை 'அறிவுடைமை' என்று அறிஞர்கள் ஒப்புக் கொள்ளமாட்டார்கள். இந்த எண்ணத்துடன் மற்றொன்றையும் நீ நன்றாக மனதிற் கொள்ளவேண்டும். பெண்ணின் உடல்தான் மலருக்கு சமம். எல்லா பெண்களின் உள்ளங்களும் அப்படி இருப்பதில்லை. அன்பிற்கு அடிமையாகி அடங்கி ஒடுங்கும் அதே உள்ளம், ஆங்காரத்தின் வயப்பட்டுவிட்டால் ஆவேசரூபம் எடுக்கும். மலர், மலையாகத் தோன்றும்! பெண்மை சீறினால், கடல் பொங்கிய

தற்கு நிகராகும்; தன்னையே மறந்துவிடும். அதே பெண்மையில் 'அவமானம்' என்ற கறைபடிந்துவிட்டால், தன் வாழ்வையே துறந்துவிடும். பெரும்பாலான ஆண்கள் அப்படி இருப்பதில்லை! எத்தனையோ அவமானங்களைத் தாங்கிக்கொண்டே வாழ்கிறார்கள்! பெண்களை அத்தனை அதிகப்படியாகக் காண முடியாது! பல பெண்களுக்கு ஆண்களைவிட உறுதியான மனம் உண்டு அப்படிப்பட்ட பெண்கள் எண்ணியதை முடிப்பார்கள். முடிக்க இயலாவிட்டால் தன் வாழ்வை முடித்துக்கொள்வார்கள்! பொறுமைக்கு இலக்கணமான பெண்களும் உண்டு! பொங்கி எழும் புயலுக்கு நிகரான பெண்களும் உண்டு, வறுமையிற் செம்மையாய் வாழும் பெண்களும் உண்டு. செல்வத்திலும் சீரழியும் பெண்களும் உண்டு. இம்மாதிரி பலவகையான பெண்களின் தன்மையை சித்தரிக்கவே, நம் முன்னோர்கள் தெய்வ வடிவில் பார்வதியைக் காட்டியதோடு, பத்துதலை காளியையும் காட்டினார்கள். பொறுமைக்கு சான்றாகப் பூமிக்குப் பெண்மையின் பெயரைச்சூட்டி, பூமாதேவியாக்கி, அதற்கு நேராக பொங்கி வரும் பெருநதிக்குக் 'கங்கை' என்றும் பெயர் வைத்திருக்கிறார்கள் பார்த்தாயா? மணி; உன் வரலாறு முதற் கோணல்-முற்றுங்கோணல் என்ற நிலைக்கு வரக்கூடாது. எண்ணற்றவர்களின் வாழ்க்கை, முதல் இரவில் ஏற்பட்ட ஒரு சில சம்பவங்களால் மனம் மாறி ஆயுள் முழுவதும் அலைமோதுகிறது. தம்பதிகள் அத்தகைய சிறு பிளவுகளைக்கூட சரிசெய்ய முடியாமலும், வெளியே காட்டிக்கொள்ளாமலும் போலியாக வாழ்கிறார்கள். ஏன் அப்படி வாழவேண்டும்? இது அவர்களின் உள்ளங்களில் எழவேண்டிய கேள்வி.

இப்போது உன் உள்ளத்தில் எழுந்திருக்கும் கேள்வி! எப்போதாவது உன் வாழ்க்கையைப்பற்றி நீ தனியாக சிந்தனை செய்திருக்கிறாயா?..............கண்டிப்பாக சிந்தித்திருக்கமாட்டாய். சிந்திக்க வேளை இல்லாத உனக்கு, சிறிப்பாய்வதற்குத் தெரிந்திருக்கிறது. உன் மனைவி, "சாரதாவை ஏன் மணம் செய்துகொள்ளவில்லை?" என்று உன்னிடம் கேட்டது உனக்குப் பெரிய குற்றமாகப் பட்டுவிட்டது. "பெண்களின் விருப்பத்தை யார் கேட்கிறார்கள்?" என்று, நம் நாட்டின்,கிராமத்தின் உண்மையான வழக்கத்தை வாயால் கூறியதால், உன்னிடம் 'அன்பு இல்லை' என்ற தீர்மானத்திற்கு வந்துவிட்டாய். நான் அதற்குத் தகுந்த பதில் கூறுகிறேன்: முதற் கேள்வி, பால்ய தோழியின் மீதுள்ள அன்பால் கேட்டது. இரண்டாவது சொன்னது நடைமுறை. உன் மனைவியின் முதற் கேள்விக்கு, 'அவளைவிட நீ அழகாக இருக்கிறாய் அல்லவா?' என்று மட்டும் நீ கூறி இருந்தால் போதும். அவள் அப்படியே மெய்மறந்து உன் பாதங்களில் வீழ்ந்துவிடுவாளே! இரண்டாவதாக அவளிடமிருந்து சொல்லே பிறந்திருக்காதே! யோசித்துப்பார். சின்ன விஷயத்தைப் பெரிதாக்கி முன் கோபத்தால் — ஆத்திரத்தால் துன்பத்தை தேடிக்கொண்டாய்.

ஏழு மாதங்களுக்கு மேல் உன்னுடன் இருந்து—தன் உணர்ச்சிகளை—பருவத்துடிப்புகளை அடக்கிக்கொண்டு—இன்பத்திற்கு அணைபோட்டு வாழ்க்கை நடத்திய அந்த நல்ல பெண்மணியை 'பிடிவாதக்காரி—நெஞ்சழுத்தக்காரி' என்றெல்லாம் சொல்கிறாயே........மணி, நீயும் பிடிவாதக்காரன் தானே! நீ அதை ஏன் உணரவில்லை? நீ அவளை மனைவி

யாக நடந்தாவிட்டாலும், அவள் உன்னைக் கணவனாகவே பூஜித்து வந்திருக்கிறாள். வெளிப்பார்வைக்கு மட்டும் மனைவியாக நடிக்கவில்லை. ஆனால் நீ கணவனாக நடித்திருக்கிறாய் பொறுமையின் சிகரமான அந்த புண்ணியவதியை புறக்கணித்தது பெரிய குற்றம்! உன்னிடம் பேசுவதற்கே அஞ்சி நடுங்கியவளைப்பார்த்து 'பிடிவாதக்காரி' என்று பட்டம் சூட்டியதும் குற்றம்தான். முதல் நாளில் முதல் இரவில் அவளுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பதற்குப்பதில் அச்சத்தைக் கொடுத்துவிட்டாயே!...........'' ஆறுமுகம் பேசிக்கொண்டே போனான். இன்னும் பேசியிருப்பான். ஆனால் மணிக்கு அந்த சொற்களின் சூட்டைத் தாங்குவதற்குள்ள சக்தி இல்லை. ஆகவே, ''போதும்—போதும்! நான் நன்றாக உணர்ந்துவிட்டேன்!'' என்று உணர்ச்சி வயப்பட்டு கதறி எழுந்தான் மணி! ஆறுமுகத்தின் சொற்களிலே துள்ளித்தெறித்த கருத்துக்கள் மணியின் மனதைத் திருத்தி நல்வழியில் திருப்பின!

மருவுக மாசற்றார் கேண்மை என்ற குறள்மொழிக்கேற்ப, ஆறுமுகத்தை நண்பனாகக்கொண்டிருந்ததால் மணி திருந்திவிட்டான்.

ஆறுமுகம் மகிழ்ச்சி அடைந்தான்.

சட்'டென்று எழுந்து நின்ற மணியைப்பார்த்து, ''மிக்க மகிழ்ச்சி! என் கடமையில் வெற்றி கிடைத்தது! ஆனால், நீ ஏன் இப்படி ஆவேசமாக எழுந்து நிற்கிறாய்? உட்காரு. நேரம் நன்றாக இருட்டிவிட்டதே!'' என்றான்.

உண்மையில், மணியும் அப்பொழுதுதான் கடிகாரத்தை உற்றுப்பார்த்தான். இரவு நேரமானதால், கடிகா

ரத்தின் எண் சரியாகத் தெரியவில்லை. மணியும் ஆறுமுக மும் கடிகாரத்தில் மணி பார்க்க சிரமப்பட்டுக்கொண்டி ருக்கும்பொழுது, காலத்தாற் செய்யும் உதவிபோல் பூங்கா விலிருந்த சங்கு "ஓ"வென முழங்கியது.

"ஆ, மணி ஒன்பது! சரி, வீட்டிற்குப் போவோம்" என்று எழுந்தான் ஆறுமுகம்.

இருவரும் நடந்தார்கள்.

"உன்னைப்போல் ஒரு நண்பன் அங்கு—என் அருகில் இல்லாததினால்தான் நான் என் மனம்போல் நடந்து இந்த அளவுக்கு வந்துவிட்டேன் என் மனைவியை இப்பொழுதே கண்டு மனம் திறந்து பேசி, வாழ்க்கையைப் புதுப்பிக்கப் போகிறேன்." ஆர்வத்தோடு உணர்ச்சி வயப்பட்டுப் பேசி னான் மணி.

"என்ன, மறுபடியும் ஆத்திர உணர்ச்சிதானே வரு கிறது. சாவதானமாக நாளைக் காலையில் போய், வாழ்க் கையைப் புதுப்பித்து இருவருமாக சேர்ந்து, இங்கு வந்து ஒரு வாரமாவது ஆனந்தமாக இருந்துவிட்டுப்போங்கள்." மணியை சமாதானப்படுத்தி, அவன் மனதை நல்வழியில் திருப்பிவிட்டோம், என்ற மகிழ்ச்சியில் கூறி முடித்தான் ஆறுமுகம்.

இருவரும் நிம்மதியாக வீட்டை அடைந்தனர்.

"நீலா" என்ற ஆறுமுகத்தின் குரல் ஒலித்த மறு விநாடியே, "இதோ வந்துவிட்டேன்!" என்ற எதிரொலி உள்ளிருந்து வரவேற்க, கதவும் திறக்கப்பட்டது!

வீட்டினுள் வந்ததும், "மணி, நான் ஒரு பாடல் எழுதி வைத்திருக்கிறேன், அதை உன் பத்திரிகைக்கு அனுப்பவேண்டுமென்றுதான் இருந்தேன்! ...............இப்பொழுதுதான் நினைவு வந்தது" என்றான் ஆறுமுகம்.

"அப்படியா! அப்படியென்றால், இப்போதே அதை எடுத்துப்படி நான் சற்று கேட்டு அனுபவிக்கிறேன்". ஆவலோடு கூறினான் மணி.

நண்பனின் ஆவலைப் பூர்த்தி செய்ய உடனேயே மேசையைத் திறந்து தான் எழுதி வைத்தப் பாடலை எடுத்தான் ஆறுமுகம்

"உம் நீயே படி" மேலும் தூண்டினான் மணி

ஆறுமுகம் உற்சாகத்தோடு படிக்கத் தொடங்கினான்—

வந்தோர்க்கெல்லாம் இடங்கொடுத்து
வாரி வாரி வழங்கிவிட்டு
சொந்தம் கொண்டுக் குலவிப்பின்
சுகவாழ்வுக் கிடங்கொடுத்து
மந்த நிலைக்கு வந்துவிட்ட
மறத்தமிழர்ப் பரம்பரையே
இந்த நிலை இனிமேலும்
எத்தனை நாள்தான் நீடிக்குமோ!

உன்னையே நீ சுரண்டுகிறாய்
உரிமை விட்டுக் கொடுக்கின்றாய்
அன்னை மொழியாம் தமிழமுதை
அகிலம் முழுதும் பரப்பாமல்

தன்னைத் தானே நீ மறந்து
        தனக்குள் தானே பகை வளர்ந்து
இன்னும் அழிந்து போகாதே
        ஈடில்லாத பரம்பரையே

சுதந்திரம் பெற்றபின் இன்னும்
        சூடு உனக்கேன் எழவில்லை?
பதவிக்காகப் பண்பினையும்
        பறக்கவிட்டுக் கெடுவாயோ!
நிதமும் கட்சி அமைந்தபடி
        நீயும் கெட்டு அழிவாயோ
இதமாய்ச் சொல்வேன் கேட்டிடுவாய்
        இன்றே ஒன்றுபட்டிடுவாய்

பாரின் மீது உன்மரபே
        பண்டைநாளில் சிறந்ததுவே
யாரும் இதனை மறுத்ததி(ல்)லை
        ஆனால் நீயோ மறந்துவிட்டாய்
தேரின் தெளிவாய் உணர்வாயே
        திகைத்து ஏனோ நிற்கின்றாய்
'வாரீர் ஒன்றாய்!' என்றழைத்து
        வாழும் வகையை உணராயோ!

அலைகள் தம்முள் அடித்திடினும்
        ஆழியை விட்டுப் பிரிந்திடுமோ!
சிலைகளாக நாம் இருந்தால்
        சிதறிப் பிரிந்தே போய்விடுவோம்
கலைகளில் உயர்ந்த உன் மரபை

கட்சிகளால் ஏன் பிரிக்கின்றாய்
தலைவர்கள் பலரே என்றாலும்
தமிழர்கள்தானே இணைந்தாலென்?

பிரிவினைப்பற்றிப் பேசாதே
பிரிந்து வாழ எண்ணாதே!
கரியின் இனமே என்றாலும்
காட்டில் தனியாய் வாழ்ந்திருந்தால்
நரியும்கூட வென்றுவிடும்
நாயும்கூட எதிர்நிற்கும்
உரிமை கொண்டு வாழ்வதற்கே
ஒன்றாய் கூடி முயன்றிடுவோம்'

"பேஷ், பேஷ் நன்றாக எழுதியிருக்கிறாய்!" பாட்டு முடிந்ததும் பாராட்டினான் மணி!

"உம், இப்பொழுதுதானே எழுதிப் பழகுகிறேன். இன்று நீ பாராட்டுகிறாய்; நாளை மற்றவர்களும் பாராட்டுவார்கள்" நகைச்சுவையோடு கூறினான் ஆறுமுகம்.

"சந்தேகமென்ன? பெரிய கவிஞர்களெல்லாம் முதலிலேயே கவிஞர்கள் ஆகிவிடவில்லையே! மரம் வளர்ந்து பூத்துக் காய்த்து, பிறகுதானே கனி கொடுக்கிறது! முதலிலேயே கனி வேண்டுமென்றால் கிடைக்குமா?" நண்பனுக்கு ஊக்கம் கொடுத்தான் மணி.

"உம் இப்பொழுதுதான் நல்ல எழுத்தாளன் பாணியில் பேசுகிறாய்" கிண்டலாக நண்பனைப்பார்த்துக் கூறிவிட்டுத் திரும்பிய ஆறுமுகம் மேசையின்மீது பார்வையைச் செலுத்தியதும், பேச்சை நிறுத்தி, ஆச்சரியமேலிட மணியின் முகத்தைப் பார்த்தான்.

மணியும் அதே பக்கமாகத் தன் பார்வையைச் செலுத்தினான்:

"வாலாங் அருகே சீனர்கள் சூழ்ந்துவிட்டனர்"

கொட்டை எழுத்துக்களில் மின்னிய பத்திரிகைத் தலைப்புச்செய்தி, இருவர் கண்களையும் 'பளிச்'சென்று கவர்ந்தது!

மேசைமீது கிடந்த பத்திரிகையைக் கையில் எடுத்த மணி, "காலையில் வருத்தமாகத் துன்பச் சுமையோடு இங்கு வந்தேன், அந்த வருத்தம் சற்று முன்புதான் நீங்கி, இருவருமே ஆனந்தமாக வந்தோம், வந்ததும், இதோ பார்த்தாயா? மறுபடியும் வருந்தத்தக்க செய்தி! இன்ப துன்ப உணர்ச்சிகள் விநாடிக்கொருதரம் மாறும் விந்தையைப் பார்த்தாயா? சீனாக்காரன் வேறு திடீரென்று வந்து நம் மீது மோதுகிறானே!" என்றான் மணி!

"இன்பமும், துன்பமும், வேதனையும் சோதனையும் கலந்ததே வாழ்க்கை. இதை உணர்ந்தவன் எந்த நேரத்திலும் நிம்மதியாகவே இருக்கிறான். அதிலும் நம் நாட்டு அரசியல் இருக்கிறதே, அதை நினைத்தாலே வெறுப்பு ஒரு புறம்—வேடிக்கை ஒருபுறமாக வளர்கிறது. சிந்தித்தால், சித்தம் கலங்குகிறது. எதற்கெடுத்தாலும் சோம்பேறித்தனமாகவே இருந்தோம்! அரசியல் கட்சிகளுக்கெல்லாம் தேர்தல் மட்டுமே பெரிய சிக்கலாக இருந்தது. அதற்கு அடுத்துதான் நாட்டின் நன்மையில் நாட்டமிருந்தது. ஏதோ அரசியலில் பதவிப் போட்டிக்கு ஆசைப்படாத கட்சிதான் ஆளுவோரோடு சேர்ந்தும், வழக்காடியும், நாட்

"பாலம் மட்டும் பாழாகாமல் இருந்திருந்தால், ஆக்கிரமிப்பாளர்கள் பாழாகி இருப்பார்கள் அப்படித்தானே!" பரபரப்போடு கேட்டான் மணி!

"சந்தேகமென்ன? நம் படைகள் எதிரியைத் துரத்தி அடித்திருக்குமே! இனிமேலும் என்ன? நாம் விட்டுவிடவா போகிறோம்?" ஆறுமுகத்தின் சொற்களில் முன்பு தெரிந்த சோகம் மாறி, வீரம் பளிச்சிட்டது.

"உயிரை விடுவோமே தவிர நாட்டை விடோம்!"

"எல்லோரும் இப்படி எண்ணவேண்டுமே!"

"மிகப் பெரும்பாலானவர்கள் எண்ணுகிறார்களே!"

"போதுமா? எல்லோரும் எண்ணவேண்டுமென்றல்லவா கூறினேன்!............பணமே எல்லாம், என்று சர்வ பூஜை செய்யும் எத்தனை முதலைகள் நம் நாட்டில் இருக்கிறது தெரியுமா? எங்கள் ஊரில்—இதே நாகர்கோவிலிலும் பல பெருச்சாளிகள் இருக்கின்றன! பத்து வருடத்திற்கு முன் பரதேசியாக வந்தவர் எத்தனையோ பேர்கள் இன்று குபேரனாக இருக்கிறார்கள். எப்படி செல்வந்தர்களானார்களோ தெரியாது! அவர்களிடம் போய் பாதுகாப்பு நிதிக்குப் பணம் கொடுங்கள் என்று கேட்டால், "மிகவும் கஷ்டப்படுகிறேன்; உனைக் கண்டே ஒரு வருடமாச்சுது, வியாபாரம் இல்லை; இந்த தடவை வருமான வரி மட்டும் லட்ச ரூபாய் கட்டியிருக்கிறேன்" என்பனபோன்ற பல்லவிகளைப்பாடி, அவர்களின் ஆணவத்தைத்—பணத்திமிரை வெளிப்படுத்திவிட்டு, 'உங்களுக்கு எதற்கு இந்த வீண் வேலை; நாட்டை நீங்கள் தான் காப்பாற்ற வேண்டுமா? அவரவர் வாழ்க்கை அவரவர்களுக்கென்று பேசாமல் இருங்கள். எல்லாம் சரியாக நடக்கும். வீணாக ஏன் சிரமப்படுகிறீர்கள்?' என்றெல்லாம் உபதேசிக்கத்

“பாலம் மட்டும் பாழாகாமல் இருந்திருந்தால், ஆக்கிரமிப்பாளர்கள் பாழாகி இருப்பார்கள் அப்படித்தானே!” பரபரப்போடு கேட்டான் மணி!

“சந்தேகமென்ன? நம் படைகள் எதிரியைத் துரத்தி அடித்திருக்குமே! இனிமேலும் என்ன? நாம் விட்டுவிடவா போகிறோம்?” ஆறுமுகத்தின் சொற்களில் முன்பு தெரிந்த சோகம் மாறி, வீரம் பளிச்சிட்டது.

“உயிரை விடுவோமே தவிர நாட்டை விடோம்!”

“எல்லோரும் இப்படி எண்ணவேண்டுமே!”

“மிகப் பெரும்பாலானவர்கள் எண்ணுகிறார்களே!”

“போதுமா? எல்லோரும் எண்ணவேண்டுமென்றல்லவா கூறினேன்!..........பணமே எல்லாம், என்று சர்வ பூஜை செய்யும் எத்தனை முதலைகள் நம் நாட்டில் இருக்கிறது தெரியுமா? எங்கள் ஊரில்—இதே நாகர்கோவிலிலும் பல பெருச்சாளிகள் இருக்கின்றன! பத்து வருடத்திற்கு முன் பரதேசியாக வந்தவர் எத்தனையோ பேர்கள் இன்று குபேரனாக இருக்கிறார்கள். எப்படி செல்வந்தர்களானார்களோ தெரியாது! அவர்களிடம் போய் பாதுகாப்பு நிதிக்குப் பணம் கொடுங்கள் என்று கேட்டால், “மிகவும் கஷ்டப்படுகிறேன், உனவைக் கண்டே ஒரு வருடமாச்சுது, வியாபாரம் இல்லை; இந்த தடவை வருமான வரி மட்டும் லட்ச ரூபாய் கட்டியிருக்கிறேன்” என்பனபோன்ற பல்லவிகளைப்பாடி, அவர்களின் ஆணவத்தை—பணத்திமிரை வெளிப்படுத்திவிட்டு, ‘உங்களுக்கு எதற்கு இந்த வீண் வேலை; நாட்டை நீங்கள்தான் காப்பாற்ற வேண்டுமா? அவரவர் வாழ்க்கை அவரவர்களுக்கென்று பேசாமல் இருங்கள். எல்லாம் சரியாக நடக்கும். வீணாக என் சிரமப்படுகிறீர்கள்?’ என்றெல்லாம் உபதேசிக்கத்

தொடங்கிவிடுகிறார்கள். அதனாலது தானும் கொடுப்பதில்லை! சேவை செய்கிறவர்களுக்கும் உற்சாகமூட்டுவதில்லை!''

''சுயநலவாதிகள். இப்படிப்பட்டவர்கள்தான் தேசத் துரோகிகள். இம்மாதிரிப்பட்டவர்கள் கொடுக்கமாட்டார்கள்! அவர்களிடமிருந்து எடுக்கவேண்டும்! ஆம்; கொடுக்காதவர்களிடமிருந்து எடுக்கப்படவேண்டும். நாட்டின் நலனுக்காக எடுக்கப்படவேண்டும்'' ஆவேசமாகப் பேசினான் மணி

''கொடுக்காதவர்களிடமிருந்து எடுக்கவேண்டியது தான். ஆனால் ஏராளமான செல்வந்தர்கள் தாங்களாகவே கொடுப்பதினால், கொடுக்காதவர்கள் தப்பித்துக்கொள்கிறார்கள்!''

''செல்வந்தர்கள் எங்கே கொடுத்திருக்கிறார்கள்?''

''சென்னையில் இல்லைபோலிருக்கிறது. ஆனால், இங்கு எத்தனையோ செல்வந்தர்கள்—தொழில் அதிபர்கள், 'நாடு இருந்தால்தான் நாமும் இருக்க முடியும்' என்பதை உணர்ந்து நாட்டுப்பற்றோடு பாதுகாப்பு நிதிக்கு வாரி வழங்குகிறார்கள்!''............பேசிக்கொண்டிருந்த ஆறுமுகம் பின்னால் அரவம் கேட்டுத் திரும்பினான்.

அங்கு அவன் மனைவி நீலா நின்றாள். அவள் முகக் குறிப்பை உணர்ந்து, மணியின் பக்கமாகப் பார்வையைச் செலுத்திய ஆறுமுகம், ''வா, சாப்பாட்டை முடித்து விட்டு, பிறகு பேசலாம்'' என்று கூறி எழுந்தான்

தலையை அசைத்தபடியே அவனைப் பின் தொடர்ந்தான் மணி.

# 20 உணர்ச்சிப் பிழம்பாகக் கலந்தனர்

அதிகாலை! என்றும் உதயமாகும் அருணன் அன்று 'சற்று முன்பாகவே தன் பிரயாணத்தைத் தொடங்கிவிட்டானோ!' என்று எண்ணினார்கள் பாரதத்தின் மாணிக்கங்களான இளங்காளைகள்!

குமரிக் கடலும் அன்று கூடுதலாகவே குமுறிக் கொந்தளித்தது! தெற்கெல்லையில் காவல் நின்று நித்தம் தவம் செய்யும் கன்னிக்குமரியின் செந்தாமரை முகம், காலைக் கதிரவனின் செங்கதிரொளியில் கோடி சூரியப் பிரகாசமாகப் பொலிந்தது!

“பாரதத்தின் அறப்போர் வெற்றி பெறும்!” என்ற தீர்க்க தரிசன காட்சியே குமரியின் முகத்தில் மலர்ந்தது.

அன்று குமரி முனையிலிருந்து இமயம் வரைக்கும், ஒவ்வொரு ஊரிலும்—ஒவ்வொரு கிராமங்களிலும் கட்சிபேதமின்றி ஒரே அடிப்படையில் சீனாவின் ஆக்கிரமிப்பு வெறியைக் கண்டித்த அணிவகுப்பு ஊர்வலம் ஆரம்பமானது! ஏன்? பாரதம் முழுவதுமே சீனாவின் மண்ணாசையைக் கண்டித்துக் கண்டனக்குரல் எழுப்பியது!

சென்னையில் எழும்பூரிலிருந்து புறப்பட்ட ஊர்வல அணிவகுப்பில் இருநூற்றுக்கு மேற்பட்ட ஆண்களும், நூற்றுக்கு மேற்பட்ட பெண்களுமாக சுமார் நானூறு பேர் வரைக்கும் சென்றார்கள். அந்த அணிவகுப்புக்கு வேணு தலைமை தாங்கிச் சென்றான். அவன் வலப்புறம் நிமிர்ந்த நடைபோட்டுச் சென்றான் சபாபதி. எல்லோருடைய கரங்களிலும் தேசீயக் கொடி பட்டொளி வீசிப் பறந்தது!

வேணுவும், சபாபதியும் அன்னியனே வெளியேறு, சீனாவே அடுத்தநாட்டை ஆக்கிரமிக்காதே என்பன போன்ற

உரிமை முழக்கத்தை உரக்க முழங்க, அதைத் தொடர்ந்து அணிவகுப்பிலிருந்து எழுந்த வீர முழக்கம் விண்ணைப் பிளந்தது!

பெண்கள் பகுதியில் எல்லாப் பெண்களையும் போல் கையில் கொடி ஏந்தி சேலை முந்தானையை இறுக்கி இடுப்பில் செருகி வீராங்கனையின் வாரிசாகக் காட்சி அளித்தாள், சகுந்தலா!

பெண்கள் பகுதிக்கு மட்டும் சரோஜினி என்ற ஒரு தியாகக் கொடி—வீராங்கனை தலைமை தாங்கிச் சென்றாள்! அந்தத் தலைவியைப் பார்க்க பிற பெண்களுக்கும் வீர உணர்ச்சி பெருக்கெடுத்தது!

பல பகுதிகளிலிருந்தும் புறப்பட்ட ஊர்வலத்தால் வாகனப் போக்குவரத்துக்கள் தடைபட்டன.

எதையுமே பொருட்படுத்தாமல், பல நதிகள் ஒன்று கூடிக் கடலில் கலப்பது போல ஊர்வலங்கள் ஒன்றுகூடி கட்டபொம்மன் திடலை அடைந்தது!

கடலெனத் திரண்டு நிற்கும் மக்களிடையே வேலு பேசத் தொடங்கினான். அந்தப் பொதுக்கூட்டத்திற்கு சுவரொட்டி (வால் போஸ்ட்) ஒட்டிய சண்முகம் தலைமை வகித்தான்!

வீராவேசமாக எழுந்த வேலு, உணர்ச்சி வயப்பட்டு பேசலானான்.

தலைவர் அவர்களே, பெரியோர்களே, சகோதரர்களே, உங்களுடைய ஒன்றுபட்ட எழுச்சிக்கு முதன் முதலில் நன்றி செலுத்தி தலைவணங்குகிறேன்.

உங்கள் முன்பு நான் பல தடவைகள் பேசியிருக்கிறேன். ஆனால் அப்பொழுதெல்லாம், மாநில சுயாட்சி,

மொழிப் பிரச்சனை, தேசிய ஒற்றுமை, என்பன போன்ற உள் நாட்டு ஆக்க வேலைகளுக்கான அடிப்படைச் சொற்களை என் நாவிலிருந்து உற்பத்தியாகும்! ஆனால், இன்றைய கூட்டம் அதற்காக கூட்டப்பட்டதல்ல என்பது நீங்கள் அறிந்ததே. அல்ல உணர்ந்ததே! தற்பொழுது நம்முடைய உள்நாட்டுப் பிரச்சனைகளுக்கெல்லாம் 'கமா', போட்டு, வெளி நாட்டாரை எதிர்த்துப் போராட வேண்டிய நிலை நமக்கு உருவாகிவிட்டது. ஆம்! அதை உருவாக்கி, நம் நாட்டின் ஆக்க வேலைகளுக்கு இடையூறு விளைவிக்க இமயமலைப் பக்கம் வந்துவிட்டார்கள் எதிரிகள். ஆம்; நம் நண்பர்கள் என்று எண்ணிக்கொண்டிருந்தவர்கள், இன்று நம்மையே அடிமைகளாக்கத் திட்டமிடுகிறார்கள்!

மனித இனம், எதை வேண்டுமானாலும் இழக்கும்! ஆனால் உரிமையை இழக்காது! அதிலும் இந்திய மண்ணில் பிறந்த எவருமே அன்னியனுக்கு அடிமையாக இருக்கமாட்டார்கள். (மக்களின் கையொலி வானைப் பிளக்கிறது)

பாரதத் தாய் அப்படி ஒரு கோழையைப் பெறவில்லை என்பதே சரித்திரம் காட்டும் உண்மை! பண்டையத் தமிழ் இலக்கியங்களில், பிறந்த நாட்டைக்காக்க கொண்ட கணவனைப் போருக்கு அனுப்பி, அவன் போர்க்களத்திலே மார்புக்காயங்களுடன் மடிய, தன் மக்களையும் ஒருவர் பின் ஒருவராக அனுப்பி, அத்தனைபேரும் அழிந்தாலும் நாடு வாழவேண்டும் என்ற எண்ணத்துடன் தியாகம், கடமை, போன்ற நற்பண்புகளால் நிறையப்பெற்ற வீரத்தாய்மார்களை படித்தோம்-படிக்கிறோம்! இன்று அதைப்போன்ற அவ் வீரத் தாய்மார்களின் வாரிசுகளை நேரில் பார்க்கிறோம், பூரிப்படைகிறோம்! முன்னோர்கள் எழுதிவைத்தது கதைகளல்ல, என்பதை இன்றைய வாரிசுகளைக் கண்டு உலகம் உணர்கிறது!

நண்பர்களாக எண்ணினவர்கள், மதிக்கப்பட்டவர்கள் மண்ணாசை கொண்டு நரிகளாக மாறிவிட்டனர். அவர்களின்

ஆக்கிரமிப்பு எண்ணம் மாறி வந்தவழியே திரும்பிவிட்டனரென்றால், மேலும் நாம் நண்பர்களாகவே மதிப்போம்! ஜனநாயக ரீதியில் முன்னேறிவரும் நம்மீது பொறாமை கொண்டும், அங்குள்ள உள்நாட்டுக் குழப்பத்தை சமாளிக்கவும் இன்று நம் நாட்டின் மீது படையெடுத்திருக்கிறது சர்வாதிகாரச் சீனா! இன்றைய சந்தர்ப்பத்தில், நாம் கட்டுப்பாட்டுடன், வடக்கு—தெற்கு—கிழக்கு—மேற்கு என்பன போன்ற நடைமுறைக்கு ஒவ்வாத வாய்ப்பேச்சுக்களை ஒழித்துக்கட்டி, மாற்றானுக்கு தேசபக்தியின் இலக்கணத்தைத் தெளிவுடன் கற்றுக்கொடுக்கவேண்டும்! நம்முடைய தியாகத்தீயின் முன்னால் பேராசை வெறியர்கள் பொசுங்கி சாம்பலாக வேண்டும்!

விரைவிலேயே நானும் எனது தோழர்களும் உதவிப் படையாகப் பணியாற்ற போர்முனைக்கு அழைக்கப் படுவோம்! அங்கு பாரதத்தின் பண்பை பறைசாற்றுவோம்! மாற்றானை முறியடிக்க நம் வீரர்களுக்கு சகல தொண்டுகளையும் வீர உணர்ச்சியொடு செய்வோம்!

நம் நாட்டின் இன்றைய நெருக்கடியான நிலையில் உள்நாட்டு வியாபாரிகளான எனது சகோதரர்களைப்-பெரியோர்களை கரம் கூப்பி வேண்டி, ஒரு வேண்டுகோள் விடுக்கிறேன். பாரத மாதாவின் புதல்வர்களே, இந்நாட்டைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பில் மூன்றில் ஒரு பங்கு உங்களுடையது! அதை உணர்ந்து பதுக்கி வைக்கும் பெருச்சாளி மனப்பான்மையை விட்டு, தியாக சீலர்களாக விளங்குங்கள். நாடுதான் முதன்மையானது! விவசாயிகளே, தொழில் அதிபர்களே, கடுமையாக உழைத்து உற்பத்தியைப் பெருக்குங்கள்! பாரத நாடு நம் தாய்த் திருநாடு. அதன் சுதந்திரமே நமது வாழ்வு, இந்த உண்மையை நாம் உணர்ந்து செயலில் இறங்கினால், நாளையே சீனாக்காரர் நம் எல்லையை விட்டு ஓடிவிடுவார்கள் என்பது உறுதி. இப்பொழுதே நம் ஒற்றுமை கண்டு, எழுச்சி கண்டு கலங்கி விட்டான் நம் விரோதி. இந்த எழுச்சி மேன்மேலும் விரி

வடையட்டும் என்று கூறி, என் சொற்பொழிவை முடித்துக்கொள்கிறேன்!

'பட பட பட' என்ற கைபொலிகளுக்கிடையேயும், "வாழ்க பாரதம்! வாழ்க பாரதம்! வாழ்க வீரர் திருக்கூட்டம்! வாழ்க வேணு!" என்ற வாழ்த்தொலிகளுக்கு இடையேயும் வீராவேசமான சொற்பொழிவை நிறுத்திவிட்டு அமர்ந்தான் வேணு!

சண்முகத்தின் முடிவுரைக்குப்பின், சபாபதியின் நன்றியுரையுடன் கூட்டம் முடிய, மக்கள் ஒவ்வொருவரும் உணர்ச்சிப் பிழம்பாகக் கலந்தனர்.

# 21 அழைப்பு வந்தது

"இந்தியா மீது சீனா யுத்தமே தொடுத்துள்ளது" நிலைமை குறித்து பிரதமர் நேரு விளக்கம்.

நிதானத்துடன் திடமாக சமாளிக்க அழைப்பு.

"நமது துருப்புகளின் எதிர்ப்பு வலுக்கிறது. சீனத் தாக்குதல்கள் முறியடிக்கப்பட்டன."

"ஒரே மூச்சில் எட்டு சீனரை வீழ்த்திய இந்திய வீரரின் தீரம் ..........." பத்திரிகைகளின் தலைப்புச் செய்திகளைப் பார்த்தே உணர்ச்சி வயப்பட்டு படித்துக்கொண்டிருந்தான் வேணு.

அவன் உள்ளத்தில் பலவிதமான போராட்டங்கள். அதன் விளைவால் உருவாகும் திட்டங்கள் .. .......... 'நம் நாட்டில், முதன் முதலில் செய்யவேண்டியது, சர்க்கார் ஊழியர்கள் அத்தனை பேருக்கும் கட்டாய ராணுவப் பயிற்சி அளிக்கவேண்டும். பல பட்டங்களை வாங்குவதற்கு

எத்தனையோ வருடங்களைச் செலவிடும்போது அதோடு, இரண்டு வருட ராணுவப் பயிற்சியும் வேண்டும், என்ற தகுதியை ஏற்படுத்தவேண்டும். அதனால், நாட்டைப் பாது காக்கவேண்டிய முறைகள் தெரிவதோடு, வாழ்க்கையிலும் ஒழுங்கும், நேர்மையும், கட்டுப்பாடும் தாமாகவே அமைந்து விடும், செய்யும் பணிகளில் சுறுசுறுப்பும் உண்டாகும்.'

இந்தியர்கள் அத்தனை பேருமே நம் பாரதப் பிரதமரை போல் தன்னலமற்ற தியாகிகளாக, ஒவ்வொருவரும் பிற ருக்காக—தாய் நாட்டிற்காக உழைக்க முற்பட்டுவிட்டால் இந்த உலகில் நம்மை எதிர்க்க யாரால முடியும்? ... . , என்பன போன்ற பல திட்டங்கள் ஒரு பக்கம் உருவாக, அதோடு பத்திரிகையை ஊன்றி படித்துக்கொண்டிருந் தான்.

'சீனருக்கு உதவும் ஐந்தாம் படையினருக்கு மரண தண்டனை'' என்ற தலைப்பைப் பார்த்ததும் அவன் உள்ளம் கொந்தளிக்கத் தொடங்கியது. செ! நம் நாட்டில் இன்னுமா எட்டப்பர் கூட்டம்? ஆண்டவனே, இந்தியாவுக்கு—என் தாய் திருநாட்டிற்கு இதுவும் ஒரு சாபமா? இந்த மண்ணில் எப்படித்தான் துரோகிகளும் சோம்பேறிகளும் பிறந்து விட்டனரோ! என்று எண்ணி ஏங்கினான்.

''வேணு, சீனப்பிரதிநிதி காரியாலயம் முன் ஆர்ப்- பாட்டமாம்!''

திடீரென்று சபாபதியின் குரல் கேட்கவே தன் ஏக்கத் தினின்றும் விடுபட்டுத் திரும்பிய வேணு, ''சபாபதியா, வா, உட்காரு.'' என்று வரவேற்றபடி ''எங்கே ஆர்ப்பாட் டம்?'' என்ற கேள்வியைப் போட்டான்!

''பம்பாயில் ஆயிரத்திற்கு மேற்பட்ட நம் மக்கள் நேற்று கொதித்தெழுந்துவிட்டனர்''! என்று கூறியபடியே அருகில் கிடந்த நாற்காலியில் அமர்ந்தான் சபாபதி.

"நடக்கட்டும், பாவம் சினக்காரன் ஏமாந்துவிட்டான்! என்னவோ நினைத்து எங்கேயோ வந்துவிட்டான்! இந்தியா பல மொழி பேசும் தேசம்தானே! பல ஜாதியர்கள் வாழும் நாடுதானே, பல கட்சிகள் வளரும் இடம்தானே! என்றெல்லாம் எண்ணி, தன் ஆசையை நிறைவேற்றிக்கொள்ள தனக்கு சாதகமாகக் கற்பனை செய்துகொண்டு நுழைந்து விட்டான். வந்த பின்புதான் தெரிகிறது! ஆயிரம் உண்டிங்கு ஜாதி எனினும் நீ இங்கு வருவது என்ன நீதி? மரியாதையாக வெளியேறு! என்று முழங்கும் பாரத மக்களின் முழக்கம் அவன் காதுகள் வழியாகப் பாய்ந்து, மூளையைக் கலக்கியபின்புதான் தெரிகிறது 'தெரியாமல் வந்துவிட்டோமே' என்று. பாரதம் இனிமேலும் ஒரு அன்னியனுக்கு அடிமைப் பட்டு வாழும், என்று நினைத்தானே அறிவு கெட்டவன்! அவனுக்கு ஆண்டவன்தான் நற்புத்தி புகட்டவேண்டும்!" உள்ளக் குமுறலை சொற்களாக்கிப் படைத்தான் வேலு

"ஆண்டவன்தான் நமக்கு உதவியாக நின்று அந்த பேராசைச் சீனருக்குப் புத்திபுகட்டச் சொல்கிறான்! அதற்கான சந்தர்ப்பமே இது........ நான் இப்பொழுது எதற்கு வந்தேன் தெரியுமா?"

"எதற்கு வந்தாய்?"

"அடுத்த வாரமே நாம் டெல்லிக்குப் புறப்பட வேண்டும். நமக்கு அழைப்பு வந்துவிட்டது. அதைத் தெரிவிக்கவே இப்பொழுது வந்தேன். நம் தலைவர் உன்னிடம் உடனேயே தெரிவிக்கப் பணித்தார். நேற்று காலை இங்கிருந்து காயமடைந்த வீரர்களுக்குத் தொண்டுசெய்ய பல பெண்கள், புறப்பட்டிருக்கிறார்கள்!' செய்தியைத் தெரிவித்தான் சபாபதி.

"சபாபதி, நீ வாழ்க! காத்திருந்த நமக்கு வாய்ப்பு கிடைத்துவிட்டது! முதலில், உரிமைப்போர் தொடுக்கும் நமது வீரர்களுக்கு உதவும் பணி; அடுத்து, ஒருசில வாரங்களில் நாமும் நன்றாகப் பயிற்சிபெற்று போர்முனையில்

முன்னணியில் பணியாற்றலாம். அடுத்த வாரம் கண்டிப்பாகப் புறப்படுவோம்!' வீராவேசமாகப் பேசினான் வேணு.

"ஆமாம், உன் வீட்டிற்குச் சென்று விபரத்தைக் கூறி விட்டு வந்துவிடு" என்றான் சபாபதி.

"அதுவும் சரிதான். இப்பொழுதே நான் புறப்படுறேன்" என்றான் வேணு

வேணு புறப்படுவதற்கான ஆயத்தங்களை செய்ய, தம்மோடு டெல்லிக்கு வரவிருக்கும் மற்றைய தோழர்களை சந்தித்துவர வெளியில புறப்பட்டான் சபாபதி.

# 22 புதுமைப் பிரயாணம்

காலை மணி பத்து அடித்து ஓய்ந்தது! டெல்கியில் பெரிய சர்க்கார் ஆஸ்பத்திரியினுள் ஒரு தனி அறையில் சுமார், இருபத்திஐந்து இளம் பெண்கள் — வீராங்கனைகள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களில் சுமார் பதினைந்து பெண்களுக்கு எல்லாமே புதிய அனுபவங்களாக விளங்கின! அலைகளின் அறிகுறியாக, பிரம்மாண்டமான ஆஸ்பத்திரியைச் சுற்றிச்சுற்றி அவர்களின் கண்கள் சுழன்றன! அப்படி திகைப்பும், ஆச்சரியமும் மேலிட 'திரு திரு' வென்று விழித்துக்கொண்டு நின்ற பெண்களில் நம்முடைய சகுந்தலாவும் ஒருத்தி!

சகுந்தலாவா? டெல்கி ஆஸ்பத்திரிக்கு எப்படிப் போய்ச் சேர்ந்தாள்? ஏன் அங்கு சென்று திகைத்து நிற்க வேண்டும்? என்ற கேள்விகள் உங்கள் உள்ளத்தில் எழுகின்றன அல்லவா? இதோ அதற்கான பதில்—

அன்னிய ஆக்கிரமிப்பை எதிர்த்து வேணுவின் தலைமையில் நடைபெற்ற ஊர்வலத்தில் கலந்துகொண்ட சகுந்தலா,

மக்களின் உணர்ச்சி வெள்ளத்தை கண்டும், உரிமை முழக்கத்தை கேட்டும் புது வேகம் பெற்றிருந்தாள். அதோடு அன்று மாலை வேணுவின் சொற்பொழிவையும் கவனமாகக் கேட்டாள். அதிலிருந்து அவள் மனதில் தேசியப்பற்று கொழுந்துவிட்டெரியத் தொடங்கியது. பாரதத்தைப் பாதுகாக்கத் தன் உயிரையும் விடத் தீர்மானித்தாள். 'செ, என்னுடைய உயிரை வீணாகக் கடலிலோ, ரயிலிலோ விழுந்து போக்கிவிட நினைத்தேனே. என்றால், இந்த நாட்டிற்குத் தொண்டு செய்ய முடியும் என்பதையும் மறந்துவிட்டேனே!' என்று எண்ணி தன் தற்கொலை முடிவுக்கு வெட்கப்பட்டாள்.

•

வேணு பேசிக்கொண்டிருக்கும்பொழுதே அவள் மனதில் இத்தகைய எண்ணங்கள் உருவாகிக்கொண்டிருந்தன. அதே வேளையில், மேடையில் ஒரு நாற்காலியிலிருக்கும் சண்முகத்தையும் கண்டாள். உடனே தன் மனதிற்குள் ஓர் தீர்மானம் செய்தாள்.

அத்'தீர்மானத்தின்படி சொற்பொழிவு முடிந்ததுமே சண்முகத்தை நேரில் கண்டாள்.

எதிர்பாராத விதமாக சகுந்தலாவைக்கண்ட சண்முகம் சற்று திகைத்துவிட்டான். எங்கேயோ போகவேண்டுமென்று கூறி, எழும்பூர் ரயில் நிலையத்திற்கு வழி கேட்டவள் அல்லவா இவள்! என்ற எண்ணம் அவனது திகைப்பை அதிகப்படுத்தியது.

சண்முகத்தின் திகைப்பைக்கண்ட சகுந்தலா, தான் ஒரு அனாதை என்றும், இந்திய ராணுவத்திற்குத் தொண்டு செய்ய விரும்புவதாகவும் கூறினாள்.

அவள் கடமையுணர்ச்சியைக்கண்ட சண்முகம் மிகவும் மகிழ்ச்சியடைந்து, பெண்கள் பாதுகாப்பு தொண்டர் படைக்குழுவில் சேர்த்து 'நர்ஸ்' பயிற்சிபெற டெல்லிக்கு அனுப்பிவைத்தான்.

அப்படி வந்த இடத்தில்தான், சகுந்தலா, ஆஸ்பத்திரியைக் கண்டு—அதன் பிரம்மாண்டமான கட்டிடங்களையும், அங்கு குறுக்கும் நெடுக்குமாக விரைந்து செல்லும் டாக்டர்களையும் கண்டு திகைத்து நின்றாள்.

சகுந்தலாவைப் போன்று புரியாமல் நிற்கும் பிறபெண்களுக்கு, அவர்களுடன் வந்த—நன்றாகப் படித்த பிறபெண்கள் டெல்லியைப்பற்றியும், அந்த ஆஸ்பத்திரியைப் பற்றியும் விளக்கிக்கொண்டிருந்தார்கள்.

டாக்டரின் அறையிலிருந்து, வெண் உடை தரித்த ஒருவர் வந்து எல்லோருடைய பெயர்களையும் அறிந்து சென்றார்.

மறுபடியும் பத்து நிமிடங்களுக்குப் பிறகு, ஒவ்வொருவருடைய பெயர்களையும் கூறி அழைக்க எல்லோரும் அந்த அறைக்குள் சென்றனர்.

அங்கு ஆஜானுபாகுவாக உட்கார்ந்திருந்த ஒருவரைப் பார்த்து, தன் பக்கத்தில் நின்ற படித்த பெண்ணிடம், "இவர் யார்?" என்று கேட்டாள் சகுந்தலா.

"இவர் தான் பெரிய டாக்டர். பிறகு மற்ற விபரங்களெல்லாம் சொல்கிறேன். நாம் இங்கு பயிற்சி பெற்ற பிறகு, போர்முனைக்கு-சேவைசெய்ய செல்ல வேண்டும்!" என்று மெதுவாகப் பதில் சொன்னாள் அந்த படித்த பெண்.

எல்லாம் புரிந்துவிட்டதுபோல் தலையை அசைத்தாள், சகுந்தலா.

# 23 வாய்விட்டுச் சிரித்தார்கள்

மனிதருள் மாணிக்கம்—பாரதப் பிரதமர்—பஞ்சசீலத்தாலும், நடுநிலைக் கொள்கையாலும் பாரதத்தின் பண்பாட்டு ஒளியை உலக முழுவதும் பரப்பி, நேர்மையைப்

பிரகாசிக்கச் செய்வதுபோல், விரிந்த தன் ஒளிமையான செங்கதிர்களை உலக முழுவதும் பரப்பி, மக்களைத் துயிலெழச்செய்து கடமையை நினைவுறுத்திக்கொண்டிருந்தான் செங்கதிர்ச்செல்வன்!

பாரதத்தின் பண்பு ஒளி கண்டு அகம் விரிந்து மகிழும் நேச நாடுகளைப்போல் ஆதவனின் ஒளி கண்டு அகமகிழ்ந்து விரிந்தன தாமரை மலர்கள்!

பஞ்சசீலம், நடுநிலைமை எனும்—நல்ல கொள்கைகள் பிடிக்காத சீனா போன்ற எதேச்சாதிகார நாடுகள் சீறி விழுவதைப்போல், ஆதவனின் ஒளிக்கிரணங்களால் தங்கள் பிழைப்புக் கெட்டுவிட்டதே என்று அஞ்சி அலறி ஞாயிறின் ஒளிக்கதிர்களை வெறுத்து, இருள் குகைகளை நாடி ஓடின ஆந்தைக் கூட்டங்கள்!

வீடுகளின் முற்றத்தில் வளரும் ரோஜாக்களின் இதழ் விரிய வண்டினங்கள் தேன் உறிஞ்சிக்கொண்டிருந்தன! வண்டுகளின் ரீங்காரம் கண்ட தென்றல், ரோஜா செடிகளைச் சற்று அசைத்து, அதிலுள்ள நறுமணத்தை முகர்ந்துகொண்டு பாரதத்தின் பண்பை உலகத்திற்குப் பரப்பி உலகை இன்ப உணர்வில் திளைக்க வைக்கும் ஒளி விளக்கு பிரதமர் நேருஜியைப்போல் சென்ற இடமெல்லாம் நறுமணத்தைத் தெளித்துச்சென்றது!

இத்தகைய இயற்கைக் காட்சிகளை ரசித்தபடி, சிவஞானபுரத்திற்குச் சென்ற—தன் நண்பன் வேணுவைத் தேடி வந்துகொண்டிருந்தான்-சபாபதி! காரணம்? நாளையே, வேணுவும்—சபாபதியும் அவர்கள் குழுவுடன் டெல்லிக்குப் புறப்படவேண்டும். அதற்காக, அங்கிருந்து வந்த அழைப்பையும் கையோடு எடுத்துக்கொண்டே சிவஞானபுரத்திற்கு வந்துகொண்டிருந்தான்.

வேணுவின் வீட்டுப்பக்கம் வந்ததும், வாயிலில் நின்ற சிதம்பரநாதனு சபாபதியைக் கண்டு வரவேற்றார்!

"வேணு இல்லையா?" என்று கேட்டபடியே, சிதம்பர–நாதனுக்கு வணக்கம் செலுத்திவிட்டு உள்ளே வந்தான் சபாபதி!

"இல்லை, ஏதோ......தொண்டர்ப்படை சேர்க்கிறீர்களாமே! அதற்காகப் பக்கத்துக் கிராமத்திற்குப் போயிருக்கிறான்". என்றார் சிதம்பரநாதன்! அதோடு, "எல்லோரும் எப்படி இருக்கிறது? புதிதாக ஏதாவது செய்தி உண்டுமா?" என்ற கேள்வியையும் ஆர்வத்தோடு கேட்டார்!

"உம், இருக்கிறது. இன்றைய பத்திரிகையில், தூத்துக்குடியிலிருந்து ஒரு வீரர்—பாரத சுதந்திரத்தைக் காப்பாற்றுவதற்காக, சீன அரக்கனின் துப்பாக்கிக் குண்டுக்குப் பலியானதாகச் செய்தி வந்திருக்கிறது". வருத்தத்தோடு கூறினான் சபாபதி!

ஆனால், அதைவிட வருத்தம் தோய்ந்த குரலில், 'ஐயோ, கடவுளே!" என்ற சொற்கள் உள்ளிருந்து கேட்டன.

குரல் வந்த திக்கில் சபாபதியின் பார்வை திரும்பியது. அங்கே சாரதா நின்றாள்.

"உங்களுக்கே இத்தனை ஏக்கம் என்றால், எங்களைப் போன்றவர்களுக்கு எப்படி இருக்கும்?" சாரதாவின் முகத்தைப் பார்த்தபடியே கூறினான் சபாபதி.

"ஏன் எங்களுக்கு உணர்ச்சி இருக்காதா? அல்லது நாட்டுப்பற்று கிடையாதா? ஆண்களைவிட பெண்களுக்குத் தான் நாட்டுப்பற்று அதிகம். இது தற்பெருமை அல்ல. சரித்திரம் காட்டும் உண்மை"! சற்று முன் இருந்த ஏக்கம் மாறி வீர உணர்ச்சி மிளிர்ந்தது சாரதாவின் சொற்களில்!

'சாரதாவைப்பற்றி உங்களுக்கு சரியாகத் தெரியாது! அவள் ஒரு ஆணாகப் பிறந்திருந்தால், இதற்குள் வட எல்லையில் ஒரு போர் வீரனாகக் காட்சியளிப்பாள்! அத்தனை ஆர்–வம் அவளுக்கு. பத்திரிகைகளில் வரும் செய்திகளை ஒரு

வரி விடாமல் படித்துவிட்டு என்னிடம் எத்தனை கேள்விகள் கேட்பாள் தெரியுமா? மூன்று நாட்களுக்கு முன் அவளுடைய ஐந்து பவுன் சங்கிலியை பாதுகாப்பு நிதிக்காக என்னிடம் தந்து, உடனே அனுப்பி வையுங்கள்! என்று என்னை ஓட-ஓட விரட்டிவிட்டாளே!'' உண்மையிலே தன் மகளின் நாட்டுப்பற்றை பாராட்டி, கம்பீரமாக பேசினார் சிதம்பரநாதனு!

''அதுதான் உண்மையான நாட்டுப்பற்று. உலகத்தின் எங்கோ ஒரு மூலையில் நடக்கும் போட்டிகளில் ஒரு தமிழன் அல்லது ஒரு இந்தியன் வெற்றியடைந்தானென்றால் இங்குள்ள நாம் பூரிப்படையவில்லையா? சாரதாவுக்கு இளகிய மனம். அதோடு, தமிழ்ப்பற்றும், பாரதநாட்டுப்பற்றும் நிறைந்திருக்கிறது! நீங்கள் கொடுத்துவைத்தவர்கள். இரு பிள்ளைகளும் இரு மணிகளாக இருக்கிறார்கள்!'' சிதம்பர-நாதனுவைப் பாராட்டிப் பேசினான் சபாபதி.

இந்த வேளையில், ''ஐயா—ஐயா!'' என்ற அழைப்புக் குரலுடன் ஒருவன் வீட்டிற்குள் வந்தான்.

அவனைப் பார்த்த சிதம்பரநாதனு, என்னப்பா சுந்தரம் என்ன விஷயம்? என்று ஆவலோடு விசாரித்தார்.

''நம்ம சஞ்சீவி ஐயா உங்களை உடனே கூட்டிவரச் சொன்னாங்க; வடக்குத் தெருவில் ஆத்மனுகரும் ஐயாசாமியும் பெரிய சண்டை போட்டுட்டாங்க. அவங்க ரெண்டு பேரும் சஞ்சீவி ஐயா முன்னாலே நிக்குறாங்க. பஞ்சாயத்து கூடியிருக்குது. உங்களை சீக்கிரமா..............'' என்று இழுத்தான் வந்தவன்.

''வெளை விழுந்திட்டுதா? இந்த தடிப்பயல்களுக்கு எவ்வளவு சொன்னாலும் புத்தி வராது. ஒரு கிராமத்தில இருக்கிறதே நூறு வீடுகள் தான். இவங்களுக்குள்ளேயே ஒற்றுமையில்லாமல் இப்படி சண்டை போட்டால் நாடு எப்படி உருப்படும்? எப்படித்தாம் அந்த காந்திமகான் இந்தியா முழுவதையும் ஒன்றுபடுத்தினாரோ!'' வருத்தம்

தோய்ந்த குரலில் கூறிவிட்டு, சபாபதியையும், சாரதாவையும் பார்த்து 'சரி, இதோ நான் போய்விட்டு வருகிறேன். சஞ்சீவிதான் பஞ்சாயத்துத் தலைவர் அவர் அருகில் எப்போதும் நான் இருக்கவேண்டும்!'' என்றபடியே வந்தவனுடன் புறப்பட்டார் சிதம்பரநாதனார்.

குறிப்பறிந்த சாரதா, ஓடிச்சென்று கதவின் மேல் துண்டை எடுத்துக் கொடுத்தாள். சிரித்துக்கொண்டே, 'எனக்குத் தேவையானதை நான் சொல்லாமலே செய்துவிடுவாள். அந்த அளவில் நான் பாக்கியசாலி!'' - என்று சபாபதியிடம் தன் மகளுக்கு ஒரு புகழ்மாலை சூட்டிவிட்டு, சாரதாவைப் பார்த்து, சீக்கிரமா காப்பி போடு என்று உத்திரவு பிறப்பித்தபடியே துண்டை உதறி தோளில் போட்டுக்கொண்டு விரைந்து நடந்தார் சிதம்பரநாதனார்.

சாரதா சமையல்கட்டிற்குப் போனாள். தனியாக இருந்த சபாபதிக்கு ஒன்றுமே ஓடவில்லை. நிமிடங்கள் பறந்தன. ஆனால் சாரதாவைக் காணவில்லை.

பொறுமையிழந்த சபாபதி, உள்ளே பார்த்தபடியே, "ஏதாவது புத்தகம் இருக்கிறதா?'' என்று உரக்க முழங்கினான்.

சபாபதியின் குரல் கேட்டு, புள்ளிமான்போல் துள்ளி ஓடிவந்தாள் சாரதா. கொடியின் அசைவையும், கொழிக்கும் அழகையும், துடிக்கும் இளமையையும், துள்ளும் விழிகளையும் சாரதாவிடம் கண்ட சபாபதி, தன்னை மறந்து அவளையே பார்த்துக்கொண்டிருந்தான்.

"என்ன! என்னவோ கேட்டீர்களே!" என்ற சாரதாவின் குயிலோசை கேட்டுத் திடுக்கிட்ட சபாபதி 'ஆமாம் புத்தகம் ஏதாவது புத்தகம் .......'' என்றான்.

"புத்தகம் கேட்டுவிட்டு இப்படிப் பார்த்துக்கொண்டிருந்தால்?''.

“மன்னித்துவிடு சாரதா! அழகான பெண்களே ஒரு அபூர்வ புத்தகமல்லவா? அதிலும் உன்னைப்போல் பேரழகுப் பெண்கள் ஆயிரம் புத்தகங்களுக்குச் சமம். அந்த புத்தகங்களிலிருந்து எண்ணற்றக் கருத்துக்களைத் தெரிந்து கொள்ளலாம். பிறகு அவைகளை வைத்தே எத்தனை புத்தகங்கள் வேண்டுமானாலும் எழுதலாம்.” உண்மையிலேயே கவிஞனாகிவிட்டான் சபாபதி

“போதும்—போதும்! நிறுத்துங்கள், இப்பொழுது உங்களுக்கு ஒரு புத்தகம்தானே வேண்டும்? இதோ வருகிறேன்.” வெடுக்கென்று கூறிவிட்டு, உள்ளே சென்று ஒரு புத்தகத்தை எடுத்துக்கொண்டு வந்து, சபாபதியின் முன் வைத்தாள் சாரதா.

“வீரக் கண்ணகி” என்ற அந்த புத்தகத்தையும் அதை எடுத்து வந்த சாரதாவையும் மாறி-மாறி பார்த்தபடியே பூவை எடுப்பதுபோல், புத்தகத்தைக் கையில் எடுத்தான் சபாபதி. சாரதா மறுபடியும் உள்ளே சென்றுவிட்டாள்.

சபாபதி புத்தகம் படிக்கத் தொடங்கினான் அவன் கை விரல்கள் ஒவ்வொரு பக்கமாகத் திருப்பிக் கொடுத்துக் கொண்டிருந்தன. புத்தகத்தில் கண்ட கருத்துக் குவியல்களை அவன் மனம் அள்ளிப்பருகிக்கொண்டிருந்தது,

‘டக்!’ என்ற ஒலி கேட்டு, திரும்பினான் சபாபதி.

முத்துப் பல் வரிசை சற்றே ஒளி வீச, மோகனப் புன்னகை பூத்து, பொற்கொடிபோல் நின்றாள் சாரதா.

சபாபதியின் திகைப்பையும், அவன் கண்களில் தோன்றிய ஆவலையும் கண்டு, “என்ன! திகைத்து விட்டீர்கள்?” என்றாள் சாரதா. அவள் குரலில் அடக்கமும், அன்பும் இழைந்தோடியது. அவள் நின்ற தோரணையே சபாபதியின் உள்ளத்தை அள்ளிக்கொண்டது.

“திகைப்பும் இல்லை ........ ஒன்றுமில்லை” கூறும் போதே சொற்கள் நடுக்கி நர்த்தனமாடி வெளிவந்தன.

"ஒன்றுமில்லை என்றால் சரிதான், முதலில் காப்பியை அருந்துங்கள், ஆறி—குளிர்ந்துவிடப் போகிறது" வாய் கூறும்போதே கண்கள் காப்பியிருந்த இடத்தைக்காட்டின.

"வீணாக இப்போ காப்பி எதற்கு", என்று எல்லோரையும் போலவே கூறிவிட்டு, காப்பியை ஒரு மடக்கு குடித்தான். உடனே சாரதாவின் முழு நிலா போன்ற முகத்தைப் பார்த்து, "ஆகா" என்றான்.

"என்ன?" அதிர்ச்சியடைந்தவளாக நடித்தாள் சாரதா.

"பதறாதே! அழகாக இருக்கிறது......, நான் அதிர்ஷ்ட சாலி" என்றான் சபாபதி.

"எது அழகாக இருக்கிறது"?

"உம்...காப்பி...இல்லை .." சபாபதி தயங்கினான்.

"ஏன் தயங்குகிறீர்கள்? சொல்லுங்கள் ..." சாரதா துரிதப்படுத்தினாள்

"சொன்னால் கோபித்துக்கொள்ளமாட்டாயே"

"எனக்குக் கோபம் வருகிற அளவுக்கு ஏன் சொல்கிறீர்கள்?"

சாரதாவின் இந்த பதிலை அவன் எதிர்பார்க்கவில்லை. "கோபம் வராது சும்மா சொல்லுங்கள்" என்ற பதிலையே சாரதாவிடமிருந்து எதிர்பார்த்தான். ஆனால் சொல் மாறி விட்டது. என்ன நினைத்தானோ 'மட - மட' வென்று காப்பியைக் குடித்துவிட்டுக் குவளையைக் கீழேவைத்தான் சபாபதி.

"எதையோ சொல்வதாக அறிவித்தீர்களே!" விடாப்பிடியாகக் கேட்டாள் சாரதா.

"............சொல்கிறேன், ஆனால்.................." சபாபதியின் நிலைகண்டு சாரதா இரங்கினாள்.

"கோபித்துக்கொள்ளமாட்டேன் தைரியமாகச் சொல்லுங்கள்." இரங்கிய உள்ளத்தின் எதிரொலி குழைவான வார்த்தைகளாக வெளிவந்தன.

"உண்மையாகவா சாரதா?"

"சத்தியமாக............கோபமே வராது" சத்தியமே செய்து கொடுத்துவிட்டாள் சாரதா. இனிமேல் தயக்கமேன்? எதிர்பார்த்த பதில் கிடைத்துவிட்டது. சபாபதிக்குத் துணிவும் வந்தது.

"சாரதா, முதலில் ஒரு கேள்வி. அதற்கு நீ பதில் சொன்ன பிறகு நான் எண்ணியதை உனக்குச் சொல்லுவேன்.

"தெரிந்தால் பதில் சொல்வேன். கேளுங்கள்".

சபாபதி கேள்வி கேட்கத் தொடங்கினான். "அன்பு அதிகரித்தால்?"

"சொற்கள் வெளிவருவதில்லை".

"டக்'கென்று சொல்லிவிட்டாயே! உடனே சொல்லிவிடுவாய் என்று நினைக்கவேயில்லை"

'எல்லாம் நினைப்பது போன்று நடக்கிறது?"

"உண்மைதான் சாரதா. நீ அழகாகப் பதில் சொல்கிறாயே!"

"அழகாகப் பேசுவது இருக்கட்டும். நீங்கள் சொல்வேன் என்று சொன்னதை இதுவரைக்கும் சொல்லவில்லையே?"

"சொல்வதற்கு என்ன இருக்கிறது? என்னையே நான் பறிகொடுத்து நிற்கும்போது.........உண்மையிலேயே உன் முகத்தைப் பார்த்துத்தான் அழகாக இருக்கிறது என்றேன்." துணிந்து கூறிவிட்டான் சபாபதி.

"உண்மையாகவா?" ஆச்சரியப்படுவதுபோல் நடித்தாள் சாரதா.

"எனக்குப் பொய் சொல்லிப் பழக்கமில்லை சாரதா!"

"இதுவே ஒரு பொய்தானே!........." கொல்லென்று சிரித்தபடியே கூறினாள் சாரதா. சபாபதியும் அசடுவழிய கூடவே சேர்ந்து சிரித்தான்.

"உன்னிடம் பேசவே முடியவில்லையே!"

"அன்பு அதிகமாகிவிட்டது. சொற்கள் வெளிவர மறுக்கிறது."

"உண்மைதான் சாரதா, உனக்குப் பேச..........."

"எனக்கு நன்றாகப் பேச வருகிறது." அவன் பேசி முடிக்கும் முன்பே பதில் கொடுத்தாள் சாரதா.

"அப்படியானால் உன் இருதயத்தில் என்னிடம்......... அன்பு.........?" அதற்கு மேல் சபாபதியால் பேச முடியவில்லை

சற்றுநேரம் இருவரிடையேயும் அமைதி நிலவியது.

சபாபதியால் மௌனமாக இருக்கமுடியவில்லை. "சாரதா!.........ஏன் அமைதியாகிவிட்டாய்? உன் வெண்கலக்குரல் எங்கே மறைந்து கொண்டது? குற்றாலம் அருவி போல் கல கலவென ஒலிக்குமே உன் சிரிப்பொலி எங்கே? ஆனந்தமாகப் பேசிக்கொண்டிருக்கும்பொழுதே திடீரென்று எதையாவது கூறி, என்னை திகைப்பில் ஆழ்த்தி விடுகிறாயே! உன்னைப் புரிந்துகொள்ளவே முடியவில்லை. ...............என்றாலும் என்னையாவது நீ புரிந்துகொள். வெளிப்படையாகவே கூறுகிறேன், பிறகு உன் விருப்பம். .........நீ என்னைப்பற்றி எப்படி எண்ணியிருந்தாலும் சரி. என் மனம் எப்பொழுதும், ஆவின் மடி நோக்கும் கன்று போல்—மலரை வலம் வரும் வண்டுபோல் உன்னையே சுற்றிச்சுற்றி வட்டமிடுகிறது. ஆனால் எத்தனை தரம் சுற்றி

வந்தாலும் உன் மனதை அறியும் சக்தி என் மனதிற்கு இல்லை! ஒரு சமயம் என்னை விரும்புவதாக எண்ணி மகிழ்கிறது; ஆனால் அந்த மகிழ்ச்சி உணர்வு விரிவடையுமுன்பே திடீரென்று ஏமாற்ற அதிர்ச்சியால் தாக்கப்படுகிறது...... முடிவில் செய்வதறியாது திண்டாடுகிறது......ஏன் சாரதா? நான் பேசிக்கொண்டே இருக்கிறேன் நீ.........இப்படி புதுமையாக நிற்கிறாயே...........நான் ஏதாவது தவறாகக் கூறிவிட்டேனா? உன் அமைதி என்னை கொன்று அடிக்கிறது. ..............நீ எனக்கு கிட்டாத பொருளாகிவிடுவாயா?" உணர்ச்சி வசப்பட்டு வார்த்தைகளை உதிர்த்தான் சபாபதி அவன் குரலில் ஏக்கம் பிரதிபலித்தது.

அவன் ஏக்கத்தை உணர்ந்த சாரதா, "அதோ அப்பா வருகிறார்கள்!" என்றாள்.

திடுக்கிட்டுத் திரும்பிய சபாபதி, பார்வையை எட்டிய மட்டும் செலுத்தி, அந்த தெருமுனை வரைக்கும் பார்த்தான்.

களுக்'கென்று சிரித்தாள் சாரதா! அப்பொழுதான் தன் ஏமாற்றத்தை உணர்ந்தான் சபாபதி. "மறுபடியும் என்னை ஏமாற்றி கொன்று அடித்துவிட்டாயே!" என்றான். அவன் குரலில் உயிரும் இல்லை; உணர்ச்சியும்

"நீங்கள் ரொம்பவும் பயந்தவர்கள்" என்றாள் சாரதா.

"ஆமாம், உன் விஷயத்தில் மட்டும். மற்றபடி பொதுவாக நான் தைரியசாலிதான் ............. அது சரி, என் எண்ணத்தை நான்?..........." சபாபதி பேச்சை முடிக்கவில்லை.

"எண்ணியது போல் எல்லாம் நடந்துவிடுமா?" எதிர்க் கேள்வி போட்டாள் சாரதா.

"நடக்காதா?..........................அப்படியானால், என்மீது உனக்கு........."

"ஏன் தயங்குகிறீர்கள். நடக்காது என்றோ, அன்பு இல்லை என்றோ நான் சொன்னேனோ? நடக்குமா? என்று தான் கேட்கிறேன்." ஒரு விதத்தில் சபாபதிக்கு உயிர்ப் பிச்சை கொடுப்பதுபோல் தன் இதயத்தை—எண்ணத்தை சற்றே வெளிப்படுத்தினாள் சாரதா!

சபாபதிக்குப் புது உற்சாகம் பிறந்தது. "சாரதா! கண்டிப்பாக நடக்கும். உன் எண்ணம் அறியாவே ஏங்கி நின்றேன். இனி யாருமே நம்மை பிரிக்க முடியாது. நம் காதல் மலர் பூரணமாக மலர்ந்து நாலா திசைகளிலும் நறு மணம் பரப்பும்! பூங்கொடியாள் உன் பொற்கரத்தை நான் பற்றிவிட்டால், என் வாழ்வில் புது ஒளி பிறக்கும்" கூறி முடித்ததும், போதை தலைக்கேறியவன் போல் சாரதாவை நெருங்கினான் சபாபதி.

அதற்குமேல் சில நிமிடங்கள் இருவராலும் பேச முடிய வில்லை சாரதாவின் கண்களில் நீர் மல்கி, கீழே விழுவதற்கு முட்டி — முயற்சித்துக்கொண்டிருந்தது. அது ஆனந்த கண்ணீரா.........அல்லது?.........சிந்திக்க நேரமில்லை.

சபாபதியே பேசத்தொடங்கினான்.

"சாரதா, நானும் உன் அண்ணாவும் நாளையே நம் வட எல்லைக்குப் போகிறோம். நீ தைரியமாக இருக்கவேண்டும்" என்றான் சபாபதி.

"அத்தான்! என் இரு கண்களுக்கு சமமான நீங்களும், அண்ணாவும் தேசத்திற்குத் தொண்டாற்றப் போகிறீர்கள். பாரதத்தின் பண்பைக் காப்பாற்றும் வீரர்களுக்குச் சொல் லுங்கள், பாரதமே உங்கள் பின் உங்களுக்காக எந்தவித தியாகமும் செய்யக் காத்திருக்கிறது என்று சொல்லுங்கள். முக்கியமாக பெண்கள் அத்தனை பேரும் வேண்டுமென்று லும் மாற்றானை முறியடிக்க சகலவித தியாகமும் செய்யக் காத்திருக்கிறார்கள் என்று ஆணையிட்டுச் சொல்லுங்கள்!

எதிரியை முறியடித்து, உலக அரங்கில் நம் பண்பை ஒளி-விடச்செய்ய உதவுங்கள்". உணர்ச்சி வசப்பட்டு பேசினாள் சாரதா.

"சபாஷ்! சாரதா, நீ வாழ்க! மங்கையர்த்திலகமே, உன்போன்ற மாதரசிகளால்தான் பாரதத்தின் வீரம் சிறக்கிறது........." சபாபதி பேசிக்கொண்டிருக்கும்பொழுதே திடீரென்று, அதோ அண்ணா! என்று பதறிக்கொண்டு கூறிய சாரதா, இமை கொடிக்குள் சமையலறைக்குள் சரணடைந்தாள்.

மின்னலாக மறைந்த சாரதாவின் வேகம் கண்டு திகைத்த சபாபதி, தெருப்பக்கம் திரும்பிப்பார்த்தான். உண்மையாகவே வேணு வந்துகொண்டிருந்தான்.

நொடிப்பொழுதில் தன் பதட்டத்தை சரி செய்து கொண்டு, புத்திசாலித்தனமாக அருகிலிருந்த புத்தகத்தை எடுத்து, நடுப்பக்கத்தை திறந்து, சுவாரஸ்யமாகப் படிப்பது போல் நடித்துப் படிக்கத்தொடங்கினான்!

சபாபதியின் அருகில் வந்து நின்ற வேணு, சற்று நேரம் அமைதியாக நின்று கவனித்தான். ஒன்றுமே அறியாதவன் போல்—புத்தகத்தில் ஆழ்ந்திருப்பது போல் நடித்தான் சபாபதி.

"அடேயப்பா! தோழருக்குத் திடீரென்று படிப்பில் இவ்வளவு அக்கரை பிறந்து விட்டதே!" என்ற வேணுவின் குரல் கேட்டு, அப்பொழுது தான் பார்ப்பது போல் திடுக்கிட்டு, "ஏய் வேணு, நீ எப்பொழுது வந்தாய்? நான் கவனிக்கவே இல்லையே! புத்தகத்தின் உயர்ந்த கருத்துக்கள் என்னை அப்படியே மெய்மறக்கச் செய்துவிட்டன!" என்றான் சபாபதி.

நண்பர்கள் இருவரும் தங்களுக்குள் எதையோ மறைத்துக்கொண்டு வாய்விட்டுச் சிரித்தார்கள்.

# 24 திருந்தியவன் தேடினன்

நண்பன் ஆறுமுகத்தின் நல் உபதேசத்தால் மனம் திருந்திய மணி, சென்னைக்கு வந்தான்.

'சகுந்தலாவைக் காணவேண்டும், அந்த அன்பு தெய்-வத்திடம் மனம் விட்டுப் பேசி, மன்னிப்புக் கேட்க வேண்டும், தன் இல்வாழ்க்கையைப் புதுமையாக—ஆனந்தமாகத் தொடங்கவேண்டும்!' என்பன போன்ற ஆசை எண்-ணங்கள் ஆவேசமாக அவன் மனதில் கொழுந்து விட்டெ-ரிந்து கொண்டிருந்தன.

தொடர்ந்து, 'சகுந்தலா அவளுடைய கிராமத்திற்கே போய்விட்டாளா? அல்லது நம் வீட்டிலே தான் இருக்கிறாளா?............ வேதனை பொறுக்காமல் வேறு எங்கேயாவது போய்விட்டாளோ? அல்லது வாழ்க்கையையே வெறுத்து விட்டாளோ!.........' என்றெல்லாம் தனக்குள்ளேயே எண்ணி-எண்ணி வேதனை அடைந்தான் மணி.

பிறகு, 'செ-செ' அப்படி ஒன்றும் நடந்திருக்காது. எப்படியும் சகுந்தலாவை வீட்டிலேயே காணலாம். என்ற நம்பிக்கை உணர்வும் அவன் உள்ளத்தின் ஒரு மூலையிலி-ருந்து வளர்ந்தது.

"நீயும் உன் மனைவியும், இணைந்து ஆனந்தமாக வாழ்க்கை நடத்தவேண்டும் இருவருமாகச் சேர்ந்து இங்கு வந்து ஒரு வாரம் தங்கிச் செல்லவேண்டும். அந்த காட்-சியை நான் காணவேண்டும்!" என்று அன்பொழுகக் கூறிய ஆறுமுகத்தின் சொற்கள் மணியின் இதயத்தைச் சுற்றி வட்டமிட்டன.

சென்னைக்கு வந்த மணி, முதன் முதலாக தான் வேலை பார்க்கும் பத்திரிகை காரியலயத்திற்கு வந்தான்.

பாரதத்தின் வடக்கெல்லையில் புயல் கிளம்பிவிட்டதல்லவா? "புயல் பத்திரிகை ஆசிரியர், அப்பொழுது புயலாக வேலை செய்துகொண்டிருந்தார். தன் முன்னால்—மேசைமீதிருந்த காகிதக் கட்டுகளை திருப்பிப் பார்ப்பதும், அங்குமிங்குமாக அலைகளைப் புரட்டிப்போடுவதுமாக-அவசரமாக எதையோ தேடிக்கொண்டிருந்தார்.

சற்று நேரம் அவருடைய பரபரப்பைக் கவனித்துக் கொண்டிருந்த மணி, அவருடைய தலை நிமிர்ந்ததும், "வணக்கம்" என்றான்

கூர்ந்து பார்த்த ஆசிரியர், யாரு, மணியா? வா'ப்பா வா! நலந்தானே! என்று-சற்று கிண்டலாகவே இழுத்தார்.

"மன்னிக்கவேண்டும். அவசரத்தில்.........தங்களிடம் கூட சொல்லாமல்........"

"எனக்கு எல்லாம் தெரியும். விளையாட்டாகத்தான் கேட்டேன். வருந்தாதே, இப்படி உட்காரு. மனிதனுக்கு மனக்கவலையும், அந்தக் கவலையை சமாளிக்க முடியாத போது ஆத்திரமும் வருவது இயல்புதான். ஆனால் நிதானம் இழந்து விடாமல் நடப்பதுதான் அறிவுடைமை. பல நாட்களாகப் புகைந்துகொண்டிருந்த உங்கள் இருவர் மனங்களும் அன்று திடீரென்று நெருப்பாகப் பற்றி எரிந்து விட்டன! ........என்னதான் இருந்தாலும் நீ இப்படி மிருகத்தனமாக நடந்துகொள்வாய் என நான் எதிர்பார்க்கவேயில்லை. உன்னையே நம்பி வந்த உன் மனைவியை கைநீட்டி அடித்து துன்புறுத்தியதுமல்லாமல் நிராதரவாக விட்டுப்போக நீ எப்படித்தான் துணிந்துவிட்டாயோ! அவள் பெண்ணாகப் பிறந்ததினால்தானே உன்னிடம் உதை வாங்கினாள்"? வெந்த புண்ணில் வேல்கொண்டு குத்துவதுபோல், ஏற்கனவே நொந்துபோயிருந்த மணியின் உள்ளத்தை துளைத்தார் ஆசிரியர்.

அந்த துன்பத்தைப் பொறுக்கமுடியாமல் "தயவு செய்து என்னை ஒன்று சொல்லாதீர்கள். நான் மிகவும்

கலங்கியிருக்கிறேன். உடனே சகுந்தலாவை காணத்துடிக்கிறேன்." என்று மன்றாடினான் மணி.

"கண்கெட்டபின் சூரிய நமஸ்காரமா? நீ வீட்டை விட்டு வெளியேறிய அன்று இரவே யாருக்கும் தெரியாமல் வெளியேறிவிட்டாள் — சகுந்தலா! பேரிடியைத் தூக்கிப் போட்டார் ஆசிரியர்.

அதைத் தாங்கமுடியாமல் தடுமாறினான் மணி. இருந்த இடத்திலிருந்து துள்ளி எழுந்தான். அவன் மன நிலையைப் படம் பிடித்துக் காட்டியது முகம்.

"அதிர்ச்சி அடையாதே மணி! சிறியமுளையில் இருந்து தான் பெரிய மரம் உண்டாகிறது. சின்ன விஷயம் பெரிய விளைவை ஏற்படுத்தி விட்டது. ஆத்திரம் எல்லோருக்கும் ஏற்படும். ஆனல் நாம் அதற்கு அடிமை ஆகாமல், அதை அடிமையாக்கவேண்டும்."

"என்னுடைய கோபம் தான் என் நிம்மதியைக் கொடுத்தது!" குற்றத்தை மனமார ஒப்புக்கொண்டான்

"கோபத்தை அடக்கி, காற்றோடு கரைத்து விட்டுவிட வேண்டும். கோபத்தை அடக்குவது சுலபம், சினத்தை அடக்குவதுதான் சிரமம்!"

ஆசிரியர் பேச்சு மணிக்கு விளங்கவில்லை! கேள்விக்குறியோடு அவரை நிமிர்ந்து பார்த்தான்.

"உனக்குப் புரியவில்லையே? கோப உணர்ச்சி எதையாவது கேட்டமாத்திரத்தில், சட்டென்று தோன்றி, தோன்றிய மாதிரியே மறைந்து விடும். சினம், அப்படிப்பட்டதல்ல, மூளையைத் தாக்குவதோடல்லாமல், உள்ளத்தையும் கவர்ந்து கொண்டு எழுகிறது. உள்ளம் எழுந்து ஓங்கும் சினம், காத்துக்கொள்ளும் குணமே குணமெனக!" என்ற பாடல் நீ அறியாததா?

கோபம் — சினம் இரண்டிற்கும் வேறுபாடு உண்டு. உனக்கு ஏற்பட்டது சினம். உள்ளத்தின் கொந்தளிப்பு. இப்போது அது அடங்கி விட்டது சகுந்தலாவைப் பற்றி பயப்பட ஒன்றுமில்லை. அவள் கண்டிப்பாகக்கிராமத்திற்குத் தான் சென்றிருப்பாள். அவளிடம் அன்பு ஏற்பட்டதும், அவள் பிரிவு உனக்கு துன்பத்தைத் தருகிறது இது இயற்கையின் நியதி.'' அழகாக ஒரு அறிவு விளக்க உரையாற்றினார் ஆசிரியர்.

அவர் கொடுத்த காப்பியைக் குடித்துவிட்டு, அவரிடம் விடைபெற்றுக் கொண்டு, "சகுந்தலாவோடு வருவேன்!" என்றுகூறி வெளியேறினான் மணி.

ரயிலில் வரும்போது இருந்த நிம்மதிகூட இப்போது இல்லை. 'பலவிதமான அவல கற்பனைகள் உருவெடுத்து, மணியை வருத்தின. கிராமத்திற்குப் போகலாமா?......... ஒருக்கால் சகுந்தலா அங்கு போயிருக்காவிட்டால்?......... அக் கிராம மக்கள் எல்லோருமே என் முகத்தில் அறைவார்களே! அவள் அங்குதான் இருக்கிறாள் என்பதை நிச்சயமாக அறிந்துகொள்ளாமல் எப்படி போவது?'

இருளின் ஊடே மின்னல் தோன்றுவது போல்-துன்ப நினைவுகளினூடே, வேணுவின் உருவம் பளிச்சிட்டது! வேணுவின் நினைவு மணிக்கு சற்று நிம்மதியைக் கொடுத்தது. 'சகுந்தலா கிராமத்திலிருப்பதையும் இல்லாததையும், வேணுவிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம்;' எனத் தீர்மானித்து, வேணுவைக் காண முனைந்தான் மணி.

மனக் குழப்பத்தோடு வெகுதூரம் நடந்துவிட்டான். மனம் சற்று நிம்மதி அடைந்ததும், கால்கள் நோவதையும், தாகம் வரட்டுவதனையும் உணர்ந்தான். அருகிலிருந்த கடைக்குச் சென்று குளிர்பானம் அருந்தி, சற்று இளைப்பாறிவிட்டுத் திரும்பினான்.

'சகுந்தலாவை எப்படிக் கண்டுபிடிப்பது? வேணு எங்கே இருப்பான்? என்பன போன்ற கேள்விக்குறிகள் தூண்டில்களைப்போல் அவன் உள்ளத்தை சுண்டி இழுக்க, தன்னை மறந்தபடியே' நடுவீதியில் நின்றான்.

"ஏ! சாமி. நடு ரோட்டில் நின்னுக்கினேன்னு எப்ப-படிங்க? எமலோகம் மேலே டிக்கட் வாங்கினியா?" சென்னையில் ரிக்ஷாக்காரன் பேசும் "மரியாதை"யான பேச்சு இது. நடு ரோட்டில் நின்ற மணிக்கு அவன் பேச்சு அதிர்ச்சியை உண்டுபண்ணவில்லை! 'எமலோகத்திற்கு மேலே மற்றொரு லோகம் இருக்கிறதா?' என்று எண்ணிக்கொண்டே நின்ற இடத்தினின்றும் நழுவி சாலை ஓரமாக நடந்தான்.

மணி, சகுந்தலாவுக்காக—வேணுவைத் தேடி நடக்கட்டும் அதற்கு முன்பாக நாம் சகுந்தலாவைப் பார்த்து வருவோம். நமக்குத்தான் அவள் இருக்கும் இடம் தெரி-யுமே. ...............ஆமாம்; பாரதத்தின் வட எல்லைக்குப் போவோம்! என்ன, வட எல்லைக்கா? என்று......திகைக்க வேண்டாம். சகுந்தலாவையும், நம் வேணு, சபாபதியை-யும் பார்த்து வருவோம்.

ஆமாம், வேணுவும் சபாபதியும் தற்பொழுது சிவ ஞானபுரத்திலோ, சென்னையிலோ இல்லை. சுமார் ஐம்பது பேர் கொண்ட ஒரு தொண்டர்படைக்குத் தலைமை தாங்கி அணியாகமாக ஆக்கிரமிக்கும் சீனரை அடித்துத் துரத்தும் நம் கடமை வீரர்களுக்குத் தொண்டு புரிகிறார்கள். வேணுவும் அவன் குழுவும் இப்பொழுது இருக்கும் இடம்-பாரதத்தின் வடக்குத் திசை—நேபா பிரதேசம், வாலாங் பகுதி. அப்டியென்றால் போர் நடக்கும் இடமல்லவா? என்கிறீர்கள் அப்படித்தானே? ஆம்! அங்குதான் நாம் இப்பொழுது செல்லவேண்டும்.

# 25 உரிமைப் போர்.

அதிகாலை நேரம்தான். ஆதவன் உதித்தாலும் இருள் முற்றிலும் அகலவில்லை குளிர் விலகவில்லை. ஆதவனுக்கு அஞ்சி ஓடாத குளிர், வெறும் ஆயுதங்களின் பலத்தை மட்டுமே நம்பி பாரதத்தை எதிர்க்கும் பண்பற்ற சீனனைப்போல், பனிக்கட்டிகளின் துணைகொண்டு ஆதவனின் கிரணங்களை எதிர்த்துக்கொண்டிருந்தது.

பனிப்பாறைகள் உருகி வெள்ளிப்பாளங்களைப்போல் ஆறுகளாகப் பாய்ந்துகொண்டிருந்தன. அத்தகைய குளிரிலும் பறவைகள் துயிலெழுந்து ஆர்ப்பரிக்கும் ஒலி மிகுந்தன.

யாத்ரீகன் பசிவந்ததும் கட்டுச் சோற்றை அவிழ்ப்பது போல், கிரணங்களைக் கண்டு இதழ் விரித்தன மலர்கள். இவைகள் தான் வாலாங் பகுதியின் எழிற்கோலச் சுருக்கம்.

இயற்கை அன்னையின் அருளால் அமைதி தவழும் இத்தகைய இடத்தில்தான் திடீரென்று, 'டுமீல்! டுமீல்! டுமீல்!' என்ற துப்பாக்கி ஒலிகளும், இடி விழுந்தாற் போன்ற பீரங்கி முழக்கங்களும் அலறத்தொடங்கின.

உரிமையைக் காக்க கடமையுணர்ந்து போராடும் நம் படைகள் ஒரு புறமும், ஏதேச்சாதிகாரத்தால் மக்கள் பண்பையே மறந்து, அறத்திற்கே சாவுமணி அடிக்கத் துணிந்து நிற்கும் உலக விரோதி சீனனின் நயவஞ்சகப் படைகள் மறுபுறமுமாக நின்று ஆயுதங்களின் முழக்கத்தை அதிகப் படுத்திக் காட்டினார்கள்.

பாரதப் படைகளின் பாரிசத்தில் ஆக்கிரமிப்பாளர்கள் தந்திரமாக வரமுயற்சித்தார்கள். அங்குள்ள சில மலைக் குன்றுகளை சாதகமாக்கிக்கொண்டார்கள், குள்ளநரிகளின் வாரிசுகளான சீனர்கள் பூனைபோல் பதுங்கிப்பதுங்கி வந்தார்கள். ஒவ்வொருவருடைய கரத்திலும் குண்டுகளை வெளியில் கக்குவதற்குத் தயாரான துப்பாக்கிகள் இருந்தன.

ஆனால் எதிரிகளின் நடபடிக்கைகளை முன்னேற்பா-டாகக் கவனித்துக்கொண்டிருந்த பாரதப் படைவீரர்கள் இரையைக்கண்ட புலியாக அந்தப் புல்லர்களின் மீது பாய்ந்தார்கள். கடமை வீரர்களின் துப்பாக்கிகள் எதேச்சாதிகார — ஆக்கிரமிப்பாளர்களின் மீது குண்டுகளைப் பொழிந்தன.

உதவிப் படையில் பணியாற்றிய வேணுவும் அவன் நண்பர்களும், நல்ல முறையில் பயிற்சி பெற்று இப்பொழுது முன்னணி ராணுவ வீரர்களாக விளங்கினார்கள்.

பாரதப் படைகளின் முன்னிற்க முடியாமல் ஓட்டம் பிடித்தன சீனப்படைகள். ஆனால் அதற்குள் பத்துக்கும் மேற்பட்ட சீன ஆக்கிரமிப்பாளர்கள், உயிர் துறந்து பிண மாகக் கீழே விழுந்தனர்.

பாரதப் படை வீரர்கள் மறுபடியும் எதிரிகளை முறி யடிக்க ஆயுத்தமானார்கள்.

அதற்குள் மேலும் ஒருமுறை எண்ணிக்கையில் மிகக் கூடுதலான சீன சிப்பாய்கள் திரண்டுவந்து பீரங்கிகளாலும் துப்பாக்கிகளாலும் தாக்க ஆரம்பித்தனர்.

எத்தனை பீரங்கிகள் வந்தால் என்ன? பாரதத் தாயின் வீரப் புதல்வர்கள், எதிர்த்துத் தாக்கினார்கள். குண்டுகளின் முழக்கம் வானைப் பிளந்தன. மரங்களிலிருந்த பறவை இனங்கள் பதறி அடித்துக்கொண்டு பறந்து சிதறின.

சுமார் முப்பது நிமிடங்கள் வரை கடமைக்கும்-எதேச் சாதிகாரத்திற்கும் போர் நடந்தது. ஆம்! அறத்திற்கும் அனியாயத்திற்கும் போர் நடந்தது. அனியாயச் சீனர்களில் அதிகமானோர் பிணமாயினர்.

பெரு மழை பெய்து விறைத்தாற்போல் போர் நடந்த இடத்தில் சில வினாடிகள் அமைதி நிலவியது

காயமடைந்த பாரத வீரர்களைக் காப்பாற்ற விரைந்-தது உதவிப்படைகள். ஆம்புலன்ஸும் விரைந்து வந்தது.

வேணுவும், சபாபதியும் தம் பக்கத்தில் காயமடைந்து கிடந்தவர்களை பாதுகாப்புப் படைக்குத் தெரிவித்தார்கள்.

எதிரிகளின் துப்பாக்கிக் குண்டுகள் மறுபடியும் பறந்து வந்தன. பீரங்கிகளை முழக்கினார்கள்.

• பதிலுக்குப் பாரதப் படையும் எதிர்த்துத் தாக்கியது. தொடர்ந்து ஒரு புறத்தில்-வேணுவின் அருகில், "பாரத மாதாவுக்கு ஜே! வாழ்க இந்தியா!" என்ற சொற்கள் வீரமாக முழங்கி முடிவில் மெதுவாக ஒலித்தன.

பாரத வீரர்களின் கடுமையான தாக்குதல்களுக்கு இலக்கான செஞ்சீன ஆக்கிரமிப்பாளர்களில் பிணமானவர்கள் போக எஞ்சியிருந்தோர் சிதறி ஓடினர்.

சற்று முன் தன் அருகில் முழங்கிய வீர முழக்கம் பழக்கமான குரலாகப் படவே, எதிரியை விரட்டி அடித்த வீரர்களில் ஒருவனான வேணு, முழக்கம் வந்த திக்கை நோக்கி பார்வையைச் செலுத்தினான்.

அவன் கண்கள் ஆச்சரியத்தால் அகல விரிந்தன. உள்ளம் கொதித்தது. "சண்முகம்! சண்முகம்!" என்று ஆவலோடு அழைத்தான்.

கண்களைத் திறந்து, புன்முறுவல் பூத்த சண்முகம், "வீரத்தின் சின்னம் என் உடம்பில் பதிந்துவிட்டது. தொடர்ந்து முன்னேறுங்கள், எதிரி ஓய்வு கொடுக்கிறானே என்று மெத்தனமாக இருக்கக் கூடாது. அவன் உஷாராகி வருவதற்குள் நாம் தாக்கவேண்டும் என்னைப் பற்றி எண்ணவேண்டாம்'' என்றான்.

அப்போது அருகில் வந்துநின்ற ஆம்புலன்ஸ் காரில் வந்த உதவிப் படை வீரர்கள், சண்முகத்தையும் காரில் சேர்த்தார்கள். வேணுவும் உடன் நின்று காரை அனுப்பினான். கார், தேஜ்பூர் நோக்கி விரைந்தது.

சண்முகத்தைத் தூக்கி எடுக்கும்போது அவனுடைய இடதுபுறத்தில் பட்ட குண்டுக்காயங்களைக் கவனித்தான்

எதிரிகள் நேரில் சுடவில்லை. இடது பக்கத்தில்—எங்கேயோ மறைவிலிருந்து தாக்கியிருக்கிறார்கள் என்பதை உணர்ந்தான். அப்படித் தாக்கியவர்கள் கண்டிப்பாக அதிக தூரம் சென்றிருக்க முடியாது என்றும் உறுதி செய்தான்

உடனேயே, சபாபதி, மற்றும் ஒரு சிலருடன் அந்தத் திக்கு நோக்கி ஓடினான்.

'வேணு எண்ணியது வீண்போகவில்லை. குள்ளநரிகளைப் போல் சுமார் ஐம்பது சீனர்கள், பெரிய பள்ளத்தாக்கில் பனிக்கட்டிகளுக்கிடையில் பதுங்கியிருந்தனர். வேணுவின் ஆவேசம் அளவுகடந்தது.

வேணு செய்கை காட்ட, கூடவே வந்திருந்த பாரத வீரர்கள் ஐந்து பேரும், துப்பாக்கியைக் குறிவைத்து தாக்கத் தொடங்கினார்கள் பாரத மக்களின் எண்ணத்தை வேகத்தை சீனருக்கு அறிவிக்க விரைவதுபோல், பறந்து சென்ற துப்பாக்கிக் குண்டுகளினால், முதல் தாக்குதலிலேயே பதினைந்துக்கும் மேற்பட்ட சீனர்கள் பிணமாயினர். எஞ்சியிருந்த ஆக்கிரமிப்பாளர்கள் பலமாகத் தாக்கினார்கள். பாரத வீரர்களில் மூன்று பேர் வீர மரணமடைந்தார்கள். அதற்குள் ஆக்கிரமிப்பாளர்களின் எண்ணிக்கை பெரு-மளவில் குறைந்துவிட்டது. பத்துபேர்களே அங்கு இருந்தார்கள்.

வேணுவும், சபாபதியும் துணிச்சலுடன் போராடினார்கள். வேணுவிடமிருந்த ஆயுதங்கள் தீர்ந்தன. அதைக் கவனித்த சபாபதி, "ஆயுதங்கள் தீர்ந்து விட்டன. நம் படைகளுக்குத் தகவல் கொடுத்துவிட்டு ஆயுதங்களை எடுத்துவருவோம்". என்று மெதுவாகச் சொன்னான்.

'வேண்டாம், நீ மட்டும் போ! தாயகத்திற்காகத் தம் இன்னுயிர் கொடுத்த வீரர்கள் இதோ கிடக்கிறார்கள். அவர்களிடமிருந்த ஆயுதத்தை நான் எடுத்துக்கொள்கிறேன். நீ போய் வா!" என்று கூறி சபாபதியை அனுப்பினான் வேணு

பாரத வீரர்களின் பக்கமிருந்து சற்று நேரம் குண்டுகள் வராமலிருப்பதை உணர்ந்த—மறைந்திருந்த ஆக்கிரமிப்பாளர்கள் (அதாவது மிஞ்சியிருந்த பாக்கி பத்துபேர்கள்) மெதுவாக முன்னேக்கி அடியெடுத்துவைத்தார்கள்.

வேணுவும், சபாபதியும் பேசிக்கொண்டிருந்ததால், துப்பாக்கி வேலைசெய்யவில்லை ஆனால் சபாபதி சென்றதும் வலதுபுறமுள்ள இடுக்கு வழியாக முன்பக்கம் பார்த்த வேணு, வீரஉணர்ச்சி எழ, பக்கத்திலகிடந்த வீரனின் துப்பாக்கியை எடுத்துக்கொண்டு, வேறொரு பக்கமாகச் சென்று எதிரிகளைக் குறிவைத்தான்.

துப்பாக்கியைத் தூக்கி பிடித்தபடியே வந்துகொண்டிருந்த பத்து சீன ஆக்கிரமிப்பாளர்களும் வசமாக வந்த உடன், வேணுவின் துப்பாக்கியிலிருந்து குண்டுகள் 'படீர்! படீர்!' எனப் பறந்தன. இரண்டு குண்டுகளில் இரண்டு சீனர்கள் பாரதமாதாவுக்கு பலியாகினர். தப்பிய எட்டு சீனரும் பதுங்கினர்.

மறுபடியும் துப்பாக்கித் தாக்குதல்கள் ஆரம்பமாயின. தன் கையிலிருந்த ஆயுதம் தீர்ந்துவருவதை உணர்ந்த வேணு, சுடுவதை நிறுத்தி சும்மா இருந்தான்.

'துப்பாக்கியில் ஒன்றுமில்லை போலும்.' என எண்ணி பதுங்கியிருந்த சீனர்கள் வேணு மறைந்திருந்த இடம் நோக்கி விரைந்தனர்.

அருகில் வந்ததும் 'குபீர்' என எழுந்தான் வேணு. 'பட! பட!' வென சுட்டுத் தள்ளினான். வேணுவின் திடீர் தாக்குதலினால் அதிர்ச்சியடைந்து அந்த இடத்திலேயே ஐந்து சீனர்கள் பிணமாயினர்.

மிஞ்சிய மூவரும் புறங்கால் முதுகில் அடிக்க, பனிக் கட்டிகளின் மீது ஓடி மறைந்தனர்.

ஓடும் போதும், வேணு சுட்டுப்பார்த்தான். ஆனால், அவன் துப்பாக்கியில் ஒரு குண்டுகூட இல்லை. நல்ல காலம் குண்டுகள் தீர்ந்தபிறகுதானே ஓடுகிறார்கள்.' என்று எண்ணிய வேணு, தன் இடத்திற்குச் செல்ல எண்ணி திரும்பினான்.

அதற்குள் எண்ணற்ற பாரத வீரர்களும் படைத் தளபதியும் அவன் அருகில் வந்துவிட்டார்கள். வேணுவின் வீரம் கண்டு பூரிப்படைந்து, வேணுவைப் பெரிதும் பாராட்டினார், தளபதி.

எல்லா வீரர்களும் தங்களின் தங்குமிடத்திற்கு விரைந்தனர்.

---

# 26 தியாகத்துள் தியாகம்



சுற்றிலும் பச்சை பசேல் என்ற தேயிலைத் தோட்டங்களும், நீண்ட முக்கோண வடிவமான மரங்களும் அழகு படுத்த அமைதி நிறைந்த இடமாக விளங்கியது தேஜ்பூர்.

தேயிலைத் தோட்டங்களைச் சுற்றிலும் ஒரு விதமான — புதுமையான மரங்களும் நிற்கின்றன.

கிட்டத்தட்ட சவுக்கு மரங்களைப் போல் நீண்டு உயரமாக வளருகின்றன. இம்மரங்களை புதுமையானது எனக் குறிப்பிட்டது ஏன் தெரியுமா? பச்சை மரத்தை வெட்டி, நெருப்பு வைத்தால் உடனேயே 'குப்' என்று பற்றி எரியும். இங்குள்ள மக்கள் தொகை ஐம்பதினாயிரந்தான். குளிர் காய்வதற்கும், சமைப்பதற்கும அவர்கள் இந்த மரங்களைத் தான் உபயோகப்படுத்துகிறார்கள். அத்துடன் மாட்டுச் சாணியையும் சேர்த்துக் கொள்வதுண்டு. இந்த இன மீரங்களை பனி இல்லாத இடங்களில் பயிர்செய்தால் வளராததோடு இரண்டே நாட்களில் அழிந்துபோகும். அதிக அளவு பனியுள்ள மிக உயரமான பிரதேசங்களிலேயே இம்' மரங்கள் செழித்து வளருகின்றன. இதுவும் இயற்கையின் திருவிளையாடல்களில் ஒன்றுதானே.

இத்'தகு சூழ்நிலையில் அமைந்து விளங்கும் தேஜ்பூரில் இருக்கும் ராணுவ ஆஸ்பத்திரியில் அன்று சற்று கூடுதலாகவே பரபரப்பு காணப்பட்டது

தாய்த் திருநாட்டின் பாதுகாப்பிற்காகப் போர்க்களத்தில் ஆக்கிரமிப்பாளர்களை விரட்டியடித்து, குண்டுக்காயங்களை வெற்றிப் பரிசுகளாக ஏற்றுக்கொண்ட பாரத வீரர்கள் வரிசையாகக் கட்டில்களில் படுத்திருந்தனர்

'எப்போது குணமடையும்? மறுபடியும் களத்திற்குப் பாய்ந்து சென்று மண் ஆசை வெறி கொண்டோர்களை முறியடிப்பது எப்போது? விரைவில் குணமடைய வேண்டுமே நம் நாட்டின் பெருமையைக் காப்பாற்ற வேண்டுமே, ..................என்பன போன்ற எண்ண அலைகளே பாரத வீரர்களின் உள்ளங்களில் கொழுந்து விட்டெரிந்தன.

இயந்திரம் போல் விரைந்து பணியாற்றிக்கொண்டிருந்தாள் சகுந்தலா! ஆம், மருத்துவப் பயிற்சிபெற்று, பாரத வீரர்களுக்கு பணியாற்ற எப்போதோ-தேஜ்பூர் ஆஸ்பத்திரிக்கு வந்துவிட்டாள் சகுந்தலா!

திடீரென்று கேட்ட பிரேக் ஒலி, கார் வந்த வேகத்தை ஆஸ்பத்திரி முழுவதுக்கும் அறிவித்தது.

எல்லோரையும் போல், சகுந்தலாவும் வெளியில் எட்டிப்பார்த்தாள். ஆம்புலன்ஸ் வந்து நிற்க, பல வீரர்களை அதினின்றும் இறக்கிக்கொண்டிருந்தார்கள்!

தேவைக்கேற்றபடி, துரிதமாக சிகிச்சைகள் நடக்கலாயின.

'நர்ஸுகள்' பலர் கும்பலாக சிகிச்சை நடைபெறும் இடத்திற்கு விரைந்தனர்.

வீரர்கள் ஒவ்வொருவரையும் கவனித்துக்கொண்டுவந்த சகுந்தலா, திடீரென்று அதிர்ச்சியடைந்துவிட்டாள்! பார்த்த வீரனையே மறுபடியும் பார்த்தாள்! மேலும் அந்த முகத்தை உற்றுப்பார்த்தாள். அவனுக்கே சிகிச்சை மும்முரமாக நடந்துகொண்டிருந்தது.

அதிர்ச்சியடைந்த சகுந்தலாவின் மனம் 'சண்முகம் ......ஆம், சண்முகமேதான். உனக்குப் பலவித உதவிகளைச் செய்த அதே சண்முகம்தான்!' என்று இடித்துச்சொல்லி அலட்டியது.

"நர்ஸ், உடனே இரத்தம் கொண்டுவா," டாக்டர் கட்டளையிட்டார்.

அந்தக் கட்டளையை சிரமேற்தாங்கி ஓடினாள் சகுந்தலாவின் அருகில் நின்ற ஒரு நர்ஸ்.

'இரத்தம் செலுத்திவிட்டால் உடனே பிழைத்துக் கொள்வார்'. சகுந்தலாவின் மனம் சற்றே திருப்தி அடைந்தது.

"டாக்டர், இருந்த இரத்தமெல்லாம் தீர்ந்துவிட்டதாம். இப்பொழுதுதான் தீர்ந்ததாம்". சென்ற வேகத்தைவிட கூடுதலான வேகத்தில் ஓடிவந்து கூறினாள், இரத்தம் எடுக்கச்சென்ற நர்ஸ்.

டாக்டர் சிந்தித்தார். ஏதோ ஊசிகள் போட்டார்.

"டாக்டர் என்னிடமிருந்து இரத்தம் எடுங்களேன்", திடமாகக் கூறினாள் சகுந்தலா,

சற்று ஆச்சரியத்தோடு, அவள் முகம் நோக்கினார் டாக்டர்.

"உண்மைதான் டாக்டர், என்னிடமே எடுங்கள். காலம் செல்கிறது. யோசிக்க வேண்டாம்". சகுந்தலாவின் சொற்களில் இப்பொழுது அதிக உறுதி இருந்தது.

"ஆல் ரைட், உம்! சீக்கிரமாக எடுங்கள்". டாக்டர் சம்மதிக்க, அருகில் நின்ற ஊதவி டாக்டர், அதற்கான ஏற்பாடுகளைச் செய்தார்.

சகுந்தலாவின் இரத்தம், சண்முகத்தின் உடலில் செலுத்தப்பட்டது.

அதற்குள் இரவும் சூழ்ந்தது.

சண்முகம் படுத்திருந்த கட்டிலின் அருகில் இருந்தாள் சகுந்தலா.

"ஏன் சகுந்தலா, எனக்காக உன் இரத்தத்தைக் கொடுத்தாய்? உனக்கு நான் பிழைப்பேன் என்ற நம்பிக்கை இருக்கிறதா?" விரக்தியோடு கேட்டான் சண்முகம்.

"அண்ணா அப்படியெல்லாம் சொல்லாதீர்கள். நீங்கள் பிழைக்கவேண்டும். உங்களைப்போன்ற வீரர்கள் இறக்கவே கூடாது. நான் இறந்தாலும் இன்னொரு நர்ஸ் வந்தால் போதும். ஆனால் உங்களைப் போன்ற வீரர்கள் இன்னமும் அதிகப்பேர் தேவையாயிருக்கிறதே."

"சகுந்தலா பாரத நாட்டில் வீரர்களுக்கா பஞ்சம். வீரத்தின் விளைநிலமே பாரதம்தான். உலகம் அறியும் இந்த உண்மையை ஏன் சீனாவுக்கும் தெரியும். ஆனால் இனிமேல்தான் உணரப்போகிறார்கள்".

"அண்ணா! நீங்கள் அதிகம் பேசக்கூடாது. நீங்கள் எனக்கு செய்த உதவிகளுக்கு, நான் இரத்தம் கொடுத்தது ஒரு பிரம்மாதமா.? அதைப் பற்றி கவலைப்படாதீர்கள். நன்றாக உறங்குங்கள்".

"ஆகட்டும். என்று கூறி, தலையை அசைத்தான் சண்முகம்".

சகுந்தலாவும் எழுந்து சென்றாள்.

உண்மையிலேயே இரத்தம்கொடுத்தபிறகு அவளால் சுறுசுறுப்பாக இருக்கமுடியவில்லை. தலைசுற்றுவதுபோல் இருக்கவே, சண்முகத்தைத் தூங்கச்சொல்லிவிட்டு, தானும் தூங்குவதற்காகச் சென்றாள்.

படுக்கையில் படுத்ததுமே, சகுந்தலா நன்றாகத் தூங்கி விட்டாள்.

ஆஸ்பத்திரியிலிருந்த சுவர்க் கடிகாரம், பாரதவீரர்களை எதிர்த்து தினமும் அழியும் சீனர்களின் எண்ணிக்கையைப் போல், ஒன்பது பத்து, பதினொன்று......... என்று கூடி பன்னிரெண்டும் அடித்து ஓய்ந்தது.

இரவு வேலைபார்க்கும் நர்ஸுகளும், டாக்டர்களும், விழித்துக்கொண்டிருந்தனர். குறைந்த வெளிச்சத்தில் ஒன்றிரண்டு விளக்குகள் எரிந்துகொண்டிருந்தன.

நர்ஸுகள் நடக்கும்போது எழும் பாதரட்சைகளின் ஒலியும், ஊளைக்காற்றின் ஒலியும் அங்கு நிலவிய அமைதியைக் குலைக்கவில்லை.

"அதோ, சீனாக்காரன் உம் துப்பாக்கி.........எத்தனை பேர்வந்தாலும் சுட்டுத்தள்ளுவேன் ..... பாரதநாட்டுக்காக என்உயிரையும் கொடுப்பேன்......!" திடீரென்று கட்டிலில்இருந்து எழுந்து முழங்கிக்கொண்டே ஓடினான் சண்முகம்!

படுக்கையினின்றும் துள்ளி எழுந்தாள் சகுந்தலா. சண்முகம் துப்பாக்கிபிடித்த பாவனையில் ஓடுவதைக் கண்டாள். உடல் தள்ளாடியதையும் பொருட்படுத்தாமல் சண்முகத்தைப் பின்பற்றி ஓடினாள்.

எதிர்பாராதவிதமாக அருகில்கிடந்த கட்டிலின் கால், விரைந்து செல்லும் அவள் கால்களைத்தடுக்க, மருந்துகுப்பிகள் வைக்கப்பட்டிருந்த அலமாரியில் மோதி, 'படீ'ரென கீழே வீழ்ந்தாள்!

டாக்டர்களும் நர்ஸுகளும் ஓடிவந்து, சகுந்தலாவைத் தூக்கி கட்டிலில் கிடத்தினார்கள்.

ஆஸ்பத்திரியின் வெளியில் காவல்நின்ற ராணுவவீரன் சண்முகத்தைப் பிடித்துக்கொண்டான்.

மிகவும் கஷ்டப்பட்டு எல்லோருமாகச்சேர்ந்து, சண்முகத்தை கட்டிலில் கிடத்தினார்கள்.

டாக்டர் ஊசிபோட்டார். மருந்து கொடுக்கப்பட்டது. என்றாலும், சண்முகத்தின் அதிர்ச்சி குறையவில்லை! "சகுந்தலா, நான் பிழைப்பேன் என்று எண்ணியா இரத்தம் கொடுத்தாய் — பாரதத்தில் வீரர்களுக்குப் பஞ்சமா?...... என்ற சொற்கள் திரும்பத்திரும்ப அவனிடமிருந்து வெளிப்பட்டன!

விஞ்ஞானம் எவ்வளவுதான் முன்னேறியிருந்தாலும், மனிதனின் ஆயுளை ஒரு வினாடி நேரத்திற்குக்கூட, நீட்டி வைக்க அதனால் முடியாதே! ஊசிகளும், மருந்துகளும் பிழைப்பதற்கு விதியிருப்பவர்களுக்குமட்டும்தானே உதவ முடியும்.

மண்ணைப்பிடித்த ஆக்கிரமிப்பாளர்களின் வெறிக்குப் பலியான பாரதவீரர்களின் எண்ணிக்கையோடு சண்முகமும் ஒருவனானான்.

ஏ, பாரதமாதா! உன் வீரப்புதல்வர்களில் ஒருவனான சண்முகம் வீரசொர்க்கம் புகுந்தான்! கடமையில் தவறாத காளை — சண்முகத்தின் ஆத்மா, மற்றைய வீரர்களுக்கு பக்கபலமாக நிற்குமல்லவா?

# 27 இயற்கையே சீறுவை சபிக்குதடா

தேஜ்பூர் ஆஸ்பத்திரி! ........... இடது பக்கத்தில் உள்ள ஒரு விசாலமான அறையில், மூன்று கட்டில்கள் இடப்பட்டிருந்தன. அதில் ஒரு கட்டிலில் தன் நினைவு இன்றி புலம்பிக்கொண்டிருந்தாள் சகுந்தலா. அவள் இடது கண்ணைச் சுற்றி ஒரு கட்டு போடப்பட்டிருந்தது. அவள், அழகிய கட்டான உடல் வேதனை பொறுக்க முடியாமல் அங்குமிங்குமாகப் புரண்டது. அந்தக் கட்டிலின் இரு மருங்கிலும், வேணுவும், சபாபதியும் விழிகளை இமைக்காமல் சகுந்தலாவையே பார்த்துக்கொண்டிருந்தனர்.

சோகத்தின் முழு உருவாக இருந்தான் வேணு.

"இந்தப் பெண், நமது நண்பன் மணியின் மனைவி அல்லவா?" ஆச்சரியத்தோடு வேணுவின் முகத்தைப் பார்த்துக் கேட்டான் சபாபதி.

"ஆமாம்!" விரக்தியோடு பதில் கூறினான் வேணு.

"இங்கு எப்படி வந்தாள்?"

"அதைத்தான் நானும் யோசித்துக்கொண்டிருக்கிறேன்........., சபாபதி, இவள் மணியின் மனைவி என்றும் உனக்குத் தெரியுமென்றும் காட்டிக்கொள்ளாதே. இவள் இங்கு வந்த வரலாற்றை நானே கேட்டுச் சொல்கிறேன். நீயாகக் கேட்டால் உண்மையை மறைத்து விடுவாள்." வேணு பேசிக்கொண்டிருக்கும்பொழுதே சகுந்தலா புலம்பத்தொடங்கினாள் —.

"என்னை சித்திரவதை செய்யாதீர்கள்...............உம் உங்கள் கையாலேயே கொன்றுவிடுங்கள்............ஐயோ, நான் என்ன தவறு செய்தேன்..............ஆம் உரிமைப் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கும் பாரத வீரர்களுக்கு என்னை அற்பணிக்கிறேன். தற்கொலை செய்வதைவிட அது மகத்தானது............சண்முக அண்ணா!...............உம். .........ஆக்கிரமிப்பாளர்கள் வாழமுடியாது!..............." என்பன போன்ற தொடர்பற்ற சொற்கள் வேதனைச் சுழியோடு சகுந்தலாவிடமிருந்து வெளிவந்தன. அந்த சொற்களைக்கேட்ட வேலுவின் இதயம் வெடித்துவிடும்போல் இருந்தது தன் இதயத்தின் ஒரு பகுதியில் நிரந்தரமான இடத்தைப்பிடித்துக்கொண்ட சகுந்தலா இந்த நிலையில் துடிக்கிறாளே. 'அவள் நன்றாக வாழவேண்டுமென்று நினைத்தேனே!'. என்றெல்லாம எண்ணி வெதும்பினான் வேலு. பொங்கி வந்த துக்கத்தை தன்னுள்ளே அடக்கிக் கொண்டான்.

'சகுந்தலா, எப்படி இந்த இடத்திற்கு வந்தாள்?...... சண்முகத்தின் அறிமுகம் எப்படிக்கிடைத்தது? சண்முகம் ஏதோ பெரிய உதவியைச் செய்திருக்கிறான்போல் தெரிகிறதே!........ அவன் இருந்தாலாவது கேட்டிருக்கலாம்! பாழாய்ப்போகும் சீனுக்காரனின் துப்பாக்கிக்குண்டுகள் அவனையும் பிணமாக்கிவிட்டனவே? ........ சகுந்தலா மணியிடமிருந்து எவ்வாறு பிரிந்தாள்! .......... வாழ்வையே வெறுத்தவள்போல் பிதற்றுகிறாளே! .........' என்பன போன்ற கேள்விகளைத் தன்னுள்ளே எழுப்பி, விடைகாண முடியாது திகைத்து, 'சுயநினைவு வந்ததும் அவளையே கேட்டுத் தெரிந்துகொள்ளலாம்!' என்று சமாதானம் அடைந்தான் வேலு.

சபாபதியைத்தவிர, மற்றவர்களிடம், சகுந்தலாவைத் தெரியுமென்ற சாயலைக்கூடக் காட்டிக் கொள்ளவில்லை.

சகுந்தலாவில் வாழ்க்கை நிகழ்ச்சிகள் சரிவரத்தெரியா விட்டாலும், இந்தநிலைக்குக் காரணம் மணியேதான்! என்று தீர்மானித்து, மணியை மனமாற சபித்தான் வேணு.

"என்ன வேணு, ஏன் இப்படி கலக்கமடைந்திருக்கிறாய்?" என்ற சபாபதியின் கேள்வி, வேணுவைத்தட்டி எழுப்பியது.

"ஒன்றுமில்லை! நம்நாட்டு வீராங்கனைகளின் வரலாறுகளை எண்ணி வியந்துகொண்டிருக்கிறேன்" — என்று சமாளித்தான் வேணு.

அதேவேளையில் "ஸார், சபாபதி யாருங்க?" என்ற கேள்விக்குறிபோட்டு விறைப்புடன் வந்துநிற்கிறான் ஒரு ராணுவவீரன்.

"நான்தான், என்ன? "என்றான் சபாபதி.

"உங்களை பெரிய அதிகாரி அழைத்துவரச்சொன்னார்" என்றான் வந்தவன்.

உடனே எழுந்து அவனைப்பின்தொடர்ந்தான் சபாபதி.

சபாபதி சென்றதும், சகுந்தலா மறுபடியும் புலம்பத் தொடங்கினாள். அதோடு மூடியிருந்த அவள் விழிகள் திறந்தன.

சகுந்தலாவுக்குப் படிப்படியாக தன் நினைவு வரத் தொடங்கியது. சற்று நேரம் தறிஓடத்தைப்போல் அங்கு-மிங்குமாக ஓடிய அவள் அழகு விழிகள், வேணுவைக் கண்டதும் இளைஅறுந்த ஓடம்போல் சட்டென்று நின்றன.

"யானைவரும் பின்னே மணியோசைவரும் முன்னே" என்பதுபோல், தோதல்வரும் பின்னே, அபேட்சகர்வரு-வார் முன்னே என்பதும்போல், "கிறீச்-கிறீச்" என்ற பூட்ஸ் ஒலி முன்னேவர பின்னால் தொடர்ந்துவந்த பெண் டாக்டர் வேணுவின் அருகில் வந்துநின்றதும், "ஆல்ரைட், கண்கள்

"அப்படி நீண்டநாள் பழக்கமொன்றுமில்லை. ஒரு நாள்—சொல்லப்போனால் ஒரு மணி நேரப் பழக்கந்தான். நடுஇரவில் துணையின்றி வந்த எனக்கு, உடன்பிறந்தவர் போல் துணைவந்தார். அன்போடு நான் இங்குவர உதவினார்............ என்ன செய்யலாம் அந்த அன்பு முகம் மறைந்துவிட்டது. நல்லவர்களுக்கு வாழ்நாள் குறைவு தான் போலிருக்கிறது......... என் கண்ணை ஏன் கட்டியிருக்கிறார்கள்?

"இரவில் நீ விழுந்தபோது குப்பிகள் உடைந்து கண்ணாடித் துண்டு ஒன்று கண்ணில் குத்திவிட்டதாம்......... அதை எடுத்துவிட்டார்கள். மருந்துபோட்டுகட்டியிருக்கிறது. சண்முகத்தைப் பற்றி கவலைப்படாதே சகுந்தலா......!பிறந்தவர்கள் இறந்தே ஆகவேண்டும்! ஆனால், வாழ்வில் வரும் இன்பதுன்பங்களை சமமாக வரவேற்று நல்லவர்களாக இறக்கவேண்டும். துன்பம் கண்டு துக்கப்படுவதினாலும், அஞ்சுவதினாலும் ஒரு பயனுமில்லை. இடுக்கண் வருங்கால் நகைக்காவிட்டாலும், அழாமலாவது இருக்கப் பழகவேண்டும்!........."

"ஸார் உங்க மேடைப் பிரசங்கத்தை ஆஸ்பத்திரியிலும் ஆரம்பித்துவிட்டீர்களா?" என்ற டாக்டரம்மாவின் குரல், வேணுவின் போதனைக்கு முற்றுப்புள்ளி வைத்தது.

"இப்பொழுது தான் நினைவு வந்திருக்கிறது; அதற்குள் அதிகமாகப் பேச்சுக்கொடுத்தால், மறுபடியும் மயக்கம் வந்துவிடும்'. பாதி உண்மையும் பாதி கிண்டலுமாகப் பேசிவிட்டு, "நர்ஸ்!" என்று அழைத்தபடியே நடந்தாள் டாக்டர்.

"சகுந்தலா, உனக்கு நன்றாக குணமாகும் வரை நீ இங்குதான் இருக்கவேண்டும். நான் வந்து கவனித்துக் கொள்வேன். ஆனால் ஒரு முக்கியமான இரகசியம், அதாவது நீ இங்கிருந்து புறப்படும்வரை உன் வரலாற்றையோ, என்னை தெரிந்தவனாகவோ வேறு யாரிடமும் சொல்லக்கூடாது...

.எனக்கு நேரமாகிவிட்டது. இன்னும் பேசிக்கொண்டிருந்தால டாக்டரம்மா வந்து........."

வேணு பேசி முடிக்குமுன், ஏதைபோ சொல்ல எண்ணிய சகுந்தலா கையை சற்று உயர்த்தியதும், "ஆ!" வென்று அலறி, பல்லைக் கடித்துக்கொண்டு கையை படுக்கையில் போட்டாள். அப்பொழுதுதான் அவளுக்கு தன் தோள் மீது பட்ட பலத்த அடி—அதனுல் ஏற்பட்ட காயம் நினைவுவந்தது.

அவள் வேதனையைக் கண்டு வேணுவின் மனம் கசங்கியது. அந்த உணர்ச்சியை. வேணுவின் முகத்தில் கண்ட சகுந்தலா, புன்சிரிப்புடன் "அப்படி ஒன்றும் பிரமாத வலி இல்லை. நீங்கள் நிம்மதியாகப் போய்வாருங்கள்" நான் இங்கு வந்துசேர்ந்த வரலாற்றைப் பிறகு சொல்லுவேன்..." ......என்று விடைகொடுத்தாள்.

"நான் டாக்டரம்மாவிடம் சொல்லிவிட்டுப் போய்வருவேன்!" என்று சொல்லி அங்கிருந்து எழுந்தான் வேணு.

வேணு புறப்படவும், சபாபதி எதிரில் வந்தான்.

"என்ன விஷயம்? ராணுவ அதிகாரி எதற்காக அழைத்தார்?" என்று வினவினுன் வேணு.

விசேஷமாக ஒன்றுமில்லை. நான் ஏற்தனவே கேட்டிருந்த பத்து நாள் விடுமுறை அனுமதிக்கப்பட்டுவிட்டது. நான் இங்கிருப்பதை அறிந்து, அதைக் கொடுக்கத்தான் அவர் என்னை அழைத்தார். சோகத்தோடு கூறினுன் சபாபதி.

"அதற்கு ஏன் வருந்துகிறுய்? ஊருக்குப் போய் வா! அதோடு என் வீட்டிற்கும் போய் என் நலத்தை தெரிவித்து விடு. நம் தோழர்களிடமும் நாட்டு மக்களிடமும் பாரத வீரர்களின் தீர நிகழ்ச்சிகளைக் கூறு. எனக்கும் இன்னும் இரண்டுமூன்று நாட்களில் நம் ஊருக்கு வரவேண்டிய முக்-

கிய வேலை இருக்கிறது. எனக்கு விடுமுறை கிடைத்ததும் வந்துவிட்டு உடனே திரும்பிவிடுவேன்.'

"முக்கிய வேலையா அப்படி என்ன?"

"அதை நான் அங்கு வந்தபின் கூறுவேன்.

எப்படியோ நண்பன் சபாபதியை வழி அனுப்பிவைத்தான் வேணு.

சபாபதி சென்றதும், "ஊரில் உங்களுக்கு என்ன முக்கிய வேலை?" என்றாள் சகுந்தலா.

"இருக்கிறது. அதைப்பற்றி நினைக்கவேண்டாம், சகுந்தலா. பேசிக்கொண்டு என்னிடம் ஒன்றும் கேட்காதே. நிம்மதியாகப் படுக்கப் போ. நான் பிறகு வருவேன்." அவள் அனுமதியைக் கேட்காமலே அங்கிருந்து நடந்தான் வேணு.

# 28 சென்னையில் தியாகிகள்

வேணுவைப் பற்றிய விபரம் கூற, கிராமத்திலிருந்து வந்த சபாபதி, வரும் வழியிலேயே — எதிரில் வேணுவின் தந்தை சிதம்பரநாதனைக் கண்டான்.

சபாபதியை மட்டும் எதிரில் கண்ட சிதம்பரநாதனும் கலக்கமடைந்து, "என்ன? என்ன விசேஷம்? வேணு எங்கே?" என்றெல்லாம் கேட்டபடியே பதறினார்!

"நடந்ததெல்லாம் நல்லதே. நீங்கள் வீணாகப் பதறுகிறீர்கள்; வேணு நல்லபடியாக இருக்கிறான். இன்னும் இரு தினங்களில் வீட்டிற்கு வருவான். அதைச் சொல்லவே நான் இப்பொழுது இங்கு வந்தேன்" என்றான் சபாபதி.

இருவரும் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டே வீடு வந்து சேர்ந்தார்கள்.

எதிர்பாராத விதமாக தந்தையோடு சபாபதியைக் கண்ட சாரதாவின் கண்கள் ஆச்சரியத்தால் அகல விரிந்தன.

"அண்ணா வரவில்லையா அப்பா?" என்று தன் தந்தையைப் பார்த்து சாரதா கேட்ட கேள்வி, சபாபதியிடம் கேட்டதாகவே இருந்தது.

"வேலு இரு தினங்களில் கண்டிப்பாக வருவான். ஆக்கிரமிப்பாளர்களை விரட்டியடிக்கப்போது ஒரு தொண்டருக்கு சிறிது காயம் ஏற்பட்டுவிட்டது. அவருக்குத் துணையாக மருத்துவ நிலையத்தில் இருக்கிறான்." பொய்யும் உண்மையும் கலந்து பேசினான் சபாபதி.

சபாபதி கூறியது கேட்ட சாரதா, "ஐயோ!" என்று வருந்தினாள்.

"உங்களுக்கே இத்தனை வருத்தமென்றால் எங்களுக்கு எப்படியிருக்கும்; அதனால்தான் வேலு அங்கேயே இருக்கிறான்" என்றான் சபாபதி.

"இருக்கவேண்டியதுதான். சாரதா வருத்தத்தைப் பற்றி உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கிறதா? அவள் எப்போதும் இப்படித்தான். இமயமலையில் ஒரு பாரத வீரன் இறந்துவிட்டானென்றால் இங்கிருந்தே அலறி ஆவேசம் கொண்டுவிடுவாள். நேற்றுகூட ஆக்கிரமிப்பாளரின் கொடுமையைப் பற்றி ஒரு பாடல் எழுதி அதை ஊர்க் குழந்தைகளுக்கெல்லாம் சொல்லிக் கொடுத்திருக்கிறாள். எல்லாக் குழந்தைகளும் நேற்றிரவிலிருந்து அந்தப் பாடலைத்தான் அல்லும் பகலும் பாடிக்கொண்டிருக்கிறார்கள்." பெருமிதத்துடன் கூறினார் சிதம்பரநாதர்.

"அப்படியா? எனக்குத்தான் கேட்பதற்கு பாக்கியமில்லை" சலித்துக்கொண்டான் சபாபதி.

"ஏன், இல்லை? இந்தா(அ)ம்மா சாரதா — அந்தப் பாடலைப் பாடு" தன் மகளைப் பார்த்துக் கட்
சிதம்பரநாதர்.

சாரதா, முதலில் சற்று வெட்கமடைந்தாலும் தந்தையின் சொல்லை தலைமேற்கொண்டாள். 'கணீர்!' என்ற குரலுடன் பாட்டு ஆரம்பமானது.

மாடுதானனாலும் ஒரு போக்குண்டு
மனிதரினம் சீனருக்கு அதுவுமில்லை
நாடுதானானாலும் அந்த நாட்டில்
நல்லோர்கள் யாருமே இல்லை போலும்
ஊடுருவப் பார்க்குதடா, பாரதத்தை
உருக்குலைக்க எண்ணுதடா அறிவுகெட்டு
ஆடுகின்ற ஆட்டமதைப் பார்த்தலகும்
'அழியும் செஞ்சீனு' வென முழங்குதடா!

தயங்காமற் நம்மிடத்தே நுழைந்தார் சீனர்
தன்மான வீரர்களின் தரம் அறியார்
புயலெனவே பாய்கின்றார் நமது வீரர்
புல்லர் களும் தடுமாறி திகைப்படைந்து
மயங்கியே வீழ்வதோடு நம்மவரின்
மாண்புமிகு திறம் கண்டு மனங்குழம்பி
'இயலாது இந்தியரை வெல்வதற்கே'
என்றெண்ணி சூழ்ச்சி பல புரிகின்றாரே'

உடலுயிரும் செல்வமும் அர்ப்பணிப்போம்
உலகினுக்கு நம் பெருமை பறை அறைவோம்
கடலெனவே ஒருசேரக் கொதித்தெழுவோம்
கண்ணியத்தைக் காத்திடவே அணிவகுப்போம்
மடமையால் நமை எதிர்த்த சீனருக்கு
மறம் காட்டி புறம்காண விரட்டிடுவோம்
புடமிட்ட தங்கமாம் நம்படைகள்
பொறுமைகொண்டெதிர்ப்போரை முறியடிக்கும்!

அன்னியர்கள் நம் நாட்டில் நுழையக்கண்டு
ஆதவனும் கடுங்கோபம் கொள்ளுகின்றான்
பின்னியபோர் அலைகடலும் கொதித்தெழுந்து
பெருஞ்சீற்றம் வெளிப்படவே முழங்குதடா

கன்னியா குமரிமுதல் இமயம்வரை
கடுங்காற்றும் சுழலிட்டு மோதுதடா!
மன்னுபுகழ் அறக்கடவுள் ஆதியிடம்
'மதிக்கவில்லை எனை' என்று புலம்புதடா!

பண்பு என்னும் கன்னியவள் கலங்குகின்றாள்
பாரதத்தில் அரக்கர் கால் ஊன்றக் கண்டு
நண்பு என்னும் நங்கையவள் நாணுகின்றாள்
நல்லிடத்தில் நரிகளது ஊளை கேட்டு
மண்மாதா மனம் நொந்து வாடுகின்றாள்
மண்ணாசைப் பேயர்களின் வெறியைக் கண்டு
பண்பாடும் புள்ளினமும் புலம்புதடா
பாவிகளின் நேர்மையிலா செயலைக்கண்டு

தென்றலவள் தெளிவின்றிச் சுழலுகின்றாள்
தெளிவற்ற சினத்தின் நாற்றங்கண்டு
அன்றலர்ந்த மலருடனே கருகுதடா
அதிகாரைசக் கொண்டோரின் வெறியைக்கண்டு
கன்றதுவும் பாலுண்ண கலங்குதடா
கயவர்களின் விடங்கொண்ட விழிகள் கண்டு
'இன்றாவும் இக்'கொடுமை இல்லை'என
இயற்கையதும் சினவை சபிக்குதடா.

பாட்டுமுடிந்ததது! சாரதாவின் குரல் இனிமையிலும், பாடலின் கருத்திலும் மெய்மறந்திருந்த சபாபதி சுய உணர்வு பெற்றான்! சாரதாவை மனமாற வாழ்த்தினான்.

"சாரதா இதுபோன்ற பாடல்கள் பாரதமெங்கும் ஒலிக்கவேண்டும்!" என்று தன் விருப்பத்தை நேரிலேயே வெளியிட்டான்.

சிதம்பரநாதனுக்கு அளவுகடந்த பூரிப்பு!

"அப்பா, மணி ஒன்று. இரண்டுபேரும் கைகழுவி விட்டு சாப்பிட வாருங்கள்" என்று கூறி சிந்தனைக்கும்

பேச்சிற்கும் ஒரு திருப்பம் கொடுத்துவிட்டு, சமயலறை நோக்கிச் சென்றாள் சாரதா.

## 29 மணியின் நிம்மதி.

1962 நவம்பர் 27-ம் நாள்!.

அன்று இந்துக்களின் புனித திருநாட்களில், ஒருநாள் வருடத்திற்கொருமுறை — ஒரு நாள் சந்தித்து, மக்களை மகிழ்ச்சிக்கடலில் மூழ்கடிக்கும் மகிமை பொருந்திய நன்னாள். பாலர்கள் முதல் விருத்தர்கள் வரைக்கும் குதூகலிக்கும் நாள்! ஆம்! அன்று தீபாவளித்திருநாள்!

ஆனால், அந்தந்தத் திருநாளைக் கொண்டாடுவதற்குத் தான் யாருமில்லை! யாருமே கொண்டாடத் துணியவில்லை. காரணம்? பாரதமக்களின் துணிவு, வேறு வழியில் பாய்ந்து சென்றது. தீபாவளி கொண்டாட மனம் ஒப்பவில்லை. ஏன்! அவர்களின் மனம் அவர்களின் வீட்டில் இல்லை, உற்றார் உறவினர்களிடம் இல்லை! எல்லா மனங்களும் இந்திய வட எல்லையில்தான் தங்கியிருந்தன.

தீபாவளியென்றால் விளக்குகளின் வரிசை — ஒளிகளின் ஒழுங்கு என்பர் பெரியோர்கள் அந்த நியதிக்கேற்ப பாரதமக்களின் உள்ளங்களிலெல்லாம் அன்று தீபங்கள் தான் ஒளிவிட்டுப் பிரகாசித்தது. அவைகள் சாதாரண தீபங்கள் அல்ல சுதந்திர தீபங்கள்! அவைகளினால் உண்டாகும் தியாக ஒளிகள்! அத்தனை ஒளிகளும் ஒன்றாகச் சேர்ந்து சீன அரசாங்கத்தையே சுட்டெரிக்க வீறு கொண்டு எழுந்தன! ஒரு பெரிய நெருப்புக் கோளமாக, அக்கினி மலையாக பாரதத்தின் வடக்கெல்லைக்குத் திரண்டெழுந்தன! வீட்டின் கூரை தீப்பற்றி எரியும்போது யாராவது உள்ளே இருந்து மத்தாப்பு கொளுத்துவார்களா?

யாருக்குவேண்டும் தீபாவளியும் திருநாளும்? என்று துணிந்து உதறிவிட்டு எழுந்தது பாரதம்!

இருளில் உள்ள பொருளை விளக்கிக்காட்டும் சக்தி ஒளிக்கே உண்டு. ஆகவேதான், ஒளியைத் தாங்கிநிற்கும் பொருளுக்கு விளக்கு என பெயராயிற்று. பாரத மக்களின் உள்ளத்தில் எழுந்த ஒளி, பாரத வீரர்களின் தேசப்பற்றை இருளில் கிடந்து உழலும் சீனருக்கு விளக்கிக் காட்டிக் கொண்டிருந்தது. இந்த நிலையில் உள்நாட்டில் தீபாளிக்கு இடமேது?

நண்பராக எண்ணி நன்மை பல புரிந்து உறவுகொண்டிருந்த பாரதத்தையே ஆக்கிமிக்கத் துணிந்திருக்கும், கொலைகார சீன அசுரனை முறியடிக்கத் துணிந்து நிற்கும் போது, சூ-என்லாயை விட மிகக் குறைந்த குற்றவாளியான, கொடுமைக்காரனான நாகசுரன் கேட்டவரத்தை யார் நிறைவேற்றுவார்கள்? சூழ்ச்சிகளின் இருப்பிடமான சூ-என்லாயின் வெறி நாகாசுரனைக்கூட நல்லவனாக்கிவிட்டதே.

நாகாசுரனை ஒழித்துக்கட்டியதால், உலகமே சுபிட்சமடைந்தது. அதைப் போன்றே சீன ஏகாதிபத்திய ஒழிப்பினால் சீன மக்கள் மட்டுமின்றி, பாரதம் மட்டுமின்றி உலகமே காப்பாற்றப்பட்டு சுபிட்சப் பாதையில் அடி எடுத்துவைக்குமென்பது உறுதி. அந்த நல்ல பணிக்கு அறத்தின் முடியாக விளங்கும் பாரதம்தானே வழிகாட்டவேண்டும்? அந்த நற்பணியில் முனைந்துநிற்கும் பாரத மக்களுக்கு தீபாவளிக்கொண்டாட்டம் ஏது? உலக மக்கள் வாழ உழைக்கும் தியாகிகள் தங்கள் தங்கள் —நலனை- வாழ்வை மகிழ்ச்சியை உதறித்தள்ளித்தானேயாகவேண்டும்! அந்த நியதிக்கிணங்க, பாரதமும் இந்த ஆண்டு தீபாவளிக் கொண்டாட்டத்தை உதறித் தள்ளிவிட்டது. சீன அரசின் ஏகாதிபத்திய இருளை விலக்க — ஒழிக்க தியாக ஒளி பரப்பி சுடர்விட்டுப் பிரகாசிக்க கச்சைகட்டிவிட்டது.

கலியுகக் கண்ணனான பாரதப் பிரதமர் அவர்கள், பாரத மக்களின் நாற்பத்திநான்கு கோடி மக்களின் துணை

கொண்டு சீன நரகாசுரனின் அகஇருளை ஒழித்துக்கட்ட ஒளிப்பிழம்பாக மிளிரும்போது உள்நாட்டில் எது தீபாவளி? பிரதமர் அவர்களின் வீரமுழக்கக்கேட்டு பாரதவீரங்களை யெல்லாம் சத்தியபாமாக்களாக மாறி எதிரியை, ஒழித்துக் கட்ட வீறுகொண்டு எழும்போது பட்டுச்சேலைகட்டி பலகார-ங்கள் செய்து தீபாவளி கொண்டாட யார் இருக்கிறார்கள்?

எங்கும் நிறைந்திருக்கும் இயற்கையின் முதல்வனும் இறைவனின் அன்புக்கு உட்பட்ட உயிரினங்களைப் போல், உலக மக்கள் ஒவ்வொருவரும் கருணையே வடிவான—நேர்மையே உருவான, நடுநிலைமைக் கொள்கையைக் கடைபிடித் தொழுகும் பிரதமர் நேரு அவர்களின் அறவழிக்கு—அன்பு வழிக்குக் கட்டுப்பட்டு 'நரகாசுரனின் வதம் விரைவில் நடைபெறவேண்டுமே'. என்று துடித்துக்கொண்டு விழிகளை இமைக்காமல் உற்று நோக்கிக்கொண்டிருக்கும் இந்த நெருக்கடியான நிலையில் தீபாளிக் கொண்டாட்டத்தை யாரே விரும்புவர்? பட்டாசு கொழுத்தும் பாலர்களே, அந்தப் பணத்தைப் பாரதப் பாதுகாப்பு நிதிக்கு வழங்கி சீன அரசாங்கத்தின் ஏகாதிபத்திய வெறியைக் கொழுத்த முனைந்து நிற்கும்போது எண்ணைமுழுக்கிற்கு நேரமேது?

தீபாவளித் திருநாளில் விசேடமானது தலைத்தீபாவளி! ஆம்; மணமான தம்பதிகளின் முதல் தீபாவளி. இன்ப ஒளி நிரம்பியது! ஆனால் தலைக்கே ஆபத்துவந்திருக்கும்பொழுது தலைத்தீபாவளி ஒரு கேடா? ஒவ்வொரு இளம் தம்பதிகளும் தங்களின் முதல் தீபாவளியைத் தியாகம் செய்தனர். அவர்களும் பாரத மக்களின் அங்கங்கள்தானே!

சகுந்தலாவிற்கும் இது தலைத்தீபாவளி என்பதை நாம் அறிவோம். பாரத மக்களின் தீபாவளிக் கொண்டாட்டம் எப்படி இருக்கிறது என்பதற்கு எடுத்துக்காட்டாக நாம் சகுந்தலாவின் நிலையையே உதாரணமாக எடுத்துக்கொள்ள லாம். தேச சேவைக்காக, தேஜ்பூர் மருத்துவ நிலையத்தில் தன்னை மறந்த நிலையில் பணிபுரிந்து, தியாகத்தின் பாதுக-

ளாக எண்ணற்ற துன்பங்களை ஏற்று ஆஸ்பத்திரி படுக்கை யில் கிடந்தாள் சகுந்தலா.

தன் மனைவியைத் தேடி அலைந்து நடைப் பிணமாக அலைந்துகொண்டிருந்தான் மணி.

• வேணுவின் குடும்பம், வேணுவை ராணுவத்திற்கு அனுப்பிவிட்டு, பாரதமாதாவை பாதுகாக்கும் பணியில் ஈடுபட்டுக்கொண்டிருந்தது. இத்தகைய நிலைதான் பாரத குடும்பங்களில்—ஒவ்வொரு வீட்டிலும்—ஒவ்வொருவரு–டைய உள்ளத்திலும் ஒளிவீசிக்கொண்டிருந்தது!

சீனாவின் ஆக்கிரமிப்பால் பாரத மக்களுக்கு தீபாவளிக் கொண்டாட்டம் தடைப்பட்டது. சகுந்தலாவுக்கு முதலில் தாம்பத்தியக் குழப்பம்; பிறகு அன்னிய ஆக்கிரமிப்பால் எழுந்த சேவை உணர்ச்சி—ஆக இரு கோணங்களில் தடைப்பட்டு, தலைத்தீபாவளித் தினத்தில் மருத்து விடுதி யில் கிடந்தாள்.

மாலை நேரம் மணி ஐந்துக்கு மேல் ஆறுக்கு அகம் இருக்கும். சென்னை சர்க்கார் ஆஸ்பத்திரியில் ஒரு தனி அறையில் என்றுமில்லாதபடி சுமார் ஐம்பதுக்கும் மேற்–பட்ட வாலிபர்கள் கூடி இருந்தனர். எல்லோர் முகத்திலும் ஆவல் உணர்ச்சி போட்டியிட்டு மிளிர்ந்தது.

காரணம்

அந்த அறையில்—ஒரு படுக்கையில் சகுந்தலா படுத் திருந்தாள், அவள் அருகில் ஒரு நாற்காலியில் அமர்ந்திருந் தான் வேணு.

போர்முனையிலிருந்து வந்த வேணுவைக்காண மருத்–துவநிலையத்திற்கே வந்து கூடிவிட்டனர் அவன் நண்பர்கள்.

ஆஸ்பத்திரி ஆனதால், நண்பர்களுக்கு நன்றி செலுத்தி, 'எல்லா விபரங்களையும் நாளை மாலை உங்களிடம்

தெளிவாகக் கூறுகிறேன் என் அறைக்கு வந்து விடுங்கள்'' என்று கூறி விடைகொடுத்தான் வேணு.

''எங்களிடம் மட்டுமென்ன? நம் நண்பர்கள் எல்லோரிடமும் கூறுங்கள். வருகிற வெள்ளிக்கிழமை நமது தொண்டர்படை காரியாலயத்திற்கு வந்து விடுகிறோம். நீங்கள் கண்டிப்பாக மாலை ஐந்து மணிக்கு வந்துவிடவேண்டும்'' என்றான் நண்பர்களில் ஒருவன்.

''எது வேண்டுமானாலும் செய்யுங்கள். உங்கள் விருப்பம், எனது கடமை! நான் வந்துவிடுவேன். சென்று வாருங்கள்''. என்று கூறி, ஒரு விதமாக சமாளித்து நண்பர்களை அனுப்பிவைத்தான் வேணு.

நேரமும் ஏழு மணிக்குமேல் ஆகிவிட்டது.

வேணுவும் சகுந்தலாவும் சென்னை ஆஸ்பத்திரிக்கு ஏன் வந்தார்கள்? என்று தெரிந்துகொள்ள வேண்டாமா? ஆமாம்! அதைத் தெரிந்துகொண்டு மேல் நடப்பதைப் பார்க்கலாம்.

தேஜ்பூர் ஆஸ்பத்திரியிலிருந்த சகுந்தலா, மூன்றே நாட்களில், ஓரளவுக்குக் குணமடைந்து விட்டாள்!

சகுந்தலாவை எப்படியும் அவள் கணவன் மணியோடு சேர்த்துவைத்துவிடவேண்டும்; என்ற உறுதியில், விடுமுறைக்கு அனுமதி கிடைத்ததும் வந்துவிட்டான் வேணு. அனுமதிச் சீட்டைக் கையில் வாங்கிக்கொண்டு, சகுந்தலாவிடம் விபரத்தைக் கூறினான்.

சகுந்தலாவுக்கோ கீழே விழுந்தபின் இடது கண் கெட்டுவிட்டதால் கட்டாயமாக நிரந்தர விடுமுறைக்கு, கட்டளை வந்திருந்தது! அதையும் அவனிடம் கொடுத்தாள்.

ஆகவே, தேஜ்பூரிலிருந்து புறப்பட்டு சென்னை வந்தார்கள், வேணுவும், சகுந்தலாவும்.

ஏற்கெனவே, பூரணமாகக் குணமடையாத சகுந்தலாவுக்கு, திடீர் பிரயாணமும் சேர்ந்து, உடலை வருத்தியது!

சென்னை வந்து சேர்ந்ததுமே மயக்கமடைந்து விழுந்து விட்டாள்.

உடனேயே, வாடகைக் காரில் ஆஸ்பத்திரிக்கு கொண்டுவந்தான் வேணு. சிகிச்சை அளிக்கப்பட்டது. நேற்று முழுவதும் சகுந்தலாவின் உடல் அனலாகக் கொதித்தது. இன்று நன்றாகக் குணமாகி அமைதியாகப் படுத்திருந்தாள்.

அதற்குப் பிறகு நடந்ததுதான் நமக்குத் தெரியுமே!

ஏதோ சிந்தனையிலிருந்த வேணு, திடீரென்று சகுந்தலாவின் முகத்தைப் பார்த்தான். அவள் நன்றாகத் தூங்கிக்கொண்டிருந்தாள்.

ஆகவே, கட்டிலின் அருகே கிடந்த நாற்காலியில் இருந்தபடியே கடிகாரத்தையும், சகுந்தலாவின் முகத்தையும் மாறி, மாறி பார்த்துக்கொண்டும், விறுவிக்கொருதரம் அங்குமிங்குமாக நடந்துகொண்டிருக்கும் "நர்சு"களிடம் ஏதேதோ கேட்டுக்கொண்டுமிருந்தான்.

சுற்றிலும் படுத்திருந்த பல்வேறு நோயாளிகளின் அவலக் குரல்களும், அதற்குப் பக்கமேளமாகத் தொடர்ந்து ஒலித்த இருமல் ஒலிகளும் வேணுவின் மனநிலையை பரீட்சை செய்தன. சகுந்தலாவிடம் நிலைத்துநின்ற வேணுவின் சிந்தனை மற்றைய நோயாளிகளின் மீது திரும்பியது.

"மனிதர்களுக்குத்தான், எத்தனை விதமான வியாதிகள்? எத்தனை துன்பங்கள்!......என்றாலும், உயிர்மீதுள்ள ஆசையால்-வாழவேண்டுமென்ற ஆவலால், வந்த வியாதிகளை எதிர்த்து, எப்படியெல்லாம் போராடுகிறார்கள்? விதியையும், ஜாதகத்தையும் முழுமனதுடன் நம்பி, 'இத்தனை வயது வரைக்கும் கண்டிப்பாக வாழ்வோம்!' என்ற உறுதியுள்ளவர்களும்கூட சற்றே தலைவலி வந்துவிட்டாலும், குப்பியைத் தூக்கிக்கொண்டு டாக்டர்களிடமல்லவா ஓடுகிறார்கள். வியாதியின் துன்பம் சகிக்கமுடியாமல்தானே! இம்மாதிரிய மருத்துவ நிலையங்களை ஒரு முறை சுற்றிப்பார்த்து

விட்டால், கொடுமைக்காரர்களும் தானாகவே திருந்திவிடு வார்கள். மேல்நாடுகளிலெல்லாம், வைத்திய வசதி இனமா கவே செய்யப்படுகிறது. நம் நாட்டில் அந்த நாள் என்று தான் வருமோ! சர்க்கார் மருத்துவ நிலையங்களில்கூட, மருத்துவ நற்சான்றிதழ் பெறுவதற்கு ஐந்து, பத்து என்று கொடுக்கக்கூடிய நிலையில்தானே நம் நாடு இருக்கிறது. உண்மையிலேயே நல் ஆட்சியின் அடிப்படை அபி-விருத்திகள்—இலவச மருத்துவம்,* இலவசக் கல்வி, லஞ்ச ஒழிப்பு இந்த மூன்றுதான்! இவைகள் நல்ல முறையில் நடைபெற்றால், கண்டிப்பாக அந்த நாடு முன்னேறிவிடும். .........நம் நாடும் அத்தகைய சுபிட்சப் பாதையில்தானே நடைபோட்டு வருகிறது. அதற்குள் படுபாவி சீனக்காரன் வந்துவிட்டானே! என்றெல்லாம் மருத்துவ நிலையத்தி-லிருந்து வருங்கால அரசியல் வரைக்கும் நாட்டின் நலனைப் பற்றி சிந்தித்துக்கொண்டிருந்த வேணு, "என்ன அண்ணா சிந்தனை பலமாக இருக்கிறதே......" என்ற சகுந்தலாவின் சொற் கேட்டு அவள் முகத்தை உற்று நோக்கினான்.

"பலமான சிந்தனை ஒன்றுமில்லை! சாதாரண சிந்தனை தான்". சிரிப்பை வரவழைத்துக் கூறினான் வேணு.

"அண்ணா உங்கள் நண்பர்கள் எல்லோருமாகச் சேர்ந்து உங்களை விருந்தினராக அழைத்திருக்கிறார்களா? நீங்கள் போகிறீர்களா?" ஆவலோடு கேட்டாள் சகுந்தலா.

"உம், நண்பர்கள் கட்டளையிட்டால் அதன்படி நடக்க வேண்டியதுதானே!"

"போங்கள். நேரில் கண்ட நெஞ்சுருக்கும் காட்சிகளை சொற்களால் நண்பர்களின் மத்தியில் அள்ளி வீசுங்கள். உங்களுடைய சொற்கள் அவர்களுக்கு உணர்ச்சியூட்டி அந்த உணர்ச்சி வேகத்தில் ஆக்கிரமிப்பாளர்களை அடி-பணிய வைக்கட்டும்".

"சகுந்தலா, நண்பர்களுக்கோ, மக்களுக்கோ இப் பொழுது யாருமே உணர்ச்சியை ஊட்ட வேண்டியதில்லை!

பாரதத்தில் பிறந்த ஒவ்வொருவனும் உணர்ச்சிப் பிழம்பா-கவே ஒளி வீசுகிருன்! பாரதப் பிரதமரைப் போன்றும், நம் தமிழக முதல் அமைச்சரைப் போன்றும் — எத்தனேயோ தியாகிகள் நம் பாரதத்தில் சூருவளி சுற்றுப்பிரயாணம் செய்கிருர்கள். தியாகம் என்ருல் என்ன? என்பதை எடுத்திக்காட்டுகிருர்கள். இல்லே; நடந்து காட்டுகிருர்கள். ஆளுல் ஏதோ ஒன்றிரண்டு சுயநலப் பெருச்சாளிகள் இந்த வேளேயிலும் தங்களின் செல்வாக்கை உயர்த்திக்கொள்ளவே பாடுபடுகிருர்கள். நாட்டைக் குழப்புகிருர்கள். அப்படிப் பட்ட கயவர்கள் யாராக இருப்பினும் நம் விரோதி சீனுக்காரனேவிட மட்டமானவர்கள்!"

"உண்மைதான் அண்ணு! உங்களேப்போல் நம் நாட்டு மக்கள் எல்லோரும் மாறிவிட்டால் உலகமே எதிர்த்தாலும் கவலேப்பட வேண்டாம்!"

"இல்லே, எல்லோரும் நல்லவர்களாக தியாக சீலர்களாக மாறிவிட்டால், உலகம் நம்மை விரோதிக்கவே நினேக்காது அன்பு கொண்டு —நம் நட்பிற்காக ஏங்கி நிற்கும். உள்நாட்டில் குழப்பம் இருப்பதாக அறிந்தால்தான் பிறர் நமக்கு இலகுவில் எதிரியாவதோடு, நம்மை சுரண்டவும், நம் மண்ணில் காலூன்றவும் துணிவார்கள். நம் நாட்டில் அதிகம் படித்தவர்கள் என்று மதிக்கப்படுகிறவர்களுக்கே இந்த உண்மை தெரியவில்லேயே!"

"ஸார், இது ஆஸ்பத்திரி. மேலும் நாளே அல்லது மறு நாள் சகுந்தலாவை அழைத்துப் போகலாம். அதுவரைக்குமாவது தயவு செய்து சற்று மெதுவாகப் பேசினுல் நல்லது. நீங்கள் கூறுவது அத்தனேயும் உண்மைதான். எனக்குப் கேட்பதற்கு ஆவலாகத்தான் இருக்கிறது. இத்தனே நேரமும் கேட்டுக்கொண்டுதான் இருந்தேன். என்ருலும் டாக்டர் வருகிற நேரமாகிவிட்டதால் என் ஆர்வத்தையும் தியாகம் செய்து உங்களிடம் கூறினேன். தவருக இருந்தால் மன்னித்துவிடுங்கள்!" என்று வேண்டினுள் அருகில் இருந்த நர்ஸ்.

"மன்னிப்பதற்கு என்ன இருக்கிறது உங்கள் கடமையை நீங்கள் நிறைவேற்றுகிறீர்கள். கடமையை நிறை வேற்றுகிறவர்களை எனக்கு மிகவும் பிடிக்கும்!" என்று கூறி, தன் பேச்சை நிறுத்தினான் வேணு.

# 30 ஆஸ்பத்திரியினின்றும் புறப்பட்டார்கள்.

பூபாளம் பாடவேண்டிய காலை நேரம். அருணன் உதித்து, தன் பிரயாணத்தைத் தொடங்கிவிட்டான். சென்னையில் உள்ள ஹோட்டல்களின் வானொலிப் பெட்டிகள் ஒவ்வொன்றும், ஒவ்வொரு மொழியில் பாடிக்கொண்டிருந்தன.

ஒவ்வொரு உணவு விடுதியின் உள்ளும் புறமும், மக்கள் கூட்டம் அலைமோதி நின்றது. சங்கீதம் கேட்பதற்கு அல்ல; சீனாவின் பேராசைக்குப் பாரத வீரர்கள் எந்த அளவுக்கு புத்திபுகட்டுகிறார்கள், என்ற செய்தியை அறிவதற்கு. செய்தி ஒலிபரப்பப்படும் வேளையை எதிர் பார்த்து ஒவ்வொருவருடைய முகத்திலும் ஆவலும் ஆவேசமும் போட்டியிட்டன.

பத்திரிகை கடைகளிலும் மக்களின் கும்பல். பத்திரிகையைக் கையில் வாங்கியவர்கள், வீட்டில் போய்படிக்கும் பொறுமையின்றி ஆங்காங்கே நின்று படித்துக்கொண்டிருந்தனர். அவர்களைச் சுற்றிலும் சுமார் பத்துபேர்களுக்குக் குறைவில்லாமல், ஒவ்வொரு பத்திரிகையிலும் விளிம்பில் இருவிரல் பதித்துக் கூட்டமாக நின்று படித்துக்கொண்டிருந்தார்கள்.

வீட்டிற்குள்ளிருந்து, திரைப்படக் கொட்டகைகள், பூங்காவனங்கள், கல்லூரிகள், பாடசாலைகள், ஆற்றங்

கரைகள், குழாயடிகள், கிணற்றங் கரைகள், வியாபார நிலையங்கள், தொழில் நிலையங்கள்.........சுருங்கச் சொன்னால், பாரதம் முழுவதும் எங்கெல்லாம் மக்கள் சந்திக்கிறார்களோ அங்கெல்லாம் சீனுவைச் சபித்துக்கொண்டே இருந்தார்கள். அப்படியிருக்க சென்னை வீதிகளில் கூடிநிற்கும் மக்கள் கூட்டம் கொந்தளிப்பதில் ஆச்சரியமென்ன?

அன்பிற்கு அழிவில்லை என்று சொல்வார்கள்.. 'அறம் வெற்றிபெறும்' என்பது ஆன்றோர் வாக்கு. அந்த அன்பு வழியில் செல்கிறது நம் பாரதம். அறவழியில் நடக்கிறது நம் நாடு! என்றாலும், அன்பை உணராதவர்கள் நம் மண்ணை ஆக்கிரமிக்கிறார்கள் அறத்தின் பெருமை தெரியாதவர்கள் ஆயுத பலத்தில் கூக்குரலிடுகிறார்கள்.........என்றெல்லாம் பாதையில் நடந்து செல்லும் பாரத மக்கள் உணர்ச்சி வயப்பட்டு உரையாடிக்கொண்டே சென்றார்கள்.

எங்கெல்லாமோ சுற்றி அலைந்துவிட்டு, கையில் ஒரு தினப்பத்திரிகையுடன் சென்னை மவுண்ட் ரோட்டில் வந்துகொண்டிருந்தான் மணி. சீனுக்காரனுக்கு அறம் தென்படவில்லை. மணியின் கண்களுக்கு மனைவி—சகுந்தலா தென்படவில்லை. ஆனால் ஒரு வேறுபாடு. மணி சகுந்தலாவைத் தேடுகிறான். சீனுக்காரனோ அறம் என்றால் என்ன? என்று அறிவதற்கே விரும்பவில்லை. அவ்வளவுதான். நடைதளர்ந்து அருகிலிருந்த ஒரு பூங்காவிற்குள் சென்று பத்திரிகையை விரித்தான் மணி.

'தன் கழுத்து மாலையைக் கழற்றிக் கொடுத்ததுடன், தன் பேனாவையும் போருக்கு அனுப்பிவைத்தாள் ஒரு பாரத வீராங்கனை.'

'சீனர்களை விரட்ட மலைஜாதி மக்கள் முன் வருகிறார்கள்.'

'இராணுவக் குத்தகை முறையில் இந்தியாவுக்கு ஆயுத உதவி.'

'சீனர் ஒழியும்வரை சீனி உபயோகிக்கமாட்டேன்' என்று ஒரு குழந்தை சபதம் செய்தது.

'வஞ்சகத்தை எதிர்த்துப் போர்!' என ராஷ்டிரபதி முழக்கம்.

'என்சாண் உடம்பிற்குப் பிரதானமான கண்களையே பாரத வீரர்களுக்காக தானம் செய்ய முன்வந்த தேசிய வீரன்!'......என்பன போன்ற தலைப்புச் செய்திகளே மணியின் மனதில் வீர உணர்ச்சியைத் தட்டி எழுப்பின.

'தேசிய ஒற்றுமையைத்தேடி பூதக்கண்ணாடி போட்டு அலைந்தார்கள். இனி கண்ணாடியை உடைத்தெறிய வேண்டியதுதான் பாரதம் ஒன்றுபட்டு வீறுகொண்டு எழுந்து விட்டதே!' என்று தன்னுள் எண்ணி வீர உணர்ச்சியோடு எழுந்தான் மணி.

''என்ன, பத்திரிகை ஆசிரியர் அவர்களே, ஏது பூங்காவில் காண்கிறது?......காற்று வாங்க வந்தீர்களா?'' நகைச் சுவையோடு கேட்டான் அங்கு வந்த சபாபதி.

சபாபதியைக் கண்ட மணியின் உள்ளம் மகிழ்ச்சியால் நிறைந்தது வேணுவையே கண்டாற் போல், ஆவலோடு அவன் முகத்தைப் பார்த்தான்.

''சபாபதி, காற்றும் வாங்கவில்லை, காய்கறியும் வாங்க வில்லை. மனச்சாந்திக்காக இங்கு வந்தேன். உன்னைக் கண்டதில் எனக்கு வெகு திருப்தி!'' உள்ளத்தை திறந்து பேசினான் மணி.

''ஏன்?''

''காரியமாகத்தான். நான் வேணுவைக் காணவேண்டும் என்று எண்ணினேன். வேணுவின் வலக்கரமான உன்னைக் கண்டுவிட்டேனல்லவா?''

''ஓகோ, வேணுவைத் தேடி வெகு சிரமப்பட்டுவிட்டாயாக்கும். நல்லவேளை. இன்னும் ஒருசில நாள்தான் நாங்

கள் இங்கு இருப்போம். வருகிற வெள்ளிக்கிழமை மாலை ஐந்து மணிக்கு திருவல்லிக்கேணி தொண்டர்படை அலுவலகத்திற்கு வேணு வருவான். தாராளமாகக் காணலாம்.''

''அப்படியா?......அப்படியென்றால், நான் இப்போதே அங்கு போய்விடுகிறேன்.'' மணியின் வேகம் அவன் சொற்களில் வெளிப்பட்டது.

''அத்தனை அவசரமா? அப்படி என்ன முக்கிய விஷயம்?'' ஒன்றும் தெரியாதவன்போல் கேட்டான் சபாபதி.

''முக்கிய விஷயம்தான். நீ இப்பொழுது எங்கு போகிறாய்?''

''நண்பன் ஒருவனை காணவேண்டும்; போய்க்கொண்டிருக்கிறேன்.''

''சரி, அப்படி என்றால் உன்னிடமும் விபரத்தைக் கூறுகிறேன். நாம் பேசிக்கொண்டே போகலாம். மாம்பலம் வரைக்கும் உன்னோடு வருகிறேன்.'' என்றான் மணி.

சபாபதியும் சம்மதிக்கவே, இருவரும் புறப்பட்டார்கள்

வேணுவைக் கண்டால், சகுந்தலாவைப் பற்றிய செய்தி தெரிந்துவிடும் சகுந்தலா சிவஞானபுரத்தில்தான் இருப்பாள். ஆம், சகுந்தலா கண்டிப்பாக அங்குதான் இருப்பாள். கடவுளே சகுந்தலா அங்கேயே இருக்கவேண்டும்............'சிந்தனை சற்று நின்றது, சபாபதியின் மீது பார்வையைச் செலுத்தினான் மணி.

கேள்விக்குறி மிளிர அவனைத் திரும்பிப்பார்த்தான் சபாபதி.

''ஆமாம், வேணுவும், நீயும் இன்னும் ஒருசில நாட்கள்தான் இங்கு இருக்கப்போவதாக கூறினாயே! பிறகு எங்கே

போகிறீர்கள்? இத்தனை நாளும் எங்கே இருந்தீர்கள்?'' என்று விசாரித்தான் மணி.

"போர்முனையில்!'' சாதாரணமாகக் கூறினான் சபாபதி.

ஆனால், மணி சிறிது அதிர்ச்சியடைந்துவிட்டான். 'வேணு எப்போது போர்முனைக்குப் போய்விட்டான்...எப் போது படையில் சேர்ந்தான் .........அளவற்ற தேசபக்தி உள்ளவன்தான். நாமும் தான் இருக்கிறோமே............... பேசுவதுபோல் நடக்க முடிகிறதா? வேணு நடக்கிறான். அவன் செயல் வீரன்'.........அவன் சிந்தனை வேணுவின் சாதனைகளைச் சுற்றி ஓடியது.

அதைத் தடைசெய்து, பேச்சைத் தொடர்ந்தான் சபாபதி.

இருவரும் பல விஷயங்களைப் பற்றியும் பேசிக்-கொண்டே நடந்தார்கள்.

# 31 வேணுவின் வீர முழக்கம்

சகுந்தலாவுக்கு நன்றாகக் குணமாகிவிட்டது. இப்பொழுது உடலில் பட்ட காயம் ஆறிவிட்டது. ஆனால் மனதிற்பட்ட காயம் துன்புறுத்தத் தொடங்கியது.

அன்று மருத்துவ நிலையத்திலிருந்து புறப்படவேண்டிய நாள். 'எங்கே போவது? யாருடைய ஆதரவை நாடுவது?' என்ற கேள்விக்குறிகள் சிறுசேமிப்புத் திட்டத்திற்கும், நடுப்பகல் உணவுத் திட்டத்திற்கும் பணம் பிரிக்கப் புறப்படும் ஆசிரியர்களின் மனதில் எழுந்து சித்திரவதை செய்-வதைப்போல், சகுந்தலாவின் மனக்கண் முன் தோன்றி முடிவுகாணவிடாமல் திணற அடித்தன.

'......................வேணுவின் பாதுகாப்பில் இருக்க முடியாது; இருக்கவும் கூடாது. என்றால் அவர் அனுப-

வித்த துன்பங்கள் போதும். ஆகவே மேலும்......மேலும் துன்பத்தைக் கொடுக்கக்கூடாது. எப்படியாவது அவர் பாதுகாப்பிலிருந்து மறைந்துவிடவேண்டும். ............ எப்படி மறைவது? ............... ......எங்கே போவது?' என்றெல்லாம் கட்டிலில் இருந்தபடியே தலைகுனிந்து, இடது கையால் கால் பெருவிரல் நகத்தைக் கிள்ளிக்கொண்டே தன் சிந்தனையை ஓட்டிக்கொண்டிருந்தாள் சகுந்தலா.

"என்ன சகுந்தலா! சிந்தனை பலமாக இருக்கிறதே! ... . ......மணியின் நினைவு வந்துவிட்டதா மா. ... ... ... கவலைப்படாதே. எப்படியும் உன்னை மணியிடம் சேர்த்துவிடுவேன். அது என் கடமைகளில் ஒன்று!

திடீரென்று ஒலித்த வேணுவின் குரல்கேட்டு தலை நிமிர்ந்தாள் சகுந்தலா.

சிந்தனையுமல்ல, நினைவுமல்ல ஆஸ்பத்திரியினின்றும் புறப்படவேண்டுமே எங்கே போவது என்று எண்ணினேன். அவ்வளவுதான்". சிரிப்பை வரவழைத்துக்கொண்டே கூறினாள் சகுந்தலா.

"அதற்கும் ஒரு திட்டம்போட்டுவிட்டுத்தான் வந்திருக்கிறேன், சகுந்தலா. உன் வாழ்வெனும் சந்திரனை மறைத்த விதி எனும் கருமேகம மறைந்துவிட்டது. மணியையும் உன்னையும் ஒன்றுசேர்ப்பதே என் முதல வேலை. எல்லாக் கவலைகளையும் என்னிடம் ஒப்படைத்துவிட்டு நிம்மதியாக இரு ஒன்றையும் யோசிக்காமல், என்னுடன் நம கிராமத்திற்கு வா. உன் சிற்றன்னை 'மணி எங்கே?' என்று கேட்டால், முக்கிய வேலையாக வெளியூர் போய் இருக்கிறார் என்று சொல்லு. இன்னும் மூன்று தினங்களுக்குள் நான் மணியைக் கண்டுபிடித்து, கிராமத்திற்கே அழைத்து வருவேன். அன்றிலிருந்து உனக்கு நல்வாழ்வு கிட்டும். எந்த வித மறுப்பும் சொல்லாமல் நான் சொல்வதைக் கேள்!'' உறுதியுடன் உளம் திறந்து கூறினான் வேணு.

ஒரு நீண்ட பெருமூச்சுவிட்டு, "அண்ணு! நீங்கள் எது சொன்னுலும் நான் மறுக்கமாட்டேன். உங்களுக்கு அந்த நம்பிக்கை இருக்குமானுல், அது வெற்றியாக முடியட்டும்." என்ருள் சகுந்தலா.

அவள் கண்களில் நீர் மல்கியது.

இருவராலும் ஒன்றுமே பேசமுடியவில்லை.

அதே வேளையில் ..........?

யாரோ ஒரு வாலிபனை இருவராகத் தூக்கிவந்து சகுந்தலாவின் படுக்கையருகில் கொண்டுவந்து, மற்ருெரு கட்டிலில் கிடத்தினுர்கள். அவனேடு இரண்டு வாலிபர்களும், ஒரு கிழவியும் வந்து நின்ருர்கள். கிழவியின் கண்களிலிருந்து கண்ணீர் பெருக்கெடுத்தோடிய தடம், குழிவிழுந்த கன்னங்களிலும் தெளிவாகத் தெரிந்தது

இந்தக் காட்சியைக் கண்ட வேணு, அந்தப் படுக்கையின் அருகில்போய், வாலிபனை உற்றுப்பார்த்தான். அவன் நல்ல நிலைமையில்தான் இருந்தான் ஆகவே அவனிடமே, "உனக்கு என்ன வியாதி." என்ருன் வேணு

வாலிபன் ஒன்றும் கூருமல் வெட்கத்துடன் முகத்தை திருப்பிக்கொண்டான். அதைக்கண்ட வேணு ஆச்சரியமடைந்து, அருகில் நின்றவனிடம் கேட்டான்.

"வேறொன்றும் இல்லீங்க, இவன் ஒரு அழகான பெண்ணைக் காதலித்தான். அவளும் இவனைக் காதலித்தாள். ஆனுல், அவளுடைய பெற்ருேர்கள், அந்தப்பெண்ணை வேறு ஒரு பணக்கார மாப்பிள்ளைக்கு கட்டிக்கொடுத்துவிட்டார்கள். உடனே இவன் என்னசெய்தானென்ருல், நஞ்சைக் குடித்துவிட்டான்! நல்லவேளையாக அதே வேளையில் நாங்கள் இவன் வீட்டிற்குச் சென்ருேம்! கொடியில் நடந்ததைப் புரிந்துகொண்டு, உடனே ஆஸ்பத்திரிக்கு எடுத்துக் கொண்டுவந்தோம். இப்பொழுது எல்லாம் சரியாகிவிட்டது. இது அவனுடைய அம்மா!" சுருக்கமாகக் கூறிமுடித்து

அந்த கலியுக 'சலீமை'ப் பெற்றெடுத்த மாதாவையும் அறிமுகப்படுத்தினான் அருகில் நின்ற ஆபத்பாந்தவன்.

வேணுவுக்கு ஒருபுறம் சிரிப்பும், மறுபுறம் கோபமுமாகவந்தது

படுக்கையில் கிடந்த வாலிபனைப் பார்த்து, "நீ படித்திருக்கிறாயா?" என்றான்.

"கல்லூரியில் படிக்கிறேன்!" என்றான் அவன்.

"கல்லூரியில் படித்தும் உனக்கு அறிவு இல்லையே! எல்லோருமே, லைலாவாகவும் கயசாகவும் இருந்துவிட்டால் மனித இனமே தலைகீழாக மாறிவிடாதா? ஏதோ பருவ வயதில் காதல் உணர்ச்சி ஏற்பட்டிருக்கலாம். அதில் தவறில்லே. காதலைக் கட்டி வளர்த்து திருமணம் செய்து கொள்வது நல்லதுதான். ஆனால்-காதல் நிறைவேறவில்லையானால், அடியோடு அதை மறந்து, பிற வேலைகளில காதல் கொள்வதுதான் நல்லவழி. நீ பிறந்ததும், வாழ்வதும், ஒரு பெண்ணைக் காதலிப்பதற்காக மட்டுமல்ல; அவள் கிடைக்காதஉடன் உயிரை விடுவதற்கு! அதைவிட சிறந்த முக்கிய கடமைகள் உண்டு. இதோபார்! உன்னைப்பெற்று வளர்த்த தாயின் நிலைமையை! அவளுக்கு நீ கடமையை செய்ய வேண்டாமா?

காதல் நிறைவேறாவிட்டால், பைத்தியம் மாதிரி அலைவதோ, ரயிலில் தலையைக் கொடுப்பதோ, நஞ்சைக் குடிப்பதோ அறிவுடைமை ஆகாது. நிறைவேறாத காதலை மறந்து பிற கடமைகளை மேற்கொள்ள வேண்டும். உன்னைப்பெற்ற இந்த நாட்டிற்கு நீ தொண்டுசெய்ய வேண்டாமா? நம்நாடு இன்று இருக்கும் நிலையில், பெண்ணைக் காதலிப்பதைவிட நாட்டைக் காதலிப்பதே முக்கியம். தேசத்திற்காக உயிரை விடுவதே பெருமை!

எப்பொழுதும், "காதல், கல்யாணம்" என்று மட்டும் இருந்தால் போதுமா? காதல் என்றால் ஆண்—பெண் உறவு மட்டுமல்ல! இந்த நாட்டு மக்கள் நன்றாக வாழவேண்டும்,

நம் தாய்மொழி தழைத்தோங்க வேண்டும், இந்தியாவில் தமிழகமும், உலக மத்தியில் பாரதமும் தலைநிமிர்ந்து வாழ வேண்டும்! எல்லோரும் சமதர்ம நிலையில் இருக்கவேண்டும்; என்றெல்லாம் நினைப்பதும் காதல்தான்! இன்னும் சொல்லப் போனால், இதுதான் உண்மையான காதல்! பொது நலக் காதலை போற்றத்தகுந்த காதல்! அதற்காக உயிரை விடு-வதே தியாகம்! நீ சுயநலத்திற்காக உயிரைவிடத் துணிந்-தது கோழைத்தனம்! தம்பி, கடமையைச் செய்வது, கண்ணியமாக ஒழுகுவது! உரிமையைப்பெறுவது; ஒன்று சேர்ந்து வாழ்வது! என்ற கொள்கைப்படி வாழக்கற்றுக் கொள். உண்மையான காதல், கொடுக்க விரும்புமேதவிர வாங்க விரும்பாது! காதலுக்குப் பொருள் தெரியாத எல்-லோரிடமும் இதைக் கூறு!......'' வேலுவின் பேச்சு அந்த வாலிபனுக்கு நல் உணர்ச்சியை ஊட்டியது. "மன்னித்து விடுங்கள். எனக்கு புத்திவந்துவிட்டது. இனிமேல் இம் மாதிரி நடந்துகொள்ளவே மாட்டேன்!'' என்று மனமாற மன்னிப்புக்கேட்டான்.

"என்ன, இங்கே கூட்டம்?'' என்ற குரல் கேட்டு, தன் உபதேசத்தை நிறுத்திவிட்டுத் திரும்பினான் வேலு.

ஆஸ்பத்திரியிலிருந்த அத்தனை பேரும் தன் நிலை மறந்து வேலுவின் பின்னால் திரண்டிருந்தார்கள்.

டாக்டர் அம்மாவின் குரல், அவர்களை சிதற அடித்-துக்கொண்டிருந்தது.

இந்த காட்சியைக் கண்ட வேலு, உண்மையிலேயே சிறிது வெட்கமேலிட திகைத்து விட்டான். அவன் அருகில் வந்த டாக்டரைப் பார்த்து "மன்னித்துவிடுங்கள்............ இந்த வாலிபனுடன் பேசிக்கொண்டிருந்தேன்............... சகுந்தலாவை அழைத்துப்போக வந்தேன'' என்றான்.

வேலுவின் தயக்கத்தை கண்ட டாக்டர், கோபத்தை விட்டு, சிறிது புன்னகை மிளிர "ஆல்ரைட்; தாராளமாக அழைத்துப்போங்கள். ஆனால், அதற்குள் ஒரு சொற்-பொழிவே நடத்திவிட்டீர்கள். அப்படித்தானே.'' என்றாள்.

வேணுவின் உள்ளத்திலிருந்த வெட்கம் மறைய, சகுந்தலாவைப் பார்த்து, 'உம், புறப்படு; டாக்டரம்மாவிடம் அனுமதி வாங்கியாகிவிட்டது. அவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொள்." என்று கூறி துரிதப்படுத்தினான்.

சகுந்தலாவும், வேணுவும் டாக்டரம்மாவுக்கு நன்றியும், வணக்கமும் செலுத்திவிட்டு ஆஸ்பத்திரியினின்றும் புறப்பட்டார்கள்.

# 32 தியாகியின் கருத்துரை

அன்று வெள்ளிக்கிழமை, மாலை நேரம். தொண்டர் படைக் காரியாலயத்தில் சுமார் முப்பது நண்பர்களுக்கிடையில் இருந்தான் வேணு. நண்பர்களில் ஒருவன் திடீரென்று எழுந்தான். "பொன்புமிக்க பெரியோர்களே, சகோதரர்களே! இந்த 'மாபெரும்' கூட்டம் எதற்காகக் கூட்டப்பட்டிருக்கிறதென்பதை நீங்கள் ஒவ்வொருவரும் அறிவீர்கள்.

நமது பாரத பூமியை, செஞ்சீனு அங்குலம் அங்குலமாக அபகரித்துக்கொண்டிருக்கும் வேளை இது. நம ஒவ்வொருவரின் உடலினின்றும் ஒவ்வொரு சொட்டு இரத்தத்தை உறிஞ்சி எடுப்பது போல் செஞ்சீனு நம் நாட்டு மண்ணை ஆக்கிரமிக்கிறது. அத்தகைய ஆக்கிரமிப்பு கண்டு, உள்ளம் கொதித்து, குழந்தைகள் முதல் வயோதிகர்கள் வரை குமுறிக் கொண்டிருக்கும் இந்த வேளையில் வீண் பேச்சுப் பேசி காலத்தைக் கழிக்க நமக்கு நேரமில்லைதான்.

என்றாலும், போர்முனையினின்றும் திரும்பிய நம் வேணு அவர்களின் கருத்துரைகளைக் கேட்கவேண்டும் என்ற ஒரே ஆர்வத்தில் இங்கு நாம் கூடியிருக்கிறோம். வேணுவைப்பற்றி நாம் நன்கு அறிவோம்! ஆகவே, சுடர் விளக்கின் முன் நின்று, 'இதுதான் விளக்கு!' என்று அறிமுகப்படுத்தாமல் நம் நாட்டின் ஒளி விளக்குகளில் ஒன்றான திரு வேணு

அவர்களை தயவு செய்து பேச வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

நகைச்சுவையாகப் பேசினாலும், உணர்ச்சியோடு சுருக்கமாகப் பேசிவிட்டு அமர்ந்தான் நண்பன்.

மற்றைய நண்பர்கள் எல்லோரும் ஆமோதித்தார்கள்.

அன்பிற்குமுண்டோ அடைக்கும்தாள்? வேறுவால் நண்பர்களின் மத்தியில் பேசாமலிருக்க முடியவில்லை

"நண்பர்களே, தமிழ்நாட்டு மகாத்மா, தியாக சீலர்—நம் தமிழகத்தின் முதலமைச்சர் அவர்கள் கூறியதுபோல், "திருடன் வீட்டிற்குள் நுழைந்துவிட்டான். வீட்டின் கதவைத் திறந்துவைத்தது யார்!" என்று நமக்குள் தர்க்கம் செய்யாமல், திருடனை விரட்டி அடிக்கவேண்டிய தருணம் இது.

இம்மாதிரிய வேளைகளில், நீ பெரியவனா, நான் பெரியவனா! உன் கட்சி பெரியதா? என் கட்சி பெரியதா? என்பன போன்ற அவசியமற்ற வாதப்பிரதிவாதங்கள் தேவையற்றது! மட்டுமல்ல, அப்படிப்பட்ட சில்லறை தகராறுகள் எதிரிக்கு மறைமுக ஊக்கமளிப்பதுமாகும்! ஆகவே, நாம் இப்பொழுது ஒன்றுபட்டிருப்பதைவிட மேலும் தீவிரமாக ஒன்றுபட வேண்டும்!

சொந்த செல்வாக்கை உயர்த்திக்கொள்ள நம்மில் ஒரு சிலர்—தலைவர்களாக விளம்பரம் பெற்றவர்கள், அடுத்தவரைத் தாக்குவதில் துணிந்து காலத்தை செலவிடுகிறார்கள்! இந்த செயல் அநாகரீகமானது! அர்த்தமற்றது அப்படிப்பட்டவர்களே உண்மையில் நாட்டுப்பற்று இல்லாதவர்கள் அப்படிப்பட்ட பெருந்தலைகயாளர்களே! உங்கள் வாயை மூடிக்கொண்டு சற்று காலம் சும்மாவாவது இருங்கள். இந்தியாவைக் காப்பாற்ற உங்களுக்குப் படை தர முடியாது! பணம் தர மனமில்லை! உங்கள் குடும்பத்தவரை, பிள்ளைகளைப் போர் முனைக்கு இதுவரைக்கும் அனுப்ப—

வில்லை. இம்மாதிரிய அறப்பணிகளைச் செய்யாமல் ஏன் வீணாகக் கத்தித் தொலைக்கிறீர்கள்? தயவு செய்து வாயை மூடுங்கள்! என்று அவர்களை நான் உங்கள் சார்பாகக் கேட்டுக்கொள்கிறேன். அம்மாதிரிப்பட்டவர்களைக் கண்டால் என் வேண்டுகோளைத் தெரிவியுங்கள்.

நம் எதிரிகள் அறத்தை மறந்து, அன்பை மறந்து, பண்பை மறந்து பாரதத்தில் ஆக்கிரமிப்பு செய்கின்றார்கள். நெருக்கடி முற்றி வருகிறது. இந்த வேளையில் நம் நாட்டு சமுதாய நலத்திட்ட அதிகாரி ஒருவர், "எனக்கு 'ஜீப்' தேவையில்லை! சைக்கிளில் சென்றே என் பணிகளை நல்ல முறையில் நிறைவேற்றுவேன். என்று என்னிடம் நேரில் கூறினார்! அவரை நான் பாராட்டவில்லை. காரணம் அவர் கடமையைச் செய்கிறார்! அவ்வளவுதான்.

அவரைப் பின்பற்றி எல்லா சர்க்கார் காரியாலய அதிகாரிகளும் உடல் உழைப்பையாவது தியாகம் செய்ய முன் வரவேண்டும்.

நம் நாட்டைப் பாதுகாக்க, எண்ணற்ற வீரர்கள் போர் முனையில் உயிரையே கொடுக்கும்போது, நமக்கு ஜீப்கள் எதற்கு? நடந்தே சென்று பணியாற்றுவோம். நம் நாட்டில் ஆயிரக்கணக்கான 'ஜீப்'கள் சர்க்கார் காரியாலயங்களைச் சுற்றி அதிகாரிகளை சோம்பேறிகளாக்கிவிட்டது. ஆம்; உண்மையைக் கூறுகிறேன்! நாட்டுப்பற்றோடு கூறுகிறேன். போலீஸ் இலாகாவுக்கும் செய்தி விளம்பர இலாகாவுக்கும், மருத்துவ இலாகாவுக்கும் 'ஜீப்' கள் தேவைதான். வேறு எந்த இலாகாவுக்குமே ஜீப் தேவையில்லை. இன்றே அத்தனை ஜீப்களும் போர்முனையில் அணிவகுக்கவேண்டும்.

வேணுவின் ஆவேசம் அதிகப்பட்டது! நண்பர்களின் ஆர்வம் உச்சநிலையை அடைந்தது.

"பாரதம் புனிதமான நாடு. நடுநிலைமையுடன் நடந்து காட்டும் நாடு ஒப்பற்ற தலைவர் மகாத்மா பிறந்த நாடு. அப்பெருமகனின் ஒப்பற்ற வாரிசு-மனிதருள் மாணிக்கம் நேருஜியை தலைவராகக்கொண்ட நாடு! இத்தகைய உண்மை

களை உணர்ந்த உலகம் நம் நாட்டைப்பற்றி புகழ்பாடுகிறது! அந்த அழியாப் புகழை உண்மையான பெருமையை நாம் காப்பாற்றியே தீருவோம்! எந்த ஒரு நாட்டிற்குமே கிடைக்காத தியாகசீலர்களைத் தலைவராகப் பெற்றிருக்கிறோம். ஆகவே நாம் வெற்றிபெறுவது வெள்ளிடைமலை!

செப்பு மொழி பதினெட்டுடையாள்—எனிற் சிந்தனை ஒன்றே உடையாள்! என்ற அமரகவியின் வாக்குப் பலித்து விட்டது! ஆம்! சீனரை விரட்டி, பாரத சுதந்திரத்தைக் காப்பாற்றவேண்டும்!' என்ற ஒரே சிந்தனைதான் தற்பொழுது நம்மிடம் வேரூன்றிநிற்கிறது!

'பொறுத்தது போதும்-பொங்கியெழுங்கள்!' என்ற நம் தலைவரின் முழக்கம் கேட்டு சிங்கங்களென சீறிக் கிளம்புகின்றனர், பாரத வீரர்கள்.

'நாற்பத்திமூன்று கோடி மக்களின் நட்பு வேண்டாம்! பாரத மண் மட்டும் போதும்!' என்று வெறிகொண்டு விரைந்துவரும் ஆக்கிரமிப்பாளர்களை முறியடிப்போம்! நமது எல்லைகளைக் காப்போம்! அவர்கள் நாட்டின் ஒரு அங்குல மண்கூட நமக்குத் தேவையில்லை.

நாமாக முறியடித்தாலும், அல்லது அவர்களாகவே பின்னடைந்தாலும் நமது எல்லையைக் கடந்துவிட்டால், சீனர்கள்—இனிமேலும் நம் நண்பர்களே! செய்த தவறு மறந்து மன்னித்துவிடுவோம்! அதுவே நமது பண்பு! 'யாதும் ஊரே யாவரும் கேளிர்!' என்று உலகத்திற்கே அறிவுரை வழங்கிய நாடு நம் நாடு! போர்க்குணமும், பேராசையும் பாரத மண்ணில் பிறந்த ஒரு புழுவுக்குக்கூட வராது. இந்த உண்மையை உலகத்தின் அறிஞர் குழு நன்றாக அறியும். ஆனால் ஏனோ செஞ்சீனா அறியவில்லை.

நண்பர்கள் என்று எண்ணி, சற்று நிதானமாக-மெத்தனமாக இருந்துவிட்டோம்! மாற்றார்கள் அதைக் கோழைத்தனமென்று எண்ணியிருப்பார்களேயானால் கண்டிப்பாக ஏமாந்துவிடுவார்கள்.

செஞ்சேனையைவிட பலம்பொருந்திய ஆங்கிலேயர்களால் நம் நாட்டை அதிக நாட்கள் ஆளமுடியவில்லை என்றால் இவர்கள் எம்மாத்திரம்?

சரித்திரம் தெரியாதவர்கள் நம்மீது சாடுகிறார்கள், மாஸ்கோவில் லெனின்கிராடுக்குள்ளே வரைக்கும் புகுந்த ஹிட்லரே, முகவரி இன்றி அழிந்துவிட்டான்! துரோகம் என்றுமே வென்றதில்லை. அறம் வென்றிருக்கிறது.

நமது தலைவர்களில் ஒருசிலர்கள், நம் நாட்டின் உரிமைப்போர், பல வருடங்கள் வரைக்கும் நீடிக்கும் என்று கூறுகிறார்கள்! ஏன் நீடிக்கவேண்டும்? நீடிக்கக்கூடாது! நீடிக்கும்படியாக நாம் விடக்கூடாது.' என்பது எனது சிந்தனையில் தோன்றிய சொந்த முடிவு! ஏன் நீடிக்கக்கூடாது என்பதற்கான காரணங்களை நான் விளக்கமுற்படவில்லை. அதிக நாள் நீடிக்கவிடக்கூடாது என்பதை மட்டும் உறுதியாகக் கூறுகிறேன்.

நாடெங்கும் நிதிக் குவியல்கள் மலையெனக் குவிகிறது. இருந்தாலும் போதாது! ஒவ்வொரு விவசாயியும், ஒவ்வொரு தொழிலாளியும் அல்லும் பகலும் உழைத்து உற்பத்தியைப் பெருக்கவேண்டும்! இம்மியும் சுயநலமின்றி, கிடைத்ததை எல்லாம் போர் புனைக்குப் பயன்படச் செய்ய வேண்டும் கட்சிகள் இணைந்ததைப்போல தனி மனிதர்கள் ஒவ்வொருவரும் இணைய வேண்டும். பொறுப்புடன் நடந்து கொள்ளவேண்டும். பொருமைக்காரர்களை விரட்டியடிக்கும் வரை ஓய்வு என்ற எண்ணத்தையே விட்டுவிடவேண்டும். எழுத்தாளர்களின் பேனா முனைகளெல்லாம் பாரத எழுச்சிக்கே பயன்படவேண்டும். 'காதல் கதைகளும், கவர்ச்சிப் படங்களும் தேவையில்லை! சாதலுக்குத் துணியவேண்டிய கட்டத்தில் காதல் கதைகள் எதற்கு?

சுதந்திரம் வாங்க நாம் பட்ட பாடு நம் எல்லோருக்கும் தெரியும்! அந்தப் போராட்டத்தில், எண்ணற்ற தலைவர்கள், மகாத்மாக்கள், சிதம்பரனார்கள், குமரன்கள், வ. வே. சு. ஐயர்கள், பாரதியார்கள் தங்கள் இன்னுயிரை ஈந்தனர்.

சும்மா கிடைத்ததல்ல நம் நாட்டின் சுதந்திரம்! இதை நாம் ஒவ்வொருவரும் உணரவேண்டும். ஆறிலும் சாவு, நூறிலும் சாவு! உயிர் என்ன வெல்லமா? அல்லது தங்கமும் பொன் னும், பொருளும் நிலையானதா! இல்லை! பண்பு நிலையானது! தியாகம் நிலையானது! அந் நிலையான அறச்செயல்களுக்குத் தயாராகுவோம். பொன்னையும், பொருளையும், உழைப்பை யும் வாரி வாரி வழங்குவோம்!

பத்திரிகைகளை விரித்தால் தேசப்பற்று ஊற்றெடுத்து ஓடும் செய்திகள் நம் உள்ளத்தில் சூடு ஏற்றுகிறது. பாரதப் பாதுகாப்பு நிதிக்காக ஒரு மாணவன் ரிக்ஷா இழுக்கிறான். செருப்புகளைத் துடைத்து பணம் திரட்டி அனுப்புகிறார் ஒரு சர்க்கார் ஊழியர்.

வியாபாரத்தில் இலாபமே வேண்டாம் என்று கூறுகிறார்கள் வியாபாரிகள்.

நம் நாட்டு வீராங்கனைகளெல்லாம், எந்தவித தியாகத்திற்கும் தயார் என்று தோள்கொட்டுகிறார்கள் பாரதத் தாய் பெற்றெடுத்த ஒரு பெண்மணி, தன் மாங்கல்யத்தையே, பாரத நிதிக்குக்கொடுத்துவிட்டாள். ஆம்! பெற்ற தாயினும் சிறந்தது, நம் பாரத நாடு! கொண்ட கணவன், கட்டிய மாங்கல்யத்திலும் சிறந்தது தாய்த்திரு நாடு!

ஓய்வுபெற்ற ராணுவ அதிகாரிகளெல்லாம் தாமாகவே போர்முனையில் பணியாற்ற முன்வருகிறார்கள்................ என்பன போன்ற தீரச் செயல்களை, தியாகச் செயல்களை நாம் தினமும் காண்கிறோம்! பாரதம் விழித்துவிட்டதின் அறிகுறிகள் இவை!

போர் முனையில், ஒவ்வொரு வீரனும் பொறுப் புணர்ச்சியோடு, நம நாட்டைக் காபபாற்றுகிறான்! அச்சம் என்பது, நம் வீரர்களுக்கு அணுவளவும் இல்லை. உயிரைத் துச்சமாக மதித்துப் போராடுவதைக் கண்டேன்.

லடாக்கில், நம் காவல் சாவடியைத் தாக்குவதற்கு எண்ணற்ற சீனர்கள் திரண்டு வந்தனர். எதிரிகளின்

கொடூரமான பீரங்கித் தாக்குதல்களில் நம்மிடமுள்ள தானாக இயங்கும் துப்பாக்கி பழுதாகிவிட்டது! அந்தப் பீரங்கிப் பிரயோகத்தில், இரண்டு பாரத வீரர்கள் வீர சொர்க்கம் புகுந்தனர். என்றாலும் எஞ்சியிருந்த ஒரே ஒரு வீரர் ஆக்கிரமிப்பாளரை எதிர்த்துப் போராடினார்! பல ஆக்கிரமிப்பாளர்களை கொன்று இந்திய வீரத்தை நிலைநாட்டினார். முடிவில் அவரிடமிருந்த துப்பாக்கிக் குண்டுகள் தீர்ந்துவிட்டன. என்றாலும் சீனரிடம் அகப்படவோ, அவர்களின் குண்டுகளுக்குப் பலியாகவோ இல்லை. பல குண்டுகளைப் பாளாக்கிவிட்டு, நாற்பதடி ஆழமுள்ள ஒரு ஓடையில் குதித்து தப்பிவிட்டார்! இப்படி எத்தனையோ வீர சாகசங்களைக் கண்களால் கண்டேன்.

என் உயிரனைய சகோதரர்களே! ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு! நான் இன்னும் சில நாட்களில் போர் முனைக்குச் செல்லவிருக்கிறேன். வெற்றி அல்லது வீர சொர்க்கம்! என்ற முடிவில்தான் செல்கிறேன். ஆகவே நான் உங்களுக்கு இப்போதே ஒரு வேண்டுகோள் விடுக்கிறேன்.

'படையில் சேருதல், இரத்ததானம் அளித்தல், தேசீயப் பாதுகாப்பு நிதிக்குப் பொருளுதவி தருதல், சகலவித வேற்றுமைகளையும் மறந்து ஒன்றுபடுதல்! எதிரிகளை முறியடித்தல்! இவைகளைத் தாரக மந்திரமாகக் கொள்ளுங்கள். வேறு எந்தவித சிந்தனைகளும் நமக்குத் தேவையில்லை! என்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடிக்கிறேன். வந்தே மாதரம்! ஜெய்ஹிந்த்!" ஒரு சொற்பொழிவாகவே நண்பர்களிடம் பேசி முடித்தான் வேணு. ஜெய்ஹிந்த்! என்ற எதிரொலி நண்பர்களின் சிங்கநாத முழக்கம்! பாரதத்தின் ஒன்றுபட்ட குரலுக்கு இலக்கணமாக லடாக் வரைக்கும் சென்று எதிரொலித்தது.

அடுத்து சபாபதி எழுந்தான்.

சகோதரர்களே, உணர்ச்சிக்கனல் தெறித்த வேணுவின் சொற்பொழிவு கேட்டு ஒவ்வொருவரும் உணர்ச்சிப்

பிழம்பாக சோதித்து நிற்கிறீர்கள். உண்மையிலேயே வேணுவின் சொற்கள் தேசீய—தியாகப் பண்பு நிறைந்தது.

அவர் வேண்டுகோளை நிறைவேற்றுவோமாக. தேசீய பாதுகாப்பு நிதிக்கு நம்மால் முடிந்ததைக் கொடுப்போம். "செய்க பொருளை செறுநர் செருக்கு அறுக்கும், எஃகு அதனிற் கூரியது இல்!" என்றார் நம் தெய்வப் புலவர்! நாம் கொடுக்கும் பொருள் நம் பகைவரை அறுத்து அழிக்கும்.

"கேட்பதும் உண்டோர் உறுதி கிளைஞரை நீட்டி அளப்பதோர் கோல்!" என்றபடி சீனரின் படை எடுப்பால் நம் பகைவரைத் தெரிந்துகொண்டோம்! அவர்தம் பண்பை அளந்து விட்டோம்! இனி எக்காலத்தும் நம்பமாட்டோம்! ஏமாற மாட்டோம்! சீனாவின் எந்தவித சமரசப் பேச்சும் சூழ்ச்சி நிறைந்ததாகவே இருக்கும்! நாம் இனி தாழ்ச்சியுள் தாங்குதல் நமக்கே நன்று.

நட்டார்போல நல்லவை சொல்லினும் ஒட்டார் சொல் ஒல்லை உணரப்படும்! என்பது தெளிவாகிவிட்டது. நம் தலைவர்களும் அதை நன்கு உணர்ந்துவிட்டார்கள். வெற்றிவரை போராடுவோம். வெற்றி நமக்கே சொந்தம். பாரதமாதாவுக்கு ஜே! என்று கூறி முடிக்கிறேன். வணக்கம்." சபாபதியின் பாராட்டுரையும் முடிந்தது.

நண்பர்களின் சார்பில் தேனீர் விருந்து நடந்தது.

வேணுவின் கருத்துரைகளில் கூடியிருந்த கூட்டம் மெய்மறந்ததுபோல், மணியும் தன்னை மறந்து நின்றான்.

வேணுவும், சபாபதியும், மணியும் நண்பர்களிடம் விடைபெற்று, அங்கிருந்தும் இறங்கி நடந்தார்கள்.

வேணுவைப் பெரிதும் பாராட்டிப் புகழ்ந்தான் மணி!

எதிர்பாராத விதமாக மணியைக் கண்ட வேணுவின் உள்ளம் ஆச்சரியத்தாலும் ஆனந்தத்தாலும் கூத்தாடியது. தேடிய மூலிகைக் காலில் சிக்கியதுபோலல்லவா, மணியின் தெரிசனம்? என்றாலும் நண்பர்கள் கூட்டத்தில் வைத்து

ஒன்றும் கேட்கமுடியவில்லை. வெளியில் இறங்கியதும் தன் எண்ணத்தை வெளியிட முனைந்தான் வேணு.

வேணு, சபாபதி, மணி மூவரும் ஒருவரோடொருவர் பிணைந்துகொண்டே நடந்தார்கள்.

"மணி, பாராட்டும் புகழ்மாலையும் இருக்கட்டும். முதலில் உன்னிடம் சற்று நேரம் பேசவேண்டும். உன்னை சந்தித்தது எனக்கு எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறது தெரியுமா? எத்தனையோ நாட்களாக........."

வேணு கூறி முடிக்கு முன்பே, ஆர்வத்தை அடக்க முடியாமல் பேச ஆரம்பித்தான் மணி.

"நானும் உன்னைப் பார்ப்பதற்காகவே இன்று இங்கு வந்தேன் மிகவும் முக்கியமான விஷயம்.........".

"முதலில் நான் சொல்வதைக் கேள். பிறகு நீ பேசலாம்!" என்று மணியிடம் கூறிவிட்டு, சபாபதியைப் பார்த்துச் சிரித்தான் வேணு.

சபாபதியும், வேணுவும் சிரிப்பதைப் பார்த்துத் திகைத்தான் மணி!

பிறகு வேணுவே பேச ஆரம்பித்தான்.

மூவரும் பேசட்டும். வேணுவின் நல்முயற்சி பலிக்கட்டும், மணியும் மனத்திருப்தி அடையட்டும். நாம், சிவ ஞானபுரம் வரைக்கும் சென்று வருவோம்! அதாவது முதலில்—கதை ஆரம்பித்த இடத்திற்கு.

---

## 33 பிரிந்தவர் கூடினர்

"தன்னைப் பார்த்த சாரதா, ஏன் இத்தனை வெறுப்போடு முகத்தைத் திருப்பிக்கொண்டுபோகிறாள்?" என்று தனக்குள்ளேயே எண்ணி, குடத்தில் தண்ணீரை நிரப்பிக்கொண்டு வீட்டிற்குள் வந்தாள், சகுந்தலா.

நிறை குடத்தின் நீரை "அண்டா"வில் கொட்டிவிட்டு அடுத்து 'தண்ணீர் எடுக்கப் போவதா, வேண்டாமா?' என்று சிந்தனையில் ஆழ்ந்தாள்.

சாரதாவைப் பிரிந்த அன்றிலிருந்து இன்று வரை அனுபவித்த துன்பங்கள், நீருக்கடியிலிருந்து எழும்பிவரும் குமிழிகளைப்போல ஒவ்வொன்றாக அவள் உள்ளத்தின் மேல் தட்டில் தோன்றின. சிறைக்காரனின் எதேச்சாதிகாரக் கொடுமையினாலும் பாரதத்தைக் காப்பாற்ற— தொண்டு செய்ய விரைந்த சகுந்தலாவின் அழகு விழிகளில் ஒன்று பார்வையற்றது! அதைக்கூட சரியாகக் கவனிக்காமல் தலையைத் திருப்பிக்கொண்டு நடந்துவிட்டாள் சாரதா.

தன் துயர வரலாற்றை உள்ளத்தின் அடித்தளத்திலேயே அடக்கி—அடக்கி வைத்து நித்தமும் செத்துக்கொண்டிருப்பதைவிட, தன் தோழி சாரதாவிடமே சொல்லி ஆசைதீர அழுது தீர்க்கவேண்டும் போல் இருந்தது சகுந்தலாவுக்கு!

"சாரதா, தன்மீது ஏன் இத்தனை வெறுப்பு காட்ட வேண்டும்?" என்ற கேள்விக்கு எவ்வளவு முயற்சித்தும் சரியான விடை அவளுக்குக் கிடைக்கவில்லை. என்றாலும், சாரதாவிடம் வெறுப்பைக் காட்ட மனம் துணியவில்லை. அவளுடைய அன்னை-வேறு செய்த உதவிகள் மறக்கக் கூடியனவா? ஏன்! சாரதாவும் எத்தனை நட்பாக இருந்தாள். இப்பொழுது ஏதோ காரணத்தை மனதில் வைத்துக்கொண்டு வெறுப்பைக் காட்டுகிறாள்; அவ்வளவுதான். அந்த வெறுப்பை நீக்குவதற்கு, நானே வலியச் சென்று பேசினால் என்ன?...... ...ஆம் அப்படித்தான் செய்யவேண்டும்! தன் துயரத்தைக் கூறுவதற்கு சாரதாவே ஏற்றவள்! அவளிடம் தான் என் இதயத்தை திறந்து கூறமுடியும். தன் சோக வரலாற்றை கேட்ட பிறகாவது, அவளுக்கு என்மீது இரக்கம் உண்டாகட்டும்! பலவிதமாக எண்ணி, ஒரு முடிவுக்கு வந்த சகுந்தலா, உடனேயே குடத்தை எடுத்துக்கொண்டு

புறப்பட்டாள். ஆம்; சாரதாவை சந்திப்பதற்கே கிணற்றடிக்குச் சென்றாள்!

சகுந்தலாவின்

இனி சாரதாவின் நிலையைப் பார்த்து வருவோம்.

எதிர்பாராதவிதமாக எதிரில் சகுந்தலாவைக் கண்டு, வெறுப்புடன் வந்த சாரதா, வீட்டிற்குள் வந்த உடன், கொண்டுவந்த தண்ணீரை வாசலின் முன் நின்ற ரோஜா செடியின் மூட்டில் ஊற்றினாள்.

என்னதான் வெறுப்பு இருந்தாலும், சகுந்தலாவைக் கண்ட அந்த ஒரு நிமிடத்தில, அவள் முகத்தில் தேங்கி நிற்கும் சோகத் திரையை நன்றாகக் கவனித்துக்கொண்டாள் சாரதா. வீட்டில்வந்த சாரதாவை அந்தக் காட்சி உண்மையிலேயே பெரிதும் கலக்கியது. இளமையிலேயே பழகிய பாச உணர்ச்சியால், 'சகுந்தலா ஏன் இப்படி வதங்கியிருக்கிறாள்'? என்ற எண்ணம் மேலோங்க நெஞ்சம் இரங்கியது.

அந்த எண்ணத்தை, கவலையை மறந்துவிட எண்ணி, குடத்தை கீழே வைத்துவிட்டு, புத்தகம் படிப்பதற்காக முனைந்தாள்.

தன்னிடமுள்ள புத்தகங்களை எல்லாம், 'படித்து முடித்துவிட்டோமே!' என்ற எண்ணம் வர, வேணுவின் பெட்டியைத் திறந்து, ஏதாவது புத்தகம் இருக்கிறதா? என்று தேடினாள் சாரதா!

"மருதிருவர்" என்ற புஸ்தகம் அவள் மனதை இழுத்தது. அதன் அட்டைப் படத்தின் கலை அழகையே பல விநாடிகள் ரசித்துவிட்டு, புத்தகத்தைத் திறந்தாள்.

திறந்த கரத்தைத் தழுவிக்கொண்டே புத்தகத்தினுள் இருந்து விழுந்தது ஒரு கடிதம்.

கடிதத்தில் முத்துமுத்தாக மிளிர்ந்த கையெழுத்தைக் கண்டு, 'சகுந்தலாவின் எழுத்து மாதிரி இருக்கிறதே!' என்ற எண்ணத்திலேயே கடிதத்தைப் படிக்க ஆரம்பித்தாள்.

கடிதம் வேணுவுக்கு எழுதப்பட்டிருந்தது. சகுந்தலாவின் முதல் கடிதமும் கடைசிக் கடிதமுமான அந்தக் கடிதத்தைப் படிக்கப் படிக்க சாரதாவின் தலைசுற்றியது. கண்களின் வழியாய்ஓடி வந்த கண்ணீர் கையிலிருக்கும் கடிதத்தை நனைத்தது.

"சாரதாவைப் பெண் பார்க்க வந்தவர்கள் என்னை மணக்க திட்டமிட்டு சித்தப்பா கருணாகரனுக்குக் கடிதம் எழுதியிருப்பதாகத் தெரிகிறது .. உடனே என்னைக் காப்பாற்றுங்கள்......நான் சகுந்தலாவுக்குத் துரோகம் செய்யத் துணியவில்லை ... ...!" என்ற வரிகள் சகுந்தலாவைத் "துரோகி" என்று எண்ணி வெறுத்துவந்த சாரதாவின் இதயத்தை கசக்கிப் பிழிந்தன! கண்ணீரால் தன் களங்கத்தை கழுவினாள். களங்கம் நீங்கவே "சகுந்தலாவைக் காண வேண்டும்! அவளிடம் மன்னிப்புக்கேட்கவேண்டும்". என்ற எண்ணம் மேலோங்கியது. அவள் சோகத்தின் காரணத்தை அறிந்து இயன்ற அளவு உதவவேண்டும்! என்ற நல்லெண்ணம் ஆவேசங்கொண்டது. உடனேயே குடத்தை எடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டு கிணற்றடியை நோக்கி நடந்தாள்.

எதிர்பார்த்து வந்த சகுந்தலா, சாரதாவைக்கண்டதும் கண்ணீர் மல்க, அன்பொழுக "சாரதா!" என்று அழைத்தாள். அதைப் போன்றே சாரதாவும், சகுந்தலாவை அழைத்தபடி ஆவலோடு அருகில் வந்தாள்!

இருவரும், ஒருவரை ஒருவர் அணைத்துக்கொண்டனர். பிரிந்தவர் கூடினால் பேசவும்வேண்டுமோ?......... ...... பேசவும் முடியுமோ?—சற்றுநேரம் இருவராலும் ஒன்றுமே பேசமுடியவில்லை!

ஒருவழியாக நிதானமடைந்த சகுந்தலா, சாரதாவைப் பார்த்து, "என்னிடம் உனக்கு இவ்வளவு வெறுப்பு ஏன்? அந்த கடவுளுக்குத்தான் கண்ணில்லாமல் என்னை துன்புறுத்துகிறார் என்றால், எனக்கு ஆதரவான—ஒரேஒரு

சகோதரியான நீயுமா என்னை வேதனைக்குள்ளாக்குகிறாய்? என் மனமாற நான் உனக்கு ஒரு குற்றமும் செய்யவில்லை. என் சோகக் கதையைக் கேட்டால் உன் உள்ளம் சுக்கு நூறாக வெடித்துவிடும்! அதை சொல்லித் தீர்க்காவிட்டால் என்னால் தாங்கமுடியாது ஆகவே உன்னிடம் சொல்லிவிட வேண்டும், என்றுதான் உன்னைத் தேடிவந்தேன்" என்றாள்.

"நீ ஒன்றுக்கும் கவலைப்படாதே! உன்னிடம் எனக்கு வெறுப்போ கோபமோ கிடையாது. உன்னைக்கண்டு, மன்னிப்புக் கேட்கவேண்டுமென்றுதான் வந்தேன். உன் எண்ணம் நிறைவேறிவிட்டாலும், கண் நிறைந்த கணவனோடு ஆனந்தமாக இருப்பாய்! என்று நம்பினேன். ஆனால் உன் முகத்தின் சாயலும், உடலின் மாற்றமும் என் எண்ணத்தைப் பொய்யாக்கிவிட்டது. வா, வீட்டிற்குப்போய் சாவதானமாகப் பேசலாம். உன் வரலாற்றையும் என்னிடம் சொல்லியே ஆக வேண்டும். என்று அன்போடு கூறி தன் வீட்டிற்கு சகுந்தலாவை அழைத்து வந்தாள் சாரதா.

வந்ததும், தன் வாழ்க்கை வரலாற்றைக் கூறலானாள் சகுந்தலா. கூறும்போதே சில இடங்களில் அழுதாள்! சில இடங்களில் வீர உணர்ச்சி பெருக்கெடுத்தது! சகுந்தலாவின் கண்ணீர் வடியும் முகத்தை உற்றுப்பார்த்து ஏங்கினாள் சாரதா. பால் வடியும் அவள் முகம் ஒட்டி உலர்ந்து பரிதாபமாகக் காட்சியளிப்பதைக் கண்டு மிகவும் மனம் வருந்தினாள். சகுந்தலாவின் கண்பார்வை கெட்டு விட்டதறிந்து தேம்பித்தேம்பி அழுதாள்.

தோழியர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் ஆறுதல் கூறிக்கொண்டனர்.

மரத்திலிருக்கும் மாங்கனி, பார்ப்பதற்குப் 'பழ—பழ' வென்று அழகாக காட்சி அளிக்கிறது. அதே கனி அருகில் ஓடும் ஆற்று வெள்ளத்தில் விழுந்தால் எத்தனையோ பள்ளங்கள்-மேடுகள், மரங்களின் வேர்கள், பாறைகள், முதலானவற்றில் மோதி, சின்னாபின்னப்பட்டுக் காண்பதற்கு

விகாரமாகி விடுகிறதல்லவா? அதைப்போன்றே துள்ளி விளையாடும் புள்ளிமானைப் போல கவலையற்று—வெள்ளை உள்ளத்துடன் இருந்த சகுந்தலாவின் மாம்பழக் கன்னங்கள், அவளுக்கு ஏற்பட்ட இல்வாழ்வென்னும் ஆற்றில் விழுந்து, மணியின் ஆக்கிரமிப்பென்னும் அலைகளில் சிக்கி, கவலை-துன்பமெனும் பாறைகளில் மோதி, சேவை, தொண்டு என்ற வேர்களில் ஊறாய்ந்து ஓய்ந்து உலர்ந்து பரிதாபமாகக் காட்சி அளித்தது.

தன் வரலாற்றைச் சுருக்கமாகக் கூறிமுடித்த சகுந்தலா, சாரதாவைப் பார்த்து, "என் திருமணத்தன்று இரவே, என் கணவரிடம் கேட்ட அந்தக் கேள்வி தான் என்னை இந்த நிலைக்கு ஆக்கிவிட்டது. அதைப்பற்றி நான் அவ்வளவாகக் கவலைப்படவில்லை! ஆனால் உனக்கு இன்னும் மணமாகவில்லையே!' என்று நினைத்தே நான் கவலைப்படுகிறேன். கடன் வாங்கியும் பட்டினி, கலியாணமாகியும் வாழாவெட்டி என்று ஆகிவிட்டது என் நிலைமை. நீயாவது நல்வாழ்க்கை வாழவேண்டும் என்பதே என் விருப்பம். எனக்கு வாழ வேண்டும் என்ற ஆசை அறவே அற்று விட்டது. யாருக்கும் வேண்டாத இந்த உடலை வீணாக சுமந்து அலைய வேண்டுமா?…" உணர்ச்சி வயப்பட்டுக் கூறினாள்.

"சகுந்தலா என்னை மன்னித்துவிடு!' என்ற திடீர்க் குரல் கேட்டு, தோழிகள் இருவரும் வாசல் பக்கம் திரும்பினார்கள். அங்கே அவர்கள் கண்ட காட்சி அவர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தின.

"ஆச்சரியப்படாதே சகுந்தலா! நீ யாருக்கும் வேண்டாதவளல்ல! இந்த உலகத்திற்கே வேண்டியவள். விதி நம்மை விலக்கிவைத்தது. வேணுவும் என் நண்பன் ஆறுமுகமும் நம்மை ஒன்று சேர்த்து வைத்தார்கள்! எல்லா விபரங்களையும் வேணுவிடமிருந்து அறிந்தேன். என்னை மன்னித்துவிடு சகுந்தலா! வீண் பிடிவாதத்தில் உன் வாழ்வை இருளாக்கிவிட்டேன். உன் உள்ளன்பை உணரா

மல் உன்னைக் கொடுமைப்படுத்தினேன். என்னை மன்னிப் பாயா ?" மணியின் சொற்கள் சகுந்தலாவை திகைக்க வைத்தன.

"அத்தான்! நீங்கள் தான் என்னை மன்னிக்க வேண்டும்! அடித்தாலும், உதைத்தாலும் உங்கள் காலடியிலே கிடக்காமல் உங்களை விட்டுவந்த பாவி நான்!" என்றபடியே மணியின் கால்களில் விழுந்தாள் சகுந்தலா.

மணியும், அருகில் நின்ற வேணுவும், சபாபதியும் இந்தக் காட்சியைக்கண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தனர்.

சாரதாவுக்கு ஒன்றுமே ஓடவில்லை! நிற்கவும் முடியாமல், நடக்கவும் முடியாமல்—ஆச்சரியமும், ஆனந்தமும் கூத்தாட சிலையாக நின்றாள்.

சகுந்தலா நான் உன்னிடம் வாக்குறுதி தந்தபடி மணியை கொண்டுவந்து கொடுத்துவிட்டேன். என் கடமையில் ஒரு பகுதி முடிந்துவிட்டது! இனி உங்கள் வாழ்வு சீரும் சிறப்பும் பெற்றுத் திகழட்டும் ...என்னதான் நீ துன்பம் அனுபவித்திருந்தாலும் மணியை மன்னிப்புக் கேட்க வைத்துவிட்டாயல்லவா? நீ வீரப்பெண்மணிதான"! சிரித்துக்கொண்டே — சாரதாவைப்பார்த்தான் வேணு

வேணுவின் கிண்டல் பேச்சு எல்லோரையும் சிரிக்க வைத்தது!

"சபாபதி! அடுத்து உன் திருமணத்தையும் முடித்துவிட வேண்டியதுதானே? அருகில் நின்ற சபாபதியைப் பார்த்துக் கூறினன் வேணு.

அந்த சொற்கள், சிரித்தவர்கள் அத்தனைபேருக்கும் ஒரு திடீர் 'பிரேக்' போட்டது!

"என்ன? எல்லோரும் இப்படி பதுமைகளாகிவிட்டீர்கள். என் தங்கை—சாரதாவின் திருமணத்தையும் இப்பொழுதே முடித்துவிட்டால் நல்லது. அதிலும் மணியின்

முன்பாக முடிப்பது மிகவும் பொருத்தமானது. அப்படித் தானே சாரதா?, உனக்கும் சம்மதம் தானே?

வேணுவின் திட்டம் அவளுக்கு சரியாக புரியவில்லை! நாணத்தால் முகம் சிவக்க, "போங்க அண்ணு, எப்பொழுது என்ன பேசவேண்டும் என்றில்லாமல்......" சொல்லி முடிக்காமலே வீட்டினுள் - சமையலறைக்கே சென்று விட்டாள் சாரதா!

"என்ன வேணு ...நீ... என்ன சொல்கிறாய்?...... ஒன்றும் புரியவில்லையே!" திக்கித் திணறி - உளறினன் சபாபதி!

"ஆகா என்ன நடிப்பு என்ன துடிப்பு! நீயெல்லாம் திரைப்படத்தில் நடிக்க வேண்டியவன். புரியவில்லையா உனக்கு? பூனை கண்ணை மூடிவிட்டால் பூலோகம் இருண்டு விடுமா?, அன்று வீரக்கண்ணகி படித்துக்கொண்டிருந்தாயே... அப்பொழுது நீ பேசிய வசனம் இன்னமும் என் காதுகளில் வட்டமிடுகிறது. எல்லாம் எனக்குத் தெரியும், 'காலம் வரட்டும்' என்றுதான் காத்திருந்தேன்!" என்றான் வேணு.

திக்பிரமைப் பிடித்தவன் போல் நின்றான் சபாபதி.

ஓகோ விஷயம் முற்றி முடிவைத்தான் எதிர்பார்க்கிறான் போலிருக்கு! உம, மௌனம் சர்வசம்மதம். மணமுடித்துவிட வேண்டியதுதான்!" என்றான் மணி.

"மணமுடிக்கிறீர்களா? யாருக்கு எப்பொழுது? இங்கே என்ன கூட்டம்! நான் ஒருத்தன் இருக்கிறேன். என்றுகூட ஞாபகம் இல்லையா?" அதிகாரத்தோரணையில் அடித்துப் பேசிக்கொண்டே உள்ளே வந்தார் சிதம்பரநாதனு.

எல்லோரும் ஒருமுகமாக சிதம்பரநாதனுவைத் திரும்பிப்பார்த்து அடக்கமாக ஒதுங்கி நின்றார்கள்.

"உம்..... வேறொன்றுமில்லை ......நம்ம சாரதாவின் திருமணம் பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம், அவ்வளவு தான்", என்றான் வேணு.

"ஓகோ!" என்று கூறியபடியே திரும்பிய சிதம்பர-நாரு, "ஆ!, இது யாரு?......மணியா? மணி, சகுந்தலா .. பேஷ். ஏது தம்பதி சமேதராக வருகை?...........ஆமா, வேணு, சாரதாவுக்கு மாப்பிள்ளை யாரு?" சாவதானமாகக் கேட்டார்.

"வேறு யாரும் இல்லை அப்பா, சபாபதி தான்!"

"சபாபதியா? எல்லாம் நீங்களே முடிவு செய்தாய்விட்டதா? . .. சரி, உன் விருப்பம் எதுவோ, அப்படியே நடக்கட்டும்!" சம்மதத்தைக் கொடுத்துவிட்டு, சபாபதியைப் பார்த்தார் சிதம்பரநாரு. அவரைப் பின்பற்றி அங்கு நின்ற எல்லோருமே சபாபதியை நோக்கினார்கள்.

"வேணு, நீயே எல்லாவற்றையும் பேசி, முடிவும் தெரிவித்துவிட்டாய்! என் சம்மதத்தைக் கேட்க வேண்டாமா?" சபாபதி என்னவோ சாதாரணமாகத்தான் கூறினான். ஆனால் அங்குநின்ற அத்தனை பேரும் பெரிய அதிர்ச்சிக்கு ஆளானார்கள். சாரதாவின் இதயத்தில் யாரோ ஊசியால் குத்துவதுபோல் இருந்தது.

"என்ன சபாபதி, நீ என்ன சொல்கிறாய்?" சற்று தாழ்ந்த குரலிலேயே கேட்டான் வேணு

"அதிர்ச்சி அடையாதே! எனக்குத் திருமணத்தை முடித்து வைத்துவிட்டு நீ எங்கே செல்ல எண்ணுகிறாய்?" எதிர்க் கேள்வி போட்டான் சபாபதி.

"ஏன் உனக்குத் தெரியாதா? கடமை அழைக்கிறது. கயவர்களை முறியடிக்கப் போய்விடுவேன்."

சபாபதி உரக்கச் சிரித்தான்.

"வேணு உனக்கு மட்டுந்தான் கடமை இருக்கிறதா? எனக்கு அந்த உணர்ச்சி இல்லையா? உன் நண்பன்தானே நானும்." சினமாகக் கேட்டான் சபாபதி.

"நண்பா, நீ கடமை மறந்தவன் என்று நான் கூற வில்லை. திருமணத்தை முடிந்துவிட்டு ... " வேணு பேசி முடிக்குமுன் மணி பேசினான் "ஆமாம், திருமணத்தை முடித்துவிட்டு. விடுமுறை முடிந்ததும் உன் கடமையை நிறைவேற்ற வேண்டாம் என்று சொல்ல நாங்கள் என்ன கோழைகளா?"

"மணி, மாற்றான் நம் மண்ணில் கால் வைத்துவிட்ட இந்த வேளையில், அன்னையின் தலைமுடியை அன்னியன் பிடித்திருக்கும் இந்த சூழ்நிலையில், எந்த மனிதனாவது மணக்கோலம் கொள்வானா? தாயின் மானம் பறிபோவதைக் கண்டும், அதற்குக் காரணமானவனின் கரத்தைத் துண்டிக் காமல் கல்யாணம் செய்யச் சொல்கிறாயா? தாய் நாட்டிற்கு ஆபத்து வந்திருக்கிற வேளையில் அதைத் தடுக்க முற்படா மல், சுயநலத்தை மனதிற்கொண்டு உள்நாட்டு முற்போக் காளர்களை — முற்போக்கு சக்திகளைத் தூற்றுவதையே வேலையாகக்கொண்டு மகிழ்கிறார்களே, அவர்களோடு என்–னையும் சேர்த்துவிட்டாயா? நான் வேணுவின் நண்பன்! வேணுவைப்போல் பெரிய தியாகங்கள், தொண்டுகள் செய் யாவிடினும் அவன் நண்பன் என்ற பெயரையாவது காப்-பாற்ற முடியாதவனாகவா இருக்கிறேன்? சாரதாவை நான் உயிராக விரும்புகிறேன். என் உள்ளக் கோயிலில் நிரந்தர தெய்வமாக வைத்திருக்கிறேன். அவள் எனக்குக் கிடைப் பது நான் செய்த பேறு! கரும்பு தின்பதற்கு உங்களுடைய சிபார்சு தேவையா? எத்தனை ஜன்மங்கள் எடுத்தாலும் சபாபதியும் சாரதாவுமே தம்பதிகள்! சாரதாவை மணப்-பேன். எப்போது? பாரத அன்னைக்கு நேர்ந்த ஆபத்தை அடித்துத் துரத்திவிட்டு, அவள் மேனியில் கரம்வைத்த கல மனம் படைத்தவர்களின் குருதியால் களங்கம் கழுவி விட்டு, என் அன்னைக்கு வெற்றிமாலை சூடி வீர வணக்கம்

செய்து, அவள் மனப்பூர்வமான ஆசியைப் பெற்று வரு-
வேன். உடனேயே சாரதாவின் கழுத்தில் மணமாலை சூடு
வேன்! இது சத்தியம். என் வருங்கால மனைவி சாரதாவே
என் உறுதியை வரவேற்பாள். தியாகி சிதம்பரதாணு பெற்
றெடுத்த செல்வம், வீரன் வேணுவின் தங்கை, சபாபதியின்
காதலி! சாரதா சாதாரணப் பெண் அல்ல! அவளையே
கேட்டுப்பாருங்கள் என் முடிவு 'சரிதானா' என்று!"

"அத்தான்! இதற்கு என்னிடம் கேட்கவேண்டுமா?
என் விருப்பமே அதுதான்! அன்றே நான் அண்ணாவிடம்
கூறிவிட்டேன்! அண்ணாவும் சம்மதம் அளித்துவிட்டார்.
இப்பொழுது வேண்டுமென்றே தங்களை சோதனைசெய்தார்,
அவ்வளவுதான்! சென்று வாருங்கள்! மாற்றானை வென்று
வாருங்கள். எத்தனை காலமானாலும் காத்திருப்பேன். இல்லை;
காத்து இருப்பேன் என்றால் சோம்பேறியாக இருக்கமாட்
டேன்! என்னால் முடிந்த அளவு நாட்டிற்குத் தொண்டு
செய்வேன். ஏன்? பெண்கள் படையே திரட்டுவேன்!"
வீராங்கனையாக வீறிட்டெழுந்தாள் சாரதா.

"சபாபதி என்னை மன்னித்துவிடு. உன் விருப்பத்தை
அறியவே முயன்றேன்!" மன்னிப்புக் கேட்டான் வேணு.

ஒன்றும் புரியாமல் திகைத்த சிதம்பரதாணுவுக்கு
விஷயம் ஓரளவுக்குப் புரிந்தது.

"அப்பா! எங்களுக்கு விடைகொடுங்கள்! நாங்கள்
சென்று வருகிறோம்! ஆசி கூறுங்கள் அப்பா!" தலை
குனிந்து கரம் கூப்பி நின்றான் வேணு.

"இன்றே போகவேண்டுமா வேணு!" சிதம்பரதாணு
வின் நா தழுதழுத்தது!

நாளை போகலாமே வேணு என்றான் மணி.

"இல்லை, எனக்கு நாளையோடு விடுமுறை தீர்ந்து விட்-
டது. சபாபதிக்கு இன்னும் நான்கு தினங்கள் இருக்கிறது.
என்றாலும், சென்னையில் அவனுக்கு வேலை இருக்கிறது.

நாங்கள் இருவரும் இப்போதே செல்லவேண்டும். மணி, உனக்குப் புதுவாழ்வு கிடைத்துவிட்டது. வாழ்க்கையில் பெரிதும் அனுபவமடைந்து நாட்டிற்காக அரிய தொண்டுகள் ஆற்றினள் சகுந்தலா! அவளை நிம்மதியாக வைத்துக் காப்பாற்று! உன் பேனமுனை எதிரிகளைத் தாக்கும் ஆயுதமாக மாறட்டும்.

நாளை என்னோடு நூறு பேர்களுக்கு மேல் வருகிறார்கள். இப்படியே பாரதத்தைப் பாதுகாக்கப் பல்லாயிரக் கணக்கானோர், குமரி முதல் இமயம் வரை எழுச்சிபெற்று தொண்டாற்ற துடித்து விரைகிறார்கள். வெற்றிமாலை காத்திருக்கிறது. வாழ்ந்தால் நாட்டத்திருமேன்று கோடியும் சுதந்திரர்களாய் வாழ்வோம்! வீழ்ந்தால அத்தனை பேரும் பிணமாக வீழ்வோம்! என்று கச்சைகட்டி களத்திலே இறங்கி விட்டது பாரதம்.

நாட்டின் நலம் விரும்பும் நல்லோர்களின் கருத்துரையை, நான் செல்லும் வழியெல்லாம் சொல்லிக்கொண்டே செல்வேன்! மண்ணாசைப்பிடித்து, மமதை கொண்டு நம்மை அடிமையாக்க எண்ணும் அன்னியன் எவனுமே நம் பாரதத்தில் அடி எடுத்து வைக்கக்கூடாது. இதுவே நம் நாட்டுக்கு நான் விடுக்கும் வேண்டுகோள். இதை எல்லோரிடமும் பறைசாற்று!........." கொதிக்கும் எரிமலை என முழங்கி தன் தந்தையின் முகத்தைப்பார்த்து "ஆசிகூறுங்கள் அப்பா." என்றான் வேணு.

தன் மகனின் தாய்நாட்டுப்பற்று கண்ட சிதம்பரநாதனு "அப்பா — வேணு, உன்னை நான் இப்போதுதான் சரியாகப் புரிந்துகொண்டேன். வேணு நீ ஒரு தமிழ் மகன் மட்டுமல்ல, ஒரு பாரதப் புதல்வனும் கூட என்பதை நிரூபித்துவிட்டாய். எனக்குப் பெருமை அளித்துவிட்டாய். உன்னை பெற்று வளர்த்த நான் பெரும் பாக்கியசாலி. சென்றுவா மகனே! உன்னை நான் மனமாற ஆசீர்வதிக்கிறேன். இமயத்தின் அருகில் நீ சென்று எதிரிகளைத் தாக்கும்பொழுது

அங்கு முச் சின்னங்களைப் பொறித்து வெற்றிவாகை சூடி-வந்த வீரத் தமிழ் வேந்தர்களின் ஆத்மா, உன் வீர உணர்ச்சியை அதிகப்படுத்தும். பிறந்த பொன்னாட்டுக்குப் பெருமை தேடும் வகையில் வீரப் போர் புரிந்து எதிரிகளை முறியடித்து திரும்பு." வீர வாலிபனாக மாறி வீர உரை-யாற்றி ஆசி கூறினார் சிதம்பரநாதர்.

அதே வேளையில்—சிவஞானபுரத்தின் மக்கள் எல்லோரும் வேலனைப் பார்ப்பதற்காக ஒவ்வொருவராக வந்து பெருங்கூட்டமாகக் கூடிவிட்டார்கள்.

"அண்ணா, இதோ இந்த பெட்டியையும் கொண்டு செல்லுங்கள். இதனுள் என் நகைகள் எல்லாமே இருக்-கிறது. தியாக ஒளி, நாட்டின் வழிகாட்டி, நம் முதலமைச்சர் அவர்களிடம் கொடுங்கள். இதனுள் இருக்கும் தங்க நகைகள் ஒவ்வொன்றும் எதிரிகளுக்கு எமனாக மாறி பாரதத்தைப் பாதுகாக்கட்டும்!" தியாகத்தின் சுடர்விளக்காக ஒளிவீசி, தன் நகைகள் முழுவதையும் கொடுத்தாள் சாரதா.

"சபாஷ்! சாரதா. உனக்குப் பொன்னகை தேவையில்லை! புன்னகை ஒன்றே போதும். அதை மனதில் நிறுத்தியே மாற்றானை முறியடிப்பேன்!" ஆவேசமாகக் கூறினான் சபாபதி.

"அண்ணனுக்கேற்ற தங்கை!" என்று மனமாற பாராட்டினார் சிதம்பரநாதர்.

சாரதாவின் தியாகம் கண்ட ஊர் மக்கள் எல்லோரும் அவர்கள் கழுத்திலும் கரங்களிலும் கிடந்த நகைகளையெல்லாம் வேலனிடம் கழற்றிக் கொடுத்தார்கள்! பூரிப்போடு பெற்றுக்கொண்டான் வேலன்.

"காதலைவிட கடமையே பெரிது!" என்று முழக்கினான் சபாபதி!

"ஆம்! அதை அன்னியர்களுக்கும் விருபிப்போம்!

"எல்லோருக்கும் வணக்கம்! வருகிறேன்!" கரங் கூப்பி வணக்கம் தெரிவித்துவிட்டு, வீர நடை நடந்தான் வேணு! அவனைப் பின்தொடர்ந்தான் சபாபதி. சிவஞானபுரமே அவர்களுக்கு ஆசி கூறியது.

வேணுவின் கரத்தில் தேசியப்பாதுகாப்பு நிதிக்கென காத்திருக்கும் நகைப் பெட்டி! உள்ளத்தில் தேசியப்பற்று, வீர உணர்ச்சி! உடலிலே துடிப்பு! எண்ணத்தில 'மாற்றானை முறியடிக்கவேண்டும்!' என்ற ஒரே உறுதி! நடையிலே வேகம்!

வேணுவும், சபாபதியும் நடந்தார்கள். அவ் வீரப் புதல்வர்களின் உள்ளத்தில வீர உணர்ச்சி ஊற்றெடுத்தோடியது. அவர்களின் மனக்கண்களில், காந்திஜி, லாலா லஜபதிராய், வீர பகவத்சிங், வீரசிங்கம் சுபாஷ்சந்திரபோஸ் கட்டபொம்மன், கப்பலோட்டியத் தமிழன், திருப்பூர் குமரன், பாலகங்காதரத் திலகர், போன்ற தியாக மணிகள் தோன்றினார்கள்!

என்றாலும் பார்வைகள் மட்டும் வேணுவும் சபாபதியும் சென்ற திசையிலேயே நிலைத்துநின்றன! வேணுவும் சபாபதியும் மறைந்துவிட்டார்கள் என்றாலும், "பாரத மாதாவுக்கு ஜே! மகாத்மா காந்திக்கு ஜே!" என்ற சிவஞானபுரம் மக்களின் வீர முழக்கம், அவர்களின் காதினில் தெளிவாகக் கேட்டது.

"ஊழையும் உப்பக்கம் காண்பார் உலைவு இன்றித்
தாழாது உஞற்றுபவர்"

# 34 நீதி வழங்கட்டும்

மண்ணாசைகொண்டு, பிறமண்ணை ஆக்கிரமிப்பதற்காக நடத்தும் போர், விளையாட்டுக்காக நடத்தும் போர், தற்காப்புக்காக நடத்தும் போர்—என—போரை மூன்று வகையாகப் பிரித்தான் மேனாட்டு கலைஞன் ஒருவன்.

எத்தனை வகையாகப் பிரித்தாலும் போரினால் ஏற்படுவது அழிவே! எந்த வகைப் போரை எடுத்துக்கொண்டாலும், வெற்றியோ—தோல்வியோ, போரின் முடிவு நஷ்டக் கணக்கில்தான் வந்துநிற்கும்.

ஒரு குப்பி தேனை எடுப்பதற்கு, மரத்தில் ஏறி பல ஈக்களைக் கொன்று, தேனை எடுத்து இறங்கும் பொழுது கீழே விழுந்து காலையும் ஒடித்துக்கொண்டு 'தேன் கிடைத்துவிட்டது!' என்று கூறுவதற்கு ஒப்பாகும், பிற நாட்டு மண்ணில், ஒரு சில மைல் எடுத்துவிட்டோம் 'என்பதும்!'

புன்னை மரங்கள் அடர்த்தியாக நிற்கும் இடத்திற்குப் போயிருக்கிறீர்களா? அங்கு—புன்னை மரத்தின் மூட்டில் புற்று வளர்த்து, ஒரு ஜாதி கறுப்பு எறும்புகள் குடியிருக்கும்! அதே போல சற்று தூரத்தில் வேறொரு புற்றைச் சார்ந்த அதே ஜாதி எறும்புகள் இருக்கும்!

சில வேளைகளில் இந்த இன எறும்புகளுக்குள்ளும் போர் நடப்பதைப் பார்க்கலாம்! போர் மிகத் தீவிரமாக இருக்கும். ஒரு கூட்டிலுள்ள எறும்புகள், அடுத்த கூட்டிலுள்ள எறும்புகள் வந்ததும் அவைகளை கடித்து பிய்த்து உதறுவதையும், தூக்கியெறிவதையும் பார்த்தால், 'இது என்ன எறும்புப் போரா?' அல்லது யானைப் போரா?' என்று தான் தோன்றும். போர் முடிவில் புன்னை மரத்தின் மூட்டைப் போய்ப் பார்த்தால், உண்மையிலேயே பரிதாபமாக இருக்கும்! கால் இழந்தவைகள்—தலையில்லாமல் துடித்துக்

கொண்டு கிடப்பவைகள். இப்படியே, ஒரே இன எறும்புகளும், சித்திரவதை அனுபவித்து சிதறிக் கிடப்பதைக் காணலாம்!

ஆம்; இதுதான் போர்களக் காட்சி. "ஏ மானிடர்களே போர் தொடங்கினால், உங்களுக்கும் இதே முடிவுதான்." என்று உணர்த்தவே எங்கும் நிறைந்த இறைவன் இம்மாதிரிய எறும்புகளைப் படைத்துப் பார்க்க வைத்தானோ என்னவோ.

போரின் முடிவு, அழிவு நஷ்டம்! இதை யாரும் மறப்பதற்கில்லை இந்த உண்மையை நன்கு உணர்ந்த வல்லரசுகள் அதற்கு இடங்கொடுக்காமல் — இயன்ற அளவு விட்டுக் கொடுத்து வாழுகின்றன

உலக அரங்கில் பாரதம் ஒரு தனிப் பெருமைவாய்ந்த நாடு. அறத்தின் வழிவந்த நாடு. அஹிம்சைப் போரிலேயே-சாத்வீகத்திலேயே சுதந்திரம் பெற்ற நாடு. போர் என்ற சொல்லையே விரும்பாத நாடு. ஆகவேதான், சுதந்திரம் பெற்ற உடனேயே, நடுநிலைமை வகித்து, உலகிற்கே பஞ்சசீலத்தையும், சமாதானத்தையும் உபதேசித்து வருகிறது. சுதந்திரமெனும் குழந்தைப் பிறந்த உடனேயே உலக வாழ்வுக்கு வழிவகுத்துக் கொடுத்தது. இந்தியாவில் பிறந்த குழந்தை வேறு எதற்கு வழிகாட்டும்?

இன்றைய உலகத்திற்கு மிகவும் தேவையானது சமாதானம்தான். 'சமாதானம்' என்ற எண்ணம் சற்றே மாறி விடினும், அழிவுக்கு வித்திட்டது போன்றாகும்.

பண்டையப் போர்களில், போர் நடந்துகொண்டிருந்தாலும் அறம் கடைப்பிடிக்கப்பட்டது. ஆமாம்; போர்தான் என்றாலும் அதற்கும் ஒரு சட்டம்-ஒரு வரம்பு இருந்தது. பாரதத்தைப் பொறுத்த அளவில் அத்தகைய அறம் போற்றப்பட்டது இராமனை எதிர்த்துப் போர் செய்த இராவணனின் ஆயுதங்கள் எல்லாம் தீர்ந்து, நிராயுதபாணியாகி விட்டான். அந்த நிலை கண்ட இராமன், 'இன்று போய் நாளை

வருக!'' என்று போரை நிறுத்தி, இராவணனை வழி அனுப்புகிறான். எதிரி நிராயுதபாணியாகி விட்டதால் 'இன்று அரண்மனை சென்று, ஓய்வு எடுத்து, நாளை ஆயுதங்களுடன் திரும்புக வரட்டும்!' என்று எண்ணிய இராமன் வழியனுப்புகிறான். இல்லையேல், உடனே போய் ஆயுதங்களுடன் வா! என்றாவது சொல்லியிருப்பான். நாளை வர, என்று கூறியதிலிருந்து, எதிரியாக இருப்பினும் அவனுக்கும் ஓய்வு தேவை என்று எண்ணிய இராமனின் பெருந்தன்மையைக் காட்டுகிறது இராமாயணம்.

ஊமைத்துரையை எதிர்த்துப் போரிட்ட ஆங்கிலேயத் தளபதி, மாலையில் போர் நின்றதும், இறந்து கிடக்கும் தன் வீரர்களை எடுத்து அடக்கம் செய்ய ஊமைத்துரையிடம் அனுமதி கேட்டான். ஊமைத்துரையும் ஒப்புக்கொண்டு அனுமதி கொடுத்தான். இவையெல்லாம் அந்தக் காலத்துப் போர் அறம்!

ஆனால் இக்'காலத்தில் போருக்கும் அறத்திற்கும் உறவே கிடையாது. அக்'காலத்தில் தூது அனுப்பி, போர் பிரகடனம் செய்து, நேருக்கு நேர், ஒருவனுக்கு ஒருவன் என்ற நீதியில் போர் நடந்தது. காலை இத்தனை மணிக்கு தொடங்கி, மாலை இத்தனை மணி வரை' என்று வரையறுத்துப் போர் செய்தார்கள். இக்'காலத்துப் போர் அப்படியா? இல்லை! போர் ஆரம்பிப்பதே சூழ்ச்சி. அதிலும் தாக்குவது இரவு பன்னிரண்டு மணிக்கு! ஆம்; தூங்கும்போது தாக்குவது சுலபமல்லவா!-இப்படி இருக்கிறது இன்றையப் போர்!

''ஏதோ, போதான் இருக்கிறதாம்! தட்டி விட்டால் உலகமே சாம்பல் ஆகிவிடுமாம்! அதிலும், அமெரிக்காவிடம் தான கூடுதல் பொத்தான்கள் இருக்கிறதாம்............'' என்றெல்லாம் பேசுகிறது உலகம்.

யாரிடம் எத்தனை பொத்தான்கள் இருந்து என்ன பயன்! உலகை வாழ்விக்க யாரிடமாவது பொத்தான்கள் இருக்கிறதா? என்று கேட்டால், அது பாரதத்தில் இருக்கிறது! என்ற பதிலையே கேட்கமுடியும்.

அழிவு வேலைகளுக்குப் பொத்தான்கள் வைத்திருப்போர் தன் ஆயுளை—ஒரு வினாடி நேரத்திற்காவது கூட்டுவதற்குப் பொத்தான்கள் வைத்திருக்கிறார்களா? வைக்க முடியுமா? முடியாதே! அத்தனை சக்தி குறைந்த மனித வர்க்கத்திற்கு உலகை அழித்துவிடுவேன்! என்று கூறுவதற்கு எத்தனை ஆணவம் இருக்கவேண்டும்? ஆக்குவதற்கு இயலாது, அழிப்பதற்கு என்ன உரிமை இருக்கிறது.

ஏதோ பிறந்தோம், நல்லமுறையில் வாழ்வோம், பிறந்ததின் பயன் அடைய, பிறர் வாழ உழைப்போம்! வேளை வந்த உடன் நல்லவனாக இறப்போம் என்று எண்ணுகிறவனே மனிதன்!

அதை விட்டு, துப்பாக்கி இருக்கிறது, குண்டுகள் இருக்கின்றன. ஆகவே எத்தனை அநீதிகளும் செய்வேன், நானே பலசாலி, பிறர் மண்ணை ஆக்கிரமிப்பதே என் ஜோலி என்றெல்லாம் எண்ணி கூத்தாடுவோனை எப்படி மனித இனத்தில் சேர்ப்பது.

பாரத சுதந்திரக் குழந்தைக்குப் பதினைந்து வயதே ஆகிறது! என்றாலும் அதன் சாதனைகள் மிகப்பெரிது! அதே குழந்தைக்குத்தான் தற்பொழுது சோதனை வந்திருக்கிறது. சோதிப்பவன் வேறு யாருமல்ல; அண்டை தேசத்தான்! அன்புள்ளவன், நண்பன் என நம்பப்பட்டவன்! பிரகலாதனை இரணியன் விரோதித்ததுபோல் பாரதத்தை விரோதிக்கிறான். பாவம் விதி யாரை விட்டது?

பல்லாண்டுகளுக்கு முன், சீனாவில் பிறந்த ஓர் அறிஞன் கூறினானும்—"உலகத்திலுள்ள எல்லா மக்களிடத்தும் விசுவாசம் வைக்கவேண்டும்! ஒரு மனிதன் பட்டினியாக இருந்தால் அவனுக்குச் சோறு போடு. அவன் குளிரில் துன்பப்பட்டால் போர்வை கொடு. நோயாளியாக இருந்தால் சிகிச்சை செய். செத்துப்போனால் புதைத்துவிடு!" என்று.

ஆனால் அவன் பரம்பரையில் வந்த இன்றைய சீனா அந்த அறிஞனையே புதைத்துவிட்டது! சூஎன்லாயின்

கொள்கை என்ன? நண்பனுக்குத் துரோகம் செய்! நல்லோர்களைப் பகைத்துக்கொள். அகப்பட்டதை சுருட்டு. சொல்லுக்கும் செயலுக்கும் உறவு வேண்டாம்! ஆயுதங்களையே நம்புவோம் — என்பவைகளே!

• இத்தகைய கொள்கையால் எழுவது, எதேச்சாதிகார மனப்பான்மை! அதன் விளைவு ஆணவம்? அடுத்துப் போர் வெறி, அதன் பின் அழிவு! இதுவே சரித்திரம் காட்டும் சான்றுகள்.

"அருமறை சோரும் அறிவிலான் செய்யும்

பெருமிறை தானே தனக்கு" என்பதன்றோ பொய்யில் புலவரின் திருவாக்கு.

அத்தகைய அழிவுக்கு அடித்தளமிட்டு, நம் அன்னை நாடாம் பாரதத் திருநாட்டின்மீது காலூன்றி நிற்கும் ஆக்கிரமிப்பாளர்களான சீனு நடத்துவது ஆக்கிரமிப்புப்போர்! நாம் நடத்துவது தற்காப்புப் போர் — அறப்போர்! அறத்திற்கு வெற்றி உண்டுமெனில், பாரதம் வெற்றிபெறும். அற தேவதை வாழ விரும்பினுல், பாரதத்தை வெற்றி பெறச் செய்வாள்! அறமின்றேல் உலகில்லை! பாரதமின்றேல் அறம் இல்லை!

உள்நாட்டில் ஒரு மனிதன், பிறரிடமிருந்து ஒரு ரூபாயையோ அல்லது ஒரு அடி மண்ணையோ எடுத்துவிட்டான் என்றால், அவனுக்கு தகுந்த தண்டனை அளிக்கிறது நீதி மன்றம்! அதிலும் இம்மாதிரிக் குற்றங்களுக்குப் பொதுவுடைமை நாட்டில் கடின தண்டனையாம்! அப்படியிருக்க பொதுவுடமை நாடே, பிற நாட்டு மண்ணை ஆக்கிரமித்தால் எத்தகைய தண்டனை கொடுக்கவேண்டும்? சிறந்த அறிவாளிகளடங்கிய நீதிமன்றமாகிய உலகமே, ஆக்கிரமிப்பாளர்களுக்கு தகுந்த தண்டனை வழங்கட்டும்!

அடுத்து நம் கடமை வீரர்களின் செயல் திறங்களை — உணர்ச்சிமிகு வீர சாகசங்களைப் பார்ப்போம்.

# 35 கடமை வென்றது

தன்னந்தனியாக நின்று ஆக்கிரமிப்பாளர்களை விரட்டி அடித்ததோடு விரோதிகளில் பலரை இயமலோகம் அனுப்பியதற்காக — பாதுகாப்பிலாகாவால் பாராட்டப்பட்டான் வேணு!

சிவஞானபுரத்திலிருந்து புறப்பட்டு சென்னை வந்து சேர்ந்ததும முதல் அமைச்சரிடம். தன் கிராமத்திலிருந்து பெற்றுவந்த நகைகளை எல்லாம் கொடுத்தான்

வேணுவின் தேசசேவையைப் பாராட்டி வாழ்த்தினார் அமைச்சர் பெருமகனார்.

வாழ்த்துக்களைப் பெற்று, சென்னை நண்பர்களிடமும் விடைபெற்றுக்கொண்டு, தேஜ்பூர் வந்துசேர்ந்தான் வேணு.

ஐம்பதிற்கு மேற்பட்ட ஆக்கிரமிப்பாளர்களை முறியடித்ததற்காக வீரச்சக்கரம் பரிசு பெற்றான்.

நாட்கள் உருண்டன......! ஐநூறு பேர் கொண்ட வீரர் குழுவுக்குத் தலைவனானான் வேணு!

ஏற்கெனவே எரிந்துகொண்டிருந்த நெருப்பு, சற்று எண்ணெயையும் வாங்கிக்கொண்டால் எப்படியிருக்கும்?

வேணுவின் நிலையும் அப்படித்தான். தேசியப் பற்று கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்த அவன் மனம், பரிசு என்ற எண்ணெய்யாலும். பாராட்டு என்ற தூண்டுதலாலும் பற்றியெரியத் தொடங்கியது!

படைகளுக்கு நன்முறையில் பயிற்சி கொடுத்தான்! கடமையுணர்த்தினான்!

வேணுவுக்கு பக்கபலமாக நின்று ஆக்கிரமிப்பாளர்களுடன் போராடியதற்காக சபாபதியும் பாராட்டப் பெற்றான்.

போர்முனையில் அன்று என்றுமில்லாத பரபரப்பு......!

நேபாவில் காமெங் டிவிஷனில்—பொம்திலாவுக்குத் தெற்கே சில மைல் தூரத்திற்கு—மலைகளில்—பண்ணைகளைப் பிடித்தவர்களின் ஆக்கிரமிப்புத் தொடங்கியது. பல சீன வெறியர்களை பாரதமண்ணுக்குப் பலிகொடுத்து வீரப்போர் புரிந்துகொண்டிருந்தார்கள் பாரதத்தின் கடமைவீரர்கள்.

பொம்திலாவிலிருந்து சாலை வழியாக வந்து, மலையடிவாரப் பகுதிகளில் சீனர்கள் ஊடுருவி வருவதாகச் செய்தி கிடைத்தது.

பசியோடிருக்கும் புலியின் முன் பனங்காட்டு நரிகள் ஊளையிட்டன.

உடலைச் சிலிர்த்து, பாய்வதற்குத் தயாராகும் புலியைப் போல், தன் கீழ் உள்ள படைகளின் முன் விளங்கினான் வேலு! அவன் கண்கள் அத்தனை வீரர்களையும் ஒருமுறை நோக்கின! பார்வை அலைகள் அணிவகுத்து நிற்கும் பாரத வீரர்களுக்குத் தனி உணர்ச்சியூட்டின.

“வீரத்தின் ஊன்றுகோலாக எழுச்சிபெற்று நிற்கும் பாரத வீரர்களே! பாரதத்தின் சமதர்ம ஆட்சியை சரிப்பதற்காக, சதிவேலைகள் புரியும் ஆக்கிரமிப்பாளர்களை முறியடிக்கவேண்டிய தருணம் வந்துவிட்டது. சண்டாளர்களின் துப்பாக்கிக் குண்டுகளுக்குப் பலியாகி வீரசொர்க்கம் புகுந்த பாரத வீரர்களை மனதில் நிறுத்துங்கள். அதற்குப் பழிக்குப் பழிவாங்க உறுதிகொள்ளுங்கள், பாரதத்தின் புகழ்பெற்ற சரித்திரக் கோட்டையைத் தகர்க்க நினைக்கும் பண்புகெட்டவர்களைப் பரலோகம் அனுப்புவோம்! பாரத வீரர்கள் வீரத்தின் பாரம்பரியம், பண்பின் உறைவிடம், கடமையின் கருவூலம் என்று பறைசாற்றுகிறது உலகம். அத்தகைய பாரம்பரியத்தைக் காப்பாற்றியே தீருவோம். எதிரிகள் சூழ்ச்சிகளில் வல்லவர்கள். அதனால் மிரட்டல்களிலேயே, நம்மை பணியவைத்து விடலாம் என எண்ணுகிறார்கள். நமக்கு பக்கபலமாக எல்லாவித

தியாகங்களுக்கும் தம்மை அர்ப்பணிக்கத் தயாராக இருக்-கும் பாரத மக்கள், ஆக்கிரமிப்பாளர்களை முறியடியுங்கள் என்று ஆவலோடு ஆசிகூறி, வேண்டுகோள் விடுக்கிறார்கள்! இது நான் நேரில் கண்ட காட்சி.

நாம் நடத்துவது ஆக்கிரமிப்பு போர் அல்ல. அறப்-போர்! நம் பக்கத்தில் பாரதம் முழுவதும் எழுச்சிபெற்று துணையாக நிற்கிறது! நேசநாடுகள் எல்லாவித உதவிகளுக் கும் தயார்! என்று மார் தட்டுகிறது.

போர் முரசு கேட்டவுடன்; தன் ஒரே மகனைச் சிங்கா ரித்து, திலகமிட்டு, 'போய் வா மகனே! மாற்றானை முறி யடித்து நாட்டின் பெருமையை நிலைநாட்டு!' என்று ஆசி கூறி அனுப்பிய வீரத் தாய்மார்களைப் பெற்றெடுத்த நாடு-நம் பாரத நாடு.

அந்த மண்ணில் தோன்றியவர்கள் நாம். வீரர்களே, புறப்படுங்கள்! பாரதத்தைக் கூறுபோடநினைக்கும் குதர்க்க புத்திக்காரர்களை உடல்வேறு உயிர்வேறாகக் கூறிடுவோம். நமது இறுதிப் பெருமூச்சு, பாரதத்தின் வெற்றியைப்பறை சாற்றும்! உலகு உள்ளளவரை, பாரதம், சுதந்திர ஜனநாயக, நடுநிலை நாடாகவே விளங்கும். எது வரினும் தளராதீர்கள்! துன்பம் உறவரினும், துணிவாற்றி செய்க. பாரத சுதந்திரம் எனும் இன்பம் பயக்கும் போர்.

உயிரினும் உயர்ந்தது மானம்! வீரம் நம் செல்வம். நம் பகைவர் எண்ணிக்கையில் கூடுதலாக இருக்கலாம். என்றாலும் நமது முன்னுடி காற்றில் பறக்கும் பஞ்சினும் சிறுரேனார். அவர்களை முறியடிப்பது நமக்கு எளிதே! வீரத் தையும், கலையையும் உலகிற்கே கற்றுக்கொடுத்த நாடு பாரதம்! அச்சம் என்பது அறியாமையின் விளைவு! நாம் அறிவுடைத் திருநாட்டில் பிறந்தவர்கள்! எந்தவித எதிரி களுக்கும் நாம் அஞ்சப்போவதில்லை. நேர்மையான வாழ்வின் இலக்கணம் கடமையுணர்ச்சியே. எதிரிகளின் சமாதானப் பேச்சு, வில் வளைவதற்கு ஒப்பாகும்! வளையும் விற்களை —

கணை புறப்படுவதற்கு முன்பே, முறித்தெறிவோம்! கிளம்புங்கள்! கடல் அலையென பாய்ந்து தாக்குங்கள் வெற்றி அது ஒன்றே நம் உள்ளங்களில் ஒளி வீச வேண்டும்... ...!"

• வெந்தணல் வீசும்-வீர உரை புகன்ருன் வேணு. சபாபதியும் வேணுவின் அருகிலேயே நின்ருன்.

படை புறப்பட்டது! முன்னால் சென்ற வேணு, தன்னிடம் உள்ள படைத்தலைவர்களுக்கு படைகளைப் பிரித்துவிட வேண்டிய முறைகளையும்—தாக்கவேண்டிய நேரங்களையும் கூறிக்கொண்டு சென்ருன்.

துப்பாக்கிக் குண்டுகள் பாயும் ஒலியும் பீரங்கிகள் கர்ஜிக்கும் கொடூர முழக்கமும் செவியில் அடித்தாற்போல் அலறின!

சேர்ந்து வந்த பாரதப் படைவீரர்கள் நாலாபக்கங்களிலும் பிரிந்துசென்று முன்னேறித் தாக்கினர்கள்.

ஆயிரம், இரண்டாயிரம், மூவாயிரம் என்ற எண்ணிக்கையிலிருந்து பதினையிரக் கணக்கில் வந்து குவிந்தார்கள் ஆக்கிரமிப்பாளர்கள்.

வேணுவின் அருகில், சுமார் நூறு வீரர்கள் இருந்து எதிரியைத் தாக்கிக்கொண்டிருந்தார்கள். இங்குமங்குமாக பலத்த தாக்குதல்கள் நடைபெற்றுக்கொண்டிருந்தன. ஆக்கிரமிப்பாளர்களுக்கும், பாரத வீரர்களுக்கும் நடுவில் ஒரு பெரிய புகைக்கடலே தோன்றியது

தம்-தம் இடங்களைவிட்டு, நிலைமைக்குத் தகுந்தபடி மாறி, மாறி இருந்து தாக்கினர்கள் பாரத வீரர்கள்.

ஆக்கிரமிப்பாளர்கள் முன்னேறுவதாகத் தெரிந்தது வேணுவுக்கு. ஆகவே கடுமையாகத் தாக்கினன். அவன் இருந்த திக்குநோக்கி மட்டும் சுமார் ஆயிரம் சீனர்கள் இயந்திரத் துப்பாக்கிகளுடன் வந்துகொண்டிருந்தார்கள்! என்ருலும் மனம் தளரவில்லை வேணு. தன் பக்கம் எத்தனை

வீரர்கள் இருக்கிறார்கள் என்றுகூட திரும்பிப் பார்க்கவில்லை எதிரிகளைக் கடுமையாகத் தாக்கிக் கொன்றுகுவித்தான்.

"பாரதத்தாயே! அப்போது வேணு இருந்த நிலை, அவன் மனதில் பொங்கியெழுந்து வீறுகொண்டு பாய்ந்த வீர உணர்ச்சி, அவ்வீரனின் முகம் காட்டிய வெய்யோனின் ஒளி, அவன் கரத்திலே ஓடிய குருதியோட்டம், விரல்களில் மிளிர்ந்த துரிதவேகம், நரம்புகளினின்றும் விரிய அனல் காற்று......! அப்பப்பா.........! எல்லாவற்றையும் எப்படி வர்ணிப்பேன்! வாசகர்களுக்குத் தெரிவிப்பது எப்படி? வார்த்தைகள் கிடைக்கவில்லையே. ஆம்! ஆம் தாயே! உன் வீரப் புதல்வனின் வீரச் செயல்களை நீயே அறிவாய். உன் மடியிலிருந்து-தானே உன் மைந்தன் மாற்றானைத் தாக்கினான்? உன்-னால்தான் மற்றைய பாரதமக்களுக்கு உணர்த்தமுடியும்! ஏனென்றால் நீ உள்ளத்திலே எழுதி பதித்துவிடுவாய். ....... பிறப்பிலேயே அமைத்துவிடுவாய். ஆமாம் அப்படியே செய்! வேணுவின் வீரத்தைப் பாரத மக்களின் உள்ளங்களிலே பதித்துவிடு. எழுதிக் காட்ட என்னால் முடியவில்லை தாயே! என்னால் முடியவில்லை!"

இறந்தவர்கள்போக மிஞ்சிய எண்ணற்ற சீனர்கள் வேணுவை நெருங்கிவிட்டனர். அப்போதும் வேணு உள்ளம் தளர்ந்தானில்லை! உடல் அயர்ந்தானில்லை! சற்றே மறைந்திருந்து தாக்கினான்! தாக்கினான்; தாக்கிக்கொண்டே இருந்தான்

என்ன சோதனை! வேணுவின் துப்பாக்கியிலிருந்த குண்டுகள் எல்லாமே தீர்ந்துவிட்டன. எதிரிகளோ மிகவும் நெருங்கிவிட்டனர்.

துணிந்துவிட்டான்! துப்பாக்கியோடு பாய்ந்தான்! அதன் முன்னுள்ள கத்தியால் பல ஆக்கிரமிப்பாளர்களைக் குத்திக் கொன்றான் தன் கைத்துப்பாக்கியை எடுத்து இடதுகையாலேயே இயக்கி மேலும் சில விரோதிகளை நரகத்திற்கு அனுப்பினான். அதிலும் குண்டுகள் தீர்ந்தன.

அதே நேரத்தில்...........! பாய்ந்து வந்த சீன ஆக்கிரமிப்பாளர்களின் துப்பாக்கிக் குண்டுகள், பாரதத்தின் இணையற்ற வீரன் பொதுநலத் தொண்டன் வேணுவின் மீது பாய்ந்தன! அந்நிலையிலும், துப்பாக்கியின் பின் கட்டையால், இரு ஆக்கிரமிப்பாளர்களை மண்டையில் அறைந்து வீழ்த்தினான். அப்போது மாற்றானின் குண்டுகளில் ஒன்று அஞ்சாத சிங்கம் வீரன் வேணுவின் நெஞ்சில் பாய்ந்தது!

''பாரதமாதாவுக்கு ஜே! வாழ்க பாரதம்!'' வீரசிங்கத்தின் வீரகர்ஜனை விண்ணைப் பிளந்தது! கடமைக் காவலனின் கடைசி சொற்கள் கன்னித் தமிழகத்தின் பெருமையைப் பறைசாற்றி பார்முழுதும் பரந்தன.

சற்று தூரத்திலிருந்த சபாபதியும் மற்றைய வீரர்களும் வேணு நின்ற இடத்திற்கு ஓடிவந்து தொடர்ந்து தாக்கினார்கள்!

சபாபதி ஓடிவரும்போது, ஆக்கிரமிப்பாளர்களின் துப்பாக்கிக்குண்டுகளில் ஒன்று அவன் இடதுகாலில் முட்டுக்கு மேல் பாய்ந்தது! அந்த இடத்திலிருந்து குருதி கொப்பளித்துப்பாய்ந்தோட ஒற்றைக் காலிலேயே நின்று தாக்கினான்.

அதே வேளையில் சீனர்களின் மீது, கனத்த பீரங்கிக் குண்டுகள் மழையாகப் பொழியத்தொடங்கின. ஆம்! பாரதப்படைகள் பெருமளவுக்குவந்து பாய்ந்து தாக்கினார்கள்.

வெறிபிடித்த சீனர்கள் சமாளிக்கமுடியாமல், சோர் வைப்பட்டாசுகளைப்போல் சிதறி ஓடினர்.

வேணுவின் தலையைத் தூக்கி மடியில்கிடத்தினான் சபாபதி.

வேணு, உன் வீரச்செயல்கள் உலகமுழுவதும் கடித்துக் காட்டப்படவேண்டியவை!' தன் கால் முறிந்துதொங்கியதையும் பொருட்படுத்தாமல் பாராட்டினான் சபாபதி!